உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சூதசங்கிதை.



இஃது

வல்லூர் தேவராஜபிள்ளை அவர்களால்

பாடப்பட்டு,

திரிசிரபுரம் வித்வான்

மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள்

பார்வையின்பேரில் அச்சிடப்பட்ட

பிரதிக்கிணங்க,



சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

[2-வது பதிப்பு.]



மன்மத௵ பங்குனிமீ.

உ

# சிறப்புப்பாயிரம்.

ம-ள-ள-ஸ்ரீ திரிசிரபுரம் வித்வான்
மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை யவர்களா லியற்றிய

(நேரிசையாசிரியப்பா.)

மலர்தலையுலகின்மாணெழின்மாதர்க்
குற்றிடுபுலவியுணர்த்திடுமைந்தர்
மாலையிற்குழ்தலுங்காலையினிமிர்தலுங்
கொண்டதுபொருவவிண்டுகள்யாவும்
பணிபடுமிரவிற்பாருறத்தாழ்ந்தும்
வெயில்படுபகலில்விண்ணுறநிமிர்ந்து
மேவுதல்கண்டவோவருமிறவுளர்
செருமுகத்தெதிரும்பொருவருநங்கைக்
குறவனைதனுவுமோங்கிருங்கழையு
மாவான்பயிலுமிதழகிதென்றுவக்கு
நந்தியம்பொருப்பினந்தினின்றிழிந்த
பாலியம்புனல்பாய்பண்ணைவாய்ந்தும்
புகழ்தருமறைமுதற்பூமென்றுடைய
மறைகுடியிருந்தவாயவன்றுடையுஞ்
செவ்வான்முளைத்தசிறுமதிக்கொழுந்து
மொருகாண்மிசைமுக்கிளைவிடுதன்போற்
காம்பொடுபொலியுங்கூவிளந்தளிருந்
தன்னமுதடைத்ததானுபல்லரவு
மாடகப்பெயர்க்கணவனினுங்கொடிதாய்ப்
புலிபிலம்புகுதப்போர்த்தவான்புனலும்
வெண்ணிறவளைகொள்கருநிறக்கடலி
னுந்தியந்தாமரைநந்தியவன்ன
மின்னமுமுணராமின்னகுசடையிற்
செறிதரவைத்தவறிவுருவமலன்
முழுதுலகீன்றவெழுதரும்வடிவக்
கருங்குழற்செவ்வாய்வெண்ணகைக்கன்னியோ
டறைபுகழ்க்காஞ்சிமுனைவருமிடங்கொண்
டுறைதரப்பொலியுமுறுதவம்வாய்ந்துஞ்
சொல்லருஞ்சீர்சேர்தொண்டைநன்னாட்டிற்

வானளவுயா

சுடர்பொற்கைபிடிசுவாகு

பளிங்குபடுத்தவளங்கெழுவெளியை, நெடுவரை[illegible] நிலையென்று,மவ்விடமேயகொவ்வையங்கனிவாய்த், துடியிடைமாதர் துறுகொடியென்று, மவர்திருமுகமுதலவிரவயவங்க, ளைன்மணங்கமழும்பன்மலரென்று, மும்பர்களுள்ளத்துன்னுபுகொய்தென, வுயிர் நிகர்மடவார்க்குதவிமகிழுறுப்பா, னாவயின்மேவியன்மையின்வெள்கி, மேவுதல்கண்டவோவருமடவா, ரென்னுளத்தெண்ணினிரெவ்விடத் துற்றனி, ரெத்தொழிலியற்றினிரினிது துய்த்தனிர்கொல், புரிதகவி ல்லீர்போமெனச்சினப்ப, வடிக்கடிமலர்மிசையடிக்கடிவீழ்ந்து, நய னுரைகிளப்பவந்நகுபூண்மடவார், சிலம்பொலியெழுப்பச்செஞ்செவி புதைத்தப், பளிக்குநிலைநின்றபாவையர்களிக்கும், வளமலிசீர்சால் வல்லூரதிபன், சீர்கருணீகர்செழுங்குலசிகாமணி, தண்ணளிவீராச் சாமிமால்புதல்வன், சைவசித்தாந்தமெய்நெறித்தலைவன், புண்ணிய நாளும்போற்றிவளர்ப்போன், குறிப்பறிந்தியாவுங்கொடுத்திடுமிவ ற்கு, வாய்விண்டறைந்தபின்வழங்கிடுந்தருவோ, பொருவெனயாரு ம்புகழ்ந்திடப்பொலிவோ,னற்குணநற்றவமொற்கமின்றமைந்தோன் றேவராசச்செம்மலென்பான், றொல்காப்பியமுந்தொல்காப்பியங்க ளும், பதிபசுபாசப்பகுப்புணர்நூலும், பற்பலவாயபரமதநூலு, மேதி னிவிரும்புஞ்சோதிடநூலு, மற்றுளகலையுமயக்கறவுணர்ந்து,மிகுவட மொழியுளும்வேண்டுவதெரிந்து,பெயராவறிவிற்பெரியோனாகிப், பயி ன்றதற்கேற்றபயன்கடைப்பிடித்து,வாதராயணமாதவமுனிவன்,மே தகுசூதமாதவற்கோதிய, புராணமூவாறுட்புராதனன்புராணம், பத் துளுஞ்சிறந்தவுத்தமக்காந்தத்,தாறுசங்கிதையுளுமொரும்பொருணிறை ந்த, வோதரும்புகழ்சால்சூதசங்கிதையை, வண்மொழிபெயர்த்துத் தண்மொழியமைந்த, செந்தமிழ்ப்புலவர்செவிக்கமுதாகவு, மெய்ஞ் ஞானியர்கள்வியந்துகொண்டாடவு, மிதமலிதமிழாவியற்றினனாக, வன்னமெய்த்தவத்தோன்பின்னர்வந்துதித்து,நலஞ்சாலறிவுங்குலஞ் சால்சிறப்பு,மாணவிழுப்பமுமாணொழுக்கமு,மொருவருங்கொடை யும்பொருவருந்திருவு, மேன்மேலமைந்தமெய்ப்புகழ்ச்செல்வர், வர தராசமாதவமுகிலுங், கோவிந்தராசகுணப்பெருநிதியு, மிருவருமுன் னோனருமையிற்செய்த, சுவைபலதருமச்சூதசங்கிதையி, னுற்றபல் சிறப்புமுற்றவுணர்ந்து, பொருதிரைக்கடல்சூழ்புவியிற், பரவிடவச் சுப்பதிப்பித்தனரே.

உ

சிவமயம்.

# சூதசங்கிதைப் புராணத்தின் அத்தியாய வகராதி.

| பக்கம். | அத்தியாய வகராதி. | பாடற்றொகை. |
|---|---|---|
| | அ. | |
| நஉ | அடியார் பூசாவிதியு மவரைப் போற்றினோர் பேறு முரைத்த வத்தியாயம் ... ... | சகூ |
| உசகூ | அநித்தியவத்து விசாரமுரைத்த வத்தியாயம் ... | ச0 |
| | ஆ. | |
| கஉக | ஆசனவிதி யுரைத்த வத்தியாயம் ... ... | கக |
| உஉஉ | ஆன்ம மந்திர முரைத்த வத்தியாயம் ... ... | உந |
| நஎஎ | ஆன்மவநான்ம விவேக முரைத்தவத்தியாயம் ... | உரு |
| | இ. | |
| ககஎ | இயமமுறை யுரைத்த வத்தியாயம் ... ... | கரு |
| ருக | இரணியகருப்ப சிருட்டியுரைத்த வத்தியாயம் ... | உஉ |
| உருகூ | இன்பமுத்தி சாதன விசார முரைத்த வத்தியாயம் | கக |
| | உ. | |
| நருசா | உடத்தப்பிராமண தாற்பரியமுரைத்தவத்தியாயம் | கசா |
| நகஅ | உணத்தகாப் பொருளுரைத்த வத்தியாயம் ... | உ0 |
| உகூசா | உயிர்கண் முத்தி புகுவதற் கேதுவுரைத்த வத்தியாயம் ... ... ... ... | கக |
| | ஐ. | |
| நநஉ | ஐதரேயக வுபநிடத தாற்பரிய முரைத்த வத்தியாயம் ... ... ... ... | உக |
| | க. | |
| நருஅ | கடவல்லியோடு சுவேதாச் சுவதர முரைத்த வத்தியாயம் .. ... ... ... | உந |
| உக0 | கருமயாகத்திற் காயிகமக முரைத்த வத்தியாயம்... | கச |
| கூஉ | கழுவாயுரைத்த வத்தியாயம் ... ... | நரு |
| ந0எ | கழுவாயுரைத்த வத்தியாயம் ... ... ... | உசா |

| பக்கம். | அத்தியாய வகராதி. | பாடற்றொகை. |
|---|---|---|
| ௩௧௦ | சிவத்தலத்தினை யெய்து மங்கிருக்கும் பரனையடை பெயருமுரைத்த வத்தியாயம் ... ... | ௫௦ |
| ௨௭௯ | சிவத்தல விசாரமுரைத்த வத்தியாயம் ... ... | ௪௦ |
| ௨௭௨ | சிவபக்தி விசாரமுரைத்த வத்தியாயம் ... ... | ௨௩ |
| ௨௩ | சிவபூஜாவிதியுஞ் செய்தார் பெருமையு முரைத்த வத்தியாயம் ... ... | ௫௭ |
| ௨௬௭ | சிவப்பிரசாதத்தாற் சத்தியசந்தன் முத்தி சார்ந்த கதையுரைத்த வத்தியாயம் ... ... | ௨௧ |
| ௨௬௯ | சிவப்பிரசாதத்தாற் றுர்க்கடன் முத்திபுகுந்த வத்தியாயம் ... ... ... ... ... | ௧௫ |
| ௨௮௬ | சிவப்பிரீதிகர முரைத்த வத்தியாயம் ... ... | ௧௮ |
| ௨௭௭ | சிவலிங்க விசாரமுரைத்த வத்தியாயம் ... ... | ௧௩ |
| | **சூ.** | |
| ௩௬௬ | சூதர்சூதகீதையை யுரைக்க வியாசரனுஞைபெற்ற வத்தியாயம் ... ... ... ... | ௧௦ |
| ௪௩௯ | சூதர் மேருவை யடைந்த வத்தியாயம் ... ... | ௨௮ |
| ௨௦௦ | சூத னிக்காண்டத்தை யாரம்பிக்கக் கடவுளரைத் துதித்த வத்தியாயம்... ... ... | ௧௭ |
| | **ஞா.** | |
| ௨௩௫ | ஞானமுறுதற் கேதுவகுத்த வத்தியாயம் ... | ௯ |
| ௨௩௦ | ஞானயாக வைபவ முரைத்த வத்தியாயம் ... | ௩௫ |
| ௭௨ | ஞானயோகத்தை யுணர்ந்தவா றுரைத்த வத்தியாயம் ... ... ... ... | ௬௨ |
| ௧௬௬ | ஞானி பணிவிடைப்பேறு சொற்ற வத்தியாயம்... | ௧௩௩ |
| ௧௬௨ | ஞானோற்பத்தி யில்லாமைக் கேது நவின்ற வத்தியாயம் ... ... ... ... | ௩௧ |
| | **தா.** | |
| ௧௨௯ | தாரணை விதியுரைத்த வத்தியாயம் ... ... | ௧௨ |
| ௯௭ | தானபலமுரைத்த வத்தியாயம் ... ... ... | ௫௦ |
| | **தி.** | |
| ௧௩௧ | தியானவிதி யுரைத்த வத்தியாயம் ... ... | ௨௫ |
| ௩௧௬ | திரவியசுத்தி யுரைத்த வத்தியாயம் ... ... | ௨௦ |
| ௧௯ | திருமாலகம் பாவ நீங்கி யானந்த நடந் தரிசித்த வத்தியாயம் ... ... ... ... | ௩௬ |
| ௧௪ | திருமான் முதலிய தேவர்களுலகிற்கு முதல்வனை யுணர்ந்த வத்தியாயம் ... ... | ௩௬ |

| பக்கம். | அத்தியாய வகராதி. | பாடற்றொகை. |
|---|---|---|
| | **பி.** | |
| நஉச | பிரகதாரணியக தாற்பரிய முரைத்த வத்தியாயம் ... | கஉ |
| உசுந | பிரசாதக்கிரம முரைத்த வத்தியாயம் ... ... | நஉ |
| உகரு | பிரணவத்தின்பெருமை யுரைத்த வத்தியாயம் ... | கரு |
| கஉஅ | பிரத்தியாகாரவிதி யுரைத்த வத்தியாயம் ... | அ |
| உநஎ | பிரபஞ்ச வாரோப முரைத்த வத்தியாயம் ... | கூ |
| அஉ | பிரமசரியவிதி யுரைத்த வத்தியாயம் ... ... | கரு |
| சஅ | பிரமசிருட்டி யுரைத்த வத்தியாயம் ... ... | உரு |
| கஅஉ | பிரமன்முன்னோர் தில்லையிலேற்று ஞானம்பெற்ற வத்தியாயம் ... ... ... | கூஅ |
| கஉந | பிராணாயாமவிதியுரைத்த வத்தியாயம் ... ... | நஅ |
| உசுக | பிராமாணிய விசாரமுரைத்த வத்தியாயம் ... | கந |
| | **பு.** | |
| அ | புராணவரலாற் றத்தியாயம் ... ... ... | சஎ |
| | **ம.** | |
| நஉக | மரணக்குறியுரைத்த வத்தியாயம் ... ... | சச |
| | **மா.** | |
| உஉஅ | மானதயாக முரைத்த வத்தியாயம் ... ... | கஅ |
| | **மு.** | |
| நரு0 | முண்டகோபநிடத தாற்பரியமுரைத்தவத்தியாயம் | உஉ |
| கசஉ | முத்தி நிலையுரைத்த வத்தியாயம் ... ... | நரு |
| கசஎ | முத்தியுறு முபாய முரைத்த வத்தியாயம் ... | சு0 |
| | **மோ.** | |
| உசச | மோக்க விச்சை யுடையா ரிருக்கு மியல் புரைத்த வத்தியாயம் ... ... ... ... | கஎ |
| கருகூ | மோசகப்பிரதன மியல்புரைத்த வத்தியாயம் ... | உரு |
| கருச | மோசகனை யுரைத்த வத்தியாயம் ... ... | ச0 |
| | **வ.** | |
| சசு | வராகம் பாதலத் தழுந்திய பாரை யெடுத்த வத்தியாயம் ... ... ... | கக |
| அ0 | வருணச்சிரம நிலையோர் மேன்மை யுரைத்த வத்தியாயம் ... ... ... ... | கரு |

ஆ அத்தியாயம் ௪௦௯-க்கு பாயிர முட்பட
திருவிருத்தம் ௩௦௦௩.

சூதசங்கிதைப் புராணத்தி னத்தியாய வகராதி
முற்றிற்று.

| பக்கம். | காண்டங்கள் பூருவபாக முத்தரபாகங்கிதைகளிவற்றின் பெயர்கள். | அத்தியாயத் தொகை | பாடற்றொகை |
|---|---|---|---|
| ௧ | சிவமான்மியகாண்டம் பாயிரமுட்பட ... | ௧௩ | ௫௬௫ |
| ௭௨ | ஞானயோக காண்டம் ... ... ... | ௨௦ | ௫௦௯ |
| ௧௩௯ | முத்திகாண்டம் ... ... ... ... | ௯ | ௫௦௧ |
| ௨௦௦ | எக்கியவைபவகாண்டம் பூருவபாகம் ... | ௪௭ | ௧௦௦௨ |
| ௩௩௧ | எக்கியவைபவகாண்டத்தி னுத்தர பாகத்திற் பிரமகீதை ... ... ... | ௧௨ | ௨௯௬ |
| ௩௬௬ | எக்கியவைபவகாண்டத்தி னுத்தர பாகத்திற் சூதகீதை ... ... ... | ௮ | ௧௮௨ |
| | ஆ | ௧௦௯ | ௩௦௦௩ |

சிவமயம்.

# சூதசங்கிதை.

முதலாவது

# சிவமான்மியகாண்டம்.

## பாயிரம்.

### விநாயகர்துதி.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பாமேவுந்தொழிலும்பல்லனைத்தந்தையுளமகிழ்ச்சிபூப்பப், பூமேவுதிறத்தவனைப் பொறிமேவுதிறத்தவனைப்புழைக்கையூடு, தூமேவுகடலாடு நாளொடுக்கி மீட்டும்வெளித் தோற்றிக்காத்த, தேமேவுகடுக்கைமுடிக்குஞ்சரப்பொற் செஞ்சரணஞ்சென்னி சேர்ப்பாம்.

### பரசிவம்.

பொன்பூத்தபரிதிகொழுங் கதிரினிருளிரித்துலகப் பொருளினேடு, கொன்பூத்ததனையும்விழிக்குணர்த்தி மகிழுறுத்தலெனக்குல வண்மாசு, மின்பூத்தவருளினிரித்தறிவுயிரொத்தனையுணர்த்தி விளக்க மெய்த்துச், தென்பூத்தவின்பமகிழ் வுறுக்குமொரு பரஞ்சுடரைச் சேர்ந்துவாழ்வாம். (க)

### பரை.

பரம்பொருளிற் பிரியாத தன்னியல்பையுருவிடத்தும் பயிலத் தோற்றி, நிரம்புறுமன்படைப்பாதி யைந்தொழிலுமியற்றிவினை நிகளஞ்சித்திட், டிரம்பெறுசன்மார்க்கநிலையளித்துயிர்கட் கொழிப்பில் சுகமுறுத்தநாளும், வரம்பிலருட்டாயாகி யெடுத்தணைக்கும் பராப ரையை வாழ்த்திவாழ்வாம். (உ)

### சபாநாயகர்.

பூமலிமென்கடுக்கை யணியொடுபணியும் பிறையொடுதண்புனலுந்தோளி, லேமமுடியினில் வடிவொற்றுமைநோக்கியியைந்தாட விமையோர்போற்றத், தூமறைகள்வாழ்த்தெடுப்பத்துடிமுதலவைத்திடத்தைந்தொழிலுந்தோன்றக், காமருபொன்மன்றி லனவரதநட கவில்வானைக்கருத்துள்வைப்பாம். (ங)

| பக்கம். | அத்தியாய வகராதி. | பாடற்றொகை |
|---|---|---|
| | **வா.** | |
| உகஉ | வாசக யாக முரைத்த வத்தியாயம் ... ... | உரு |
| அஎ | வானப்பிரத்த விதியுரைத்த வத்தியாயம் ... | கரு |
| | **வி.** | |
| உருகூ | விசிட்டதரும விசாரமுரைத்த வத்தியாயம் ... | உஉ |
| ஙஎரு | விசேட சிருட்டி யுரைத்த வத்தியாயம் ... | ககூ |
| ஙஅ | விமலன் வாதராயணன் முதலோர் சங்கை தீர்த்த வத்தியாயம் ... ... ... ... | சாங |
| உசஎ | விராக விசார முரைத்த வத்தியாயம் ... ... | கஅ |
| | **வே.** | |
| ஙஎக | வேதப்பிராமாணியவிசாரமுரைத்த வத்தியாயம்... | உகூ |
| உOங | வேதார்த்தத்தை யுரைத்த வத்தியாயம் ... | கூO |
| ஙOO | வேதாவிரோதமுரைத்த வத்தியாயம் ... | ஙO |

**ஆக அத்தியாயம் கOகூ-க்கு பாயிர முட்பட திருவிருத்தம் ஙOOங.**

சூதசங்கிதைப் புராணத்தி னத்தியாய வகராதி முற்றிற்று.

| பக்கம். | காண்டங்கள் பூருவபாக முத்தரபாகங்கீதைக ளிவற்றின் பெயர்கள். | அத்தியாயத் தொகை | பாடற்றொகை |
|---|---|---|---|
| க | சிவமான்மியகாண்டம் பாயிரமுட்பட ... | கங | ருசாரு |
| எஉ | ஞானயோக காண்டம் ... ... ... | உO | ருOகூ |
| கஙகூ | முத்திகாண்டம் ... ... ... ... | கூ | ருOக |
| உOO | எக்கியவைபவகாண்டம் பூருவபாகம் ... | சஎ | கOOஉ |
| ஙஙக | எக்கியவைபவகாண்டத்தி னுத்தர பாகத் திற் பிரமகீதை ... ... ... | கஉ | உகூசா |
| ஙசாசா | எக்கியவைபவகாண்டத்தி னுத்தர பாகத் திற் சூதகீதை ... ... ... | அ | கஅஉ |
| | ஆக | கOகூ | ஙOOங |

உ

சிவமயம்.

# சூதசங்கிதை.

முதலாவது

## சிவமான்மியகாண்டம்.

---

### பாயிரம்.

#### விநாயகர்துதி.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மாமேவுநந்தொழிலும்வல்லனெனத்தந்தையுளமகிழ்ச்சிபூப்பப், பூமேவுநிறத்தவனைப் பொறிமேவுநிறத்தவனைப்புழைக்கையூடு, தூமேவுகடலாடு நாளொடுக்கி மீட்டும்வெளித் தோற்றிக்காத்த, தேமேவுகடுக்கைமுடிக்குஞ்சரப்பொற் செஞ்சரணஞ்சென்னி சேர்ப்பாம்.

#### பரசிவம்.

பொன்பூத்தபரிதிகொழுங் கதிரினிருளிரித்துலகப் பொருளினோடு, கொன்பூத்தனையும்விழிக்குணர்த்தி மகிழுறுத்தலெனக்குலவுண்மாசு, மின்பூத்தவருளினிரித்தறிவுபிணைத்தனையுணர்த்தி விளக்கமெய்த்துத்; தென்பூத்தவின்பமகிழ் வுறுக்குமொரு பரஞ்சுடரைச் சேர்ந்துவாழ்வாம்.
(௧)

#### பரை.

பரம்பொருளிற் பிரியாத தன்னியல்பையுருவிடத்தும் பயிலத்தோற்றி, நிரம்புறுமன்படைப்பாதி யைந்தொழிலுமியற்றிவினை நிகளஞ்சிந்திட், டுரம்பெறுசன்மார்க்கநிலையளித்துயிர்கட் கொழிப்பில்சுகமுறுத்தநாளும், வரம்பிலருட்டாயாகி யெடுத்தணைக்கும் பராபரையை வாழ்த்திவாழ்வாம்.
(௨)

#### சபாநாயகர்.

பூமலிமென்கடுக்கை யணியொடுபணியும் பிறையொடுதண்புனலுந்தோளி, லேமமுடியினில் வடிவொற்றுமைநோக்கியியைந்தாடவிமையோர்போற்றத், தூமறைகள்வாழ்த்தெடுப்பத்துடிமுதலவைக்கிடத்தைந்தொழிலுந்தோன்றக், காமருபொன்மன்றி லனவரதநடநவில்வானைக்கருத்துள்வைப்பாம்.
(௩)

## சிவகாமசுந்தரி.

மாலாதியெண்ணில்பலவுயிர்ச்சேய்களிடத்துநனிவளராநிற்குந்
தோலாதபெருங்கருணைசுரப்பவிரணியமன்றுட்சுடர்ந்தெந்நாளு
மேலாயவானந்தத்திருநடனங்காணுமொருவிரதம்பூண்ட
சேலாருங்கருநெடுங்கட்சிவகாமசுந்தரிதாள்சென்னிசேர்ப்பாம். (௪)

## தட்சணாமூர்த்தி.

பகரரியதன்றொழிலுமேலானவருட்சத்திபதிவுமென்றுந், நகரரியநித்தியமு முயிர்கடிருவடிநீழற்சையோகத்தாம், புகரரியவுண்மையுஞ்செங்கைம்மலர்க்காட்சியிற்றெரித்துப் போதம்பூப்ப, நிகரரியகல்லாலின்புடையமர்ந்தமாமணியைநினைந்துவாழ்வாம். (௫)

## விநாயகர்.

நுதிக்கோடுமுகங்கொடமரொருங்கோடச் சுரரடர்க்கு நுழில்யானை, மதிக்கோடுதலைக்கழித்தவசிக்கோடுகரத்தேற்று வழுத்துந் தொண்டர், துதிக்கோடுபெருள்சுரந்துபவக்கோடுகடலழுந்தித் துனையாதின்பக், கதிக்கோடுகளித்திவரத்திருகோட்டு மொருகோட்டுக் களிற்றையுள்வாம். (௬)

## முருகர்.

அறிவுருவத்தனக்குறையுளுருவெடுத்தொள்ளறிஞருக் கூறுற்றனோக்கி, முறியவடர்த்தெறிதல் பொரவொருகுருகுப்பெயர்க்குன்றைமுனிவிருதை, நறியகுலப்புகழ்க்கிழுக்குவிளைப்பதென்றுட்சினத்திருந்தாமவொண்கூர், செறியிலைவேல்கொடுதடிந்தசேயிலைப்பூண் மார்பவிறற்சேய்தாள்போற்றி. (௭)

## நந்திதேவர்.

(மேற்படிவேறு.)

மின்னடித்திடுமாமோலிவிரிஞ்சன்மான்முதல்விண்ணோருக்
கன்னடித்திடுகண்டத்தோனங்கயிலையிற்றனின்பந்
துன்னடியருளுமுன்னர்ச்சுஃறெலிச்சூரலோச்சித்
தன்னடியருளும்வள்ளறமையடியுள்வைப்பாம். (௮)

## திருஞானசம்பந்தர்.

(மேற்படிவேறு.)

காழிநெடுவரையுதித்துக்கருதரியசிவஞானக்கதிர்கள்வீசி, வாழிபரம்பொருட்டுருவனருட்கயிற்றிற்பிணிப்புண்டுவளரஞ்ஞானப், பாழிமிகுபொய்ச்சமணக் குருட்டிருள்கெட்டுடைந்தோடப்பாற்றிநீற்றன், பாழியதாமரைமலர்த்திவிளங்கிய நல்விளங்கதிரை யகத்துள் வைப்பாம். (௯)

## திருநாவுக்கரையர்.

பரசிவமென்றடியவரைப்பகருமறைகளிதுங்கப்பலரும் போற்றப், பிரசநறுங்கடுக்கைமுடியப்பரன்போல்விடநுகர்ந்து பெயராச்

சீற்றப், புரசைநெடுங்களிற்றினைவென்றெழுவிடைவென்முழுவிடை சூல்பொலியக்கொண்ட, வரசுதிருப்பாதமலர்பரசுபுமெய்ப்போதமூ றிஇயமைந்துவாழ்வாம். (௰)

## சுந்தரமூர்த்தி.

மனைப்பாடியுறியனையுண்டவன்முதல்வானவர்க்கரியான் மாணபொற்பாதம், வினைப்பாடிகலின்றேர்க்கெத்திறத்துமெளியதெனல்விளக்கல்போற்றேன், சினைப்பாடிமிருங்குழலில்வயினிருகாற்றூதேகித்திருமவனுன், றனைப்பாடிப்பணிகொண்டமுனைப்பாடிநாவலவன்சரணஞ்சார்வாம். (௰க)

## மாணிக்கவாசகர்.

மருவாதநரித்திரள்கள்பொருவாதபரித்திரளாய்மருவமீட்டுந்
துருவாதநரித்திரளாய்க்கழிதரவெவ்வுயிர்க்குமடிச்சுவடுமேவப்
பெருவாதமியற்றினர்மூகையராசமூகைகனிபேசவம்மா
ணொருவாதவருள்பெற்றதிருவாதவூரரடியுள்ளத்துள்வாம். (௰உ)

## தண்டீசர்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

அண்டர்கள் புகழப்பசுக்குழாமோம்பியவிர்தராச்சிற்றின்பமடைந்த வண்டலர்துளவத்தொடைதுயனிறத்து மாயவனணியநிற்ப,வண்டர்கள்புகழப் பசுக்குழாமோம்பி யவிர்தருபேரின்பமடைந்த, வண்டலம் புகழுஞ்சேய்ஞலூர்ப்பிள்ளை மலரடிமுடிமிசைவைப்பாம். (௰௩)

## அறுபத்துமூவர்.

மெல்வினைஞான்ம்வல்வினைஞான மிளிர்தரவுடையவராகி, நல்வினையாயசரியைமுன்னான்கு நன்குறப்பயின்றுசாத்தியராய்த்,தொல்வினைத்தொடர்பாற்பிறப்பிறப்பென்னுந் துரிசுறுகோடையினீங்கி, யல்வினையடையானடிநிழலடைந்தவறுபத்துமூவர்தாள்போற்றி.

## மெய்கண்டதேவர்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஓவிலொளிதழைகயிலைநந்திபிரா னவின்றருளு முண்மைநூலை, நாவினிதுறத்தமிழின் மொழிபெயர்த்தவாசிரிய னறும்பூச்செற்ற, மாவிளங்குயில்கூவமயிலாலும்பொழில்வெண்ணெய் வந்தவள்ள, லுவில்புகழ்மெய்கண்டதேவனருட்சந்தானந்தழைகமாதோ. (௰௪)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

மறிதிரைக்கடல்சூழுலகிடையரிதிம் மானிடப்பிறப்பெனவறிந்துங், குறிபெருமலநெறந்துகையினைப்பார் குழாத்தினைமறைந்துநண்ணற்க, செறிதருமுறையிற்சென்றுவேதாந்தத்தெளிவெனுஞ் சைவசித்தாந்த, நெறியினையடைந்தோர்குழாத்தினைப்பிரியாநிலையுறக்கடவதென்னெஞ்சம். (௰௫)

## திருவணக்கம்.

### (அறுசீரடியாசிரியவிருத்தம்.)

சீராருஞ்சோணாட்டிற்றிரிசிராமலையதனிற்றிகழ்வேளாள, ரேராருங்குலாம் புதியவிந்துவெனவெழுந்தசிதம்பரவேளீன்ற, பேராருமீனாட்சிசுந்தரநாவலவனணிபிறங்கும்பாத, நீராருமம்புயத்தை முப்போதுந்தப்பாதுநினைந்துவாழ்வாம். (௰எ)

பொன்னேங்கும்பெரதவிளைடநவிற்றுபரசிவன்பாதப் பூவினுக்கே, கொன்னேங்கும் பவமகலவழிபாடுசெயுநல்லோன்கோதிலாத, தென்னேங்கு தமிழ்க்கலைகளையமறச்சிறியேற்குஞ் செப்பியாண்டோன், மின்னேங்கு மீனாட்சிசுந்தரவேண் மெல்லடியைவிரும்பி வாழ்வாம். (௰அ)

பறந்தவினையுடையர்திருப்பூதிசாதனத்தமைந்தபல்லோர்நன்கு, பிறந்தபயனிப்பிறப்பின்கண்ணேபெற்றிடலாகும்பெற்றியுள்ள, சிறந்தபுகழ்க்காந்தத்திற் றிகழ்சூதசங்கிதையைத்திறம்பாவண்ண, முறந்தமொழிபெயர்த்தினிய தென்சொல் யாப்பாலறை கென்றுரைக்கமாதோ. (௰௯)

### (மேற்படிவேறு.)

மேதகுகல்விசான்றவியாதமாமுனிமாணாக்கன்
கோதறுதவத்தின்மிக்கான்குழமதிசடையிற்சூடு
நாதனுக்கினியசூதனைமிசாரணியஞ்சார்ந்து
மாதவர்க்கிரும்புராணவரலாறுசொற்றவாறும். (உ௰)

கன்னியந்துளவமாயன்முதலியகடவுளார்கண்
முன்னுபலண்டங்கட்குமுதல்வனையுணர்ந்தவாறு
மன்னிகர்நிறத்தம்மாயனகம்பாவநீங்கநோற்றுத்
தன்னிகரிலான்செயின்பாடந்தரிசித்தவாறும். (உக)

மறைபுகழ்சைவபூசாவிதியுமற்றதுசெய்வோர்த
நிறைபுகழ்வீறுந்தேறநிகழ்த்தியவாறும்வேற்க
ணறைமலர்க்கூந்தற்செவ்வாய்நற்பராபரையடிக்கண்
மிறையறச்செய்யும்பூசாவிதியினையுரைத்தவாறும். (உஉ)

அடியவர்க்காற்றும்பூசாவிதியுமற்றவரைப்போற்றும்
படியிலாரடையும்பேறும்பளகறப்பகர்ந்தவாறும்
வடிவநாண்மதியஞ்சூடிவாதராயணன்முன்னோர்கள்
கடிதராச்சங்கைதீரக்கட்டுரைத்திட்டவாறும். (உ௩)

ஆதரம்பயப்பக்காலவளவையாங்குரைத்தவாறும்
பாதலத்தழுந்துபாரைப்பன்றிசென்றெடுத்தவாறு
மேதகுபிரமனூற்றுசிருட்டியைவிரித்தவாறு
மோதிரணியகருப்பசிருட்டிநன்குரைத்தவாறும். (உச)

சாதியின்வரலாறியாவுந்தட்டறவுரைத்தவாறு
மாதிரத்திலகுந்தீர்த்தமான்மியம்பகர்ந்தவாறு
மாதியங்கயிலைப்பொங்கரடைந்தருந்தவர்க்கச்சூத
ஞேதியஞானயோகமுணர்ந்தவாறுரைத்தவாறும். (௨௫)

(மேற்படிவேறு.)

மதிவருஞாச்சிரமநிலையோர்மேன்மைதனையுரைத்தவாறுநல்லோர்
துதிபிரமசரியவிதியுங்கிரகாச்சிரமநிலைத் தூயோர்க்கான
விதியும்வானப்பிரத்தவிதியும்யர்சந்நியாச்விதியுமுள்ளம்
பதிகழுவாயுந்தானபலனுமிவைதனித்தனியேபகர்ந்தவாறும். (௨௬)

மருவுபாவக்கருமபலந்தேயோற்பத்திமுறைமதிக்குநாடி
யொருவருசக்கரநிலைநன்னாடிசுத்தியட்டாங்கயோகமாகும்
பெருகியமநியமமாசனம்பிராணாயாமம்பிரத்தியாகாரம்
பொருவிறுதாரணைதியானஞ்சமாதியிவைதனித்தனியேபுகன்றவாறும்.

மேருமால்வரையையுயர்சூதமுனியடைந்ததுவும் விரும்பியுள்ளத், தோருமாதவர்தெளியமுத்திநிலையுரைத்ததுவுமுவக்குமுத்தி, சாருமாறுபாயமுரைத் ததுவுமோசகன்றன்மை சாற்றுமாறுந், தேருமாப்புகழ்மிகுத்தமோசகப்பிரதன்றன்மைதெரித்தவாறும். (௨௮)

மேவியஞானோற்பத்தியிலாமைக்குக் காரணம்விண் டுரைத்தவாறும், பாவியமெய்ஞ்ஞானிபணிவிடைசெய்தோர்பெறும்பேறுபகர்ந்தவாறும், பூவியனான்முகன் முதலோர்தில்லையடைந் துயர்ஞானம் புணர்ந்தவாறுங், காவிநிகர்கண்டத்தானடங்காண்டற்குபாயமன்பிற் கரைந்தவாறும். (௨௯)

காதமணங்கமழுமுகைவிள்ளுநைமிசவனத்தைக்கலந்துமீட்டுஞ்
சூதமுனிவரன்யாகவைபவஞ்சொல்வதற்கன்பிற்றுதித்தவாறும்
போதமிகவேதார்த்தமுரைத்ததுவும்புகல்கருமப்புணர்யாகத்தி
லாதரவுமிகத்தோன்றுங்காயிகயாகம்புகன்றவடைவுமாதோ. (௩0)

வாசிகயாகத்திறனும்பிரணவமாமந்திரமான்மியநற்சீரு
மாசிரிகாயத்திரிமந்திரவீறுமொளிராண்மமனுவின்வீறுந்
தேசிரியாவைந்தெழுத்தின்சிறப்புமானதயாகச்சிறப்புநல்லோர்
பேசியபேரானந்தஞானமகவைபவமும்பிறக்குமாறும். (௩௧)

பதிஞானமடைதற்குக்காரணமும்பவஞ்சவாரோபமுஞ்சீர்க்
கதிமேவுபரவிசாரமும்பஞ்சப்பிரமவிசாரமுங்கவின்ற
துதிமேவுசத்தாவிசாரமுநற்கதிவாஞ்சைத்தொடர்புகொண்ட
மதிமேவுமவரிருக்குமியல்பும்வயிராக்கியத்தின்வளமைப்பாடும். (௩௨)

அநித்தியவத்துவிசாரமுந்திறனுநித்தியவத்துவிசாரமும்
இனித்தநலமார்விசிட்டதருமவிசாரமுமின்பமுத்திகூட்டுந்

தனித்தசாதனவிசாரமும்பிராமாணியவிசாரமுஞ்சீர்
தொனித்தநயப்பிரசாதக்கிரமத்தின்முறைவிளங்கச்சொற்றவாறும்.

சிவப்பிரசாதப்பேற்றுற்றுற்கடனென்பான் முத்திசேர்ந்தவாறுந், தவத்துயர்மா லருள்வழிபோய்ச் சத்தியசந்தன்கதியைச்சார்ந்தவாறு, மவத்தினைவரையுநீக்குஞ் சிவபத்திவிசாரமுநல்லறிவான் மிக்கோ, ருவப்பினுணர் பரசிவசொரூபவிசாரத்தினைய மோங்குவீறும். (௩௪)

சிவலிங்கசொரூப விசாரமுந்திகழுஞ் சிவத்தலவிசாரமுஞ்சீர்த், தவமல்குதிவ்வியபற்பதாரணைவைபவவிசாரமுந்தயங்கு, மூவமையிலாச்சிவப்பிரீதி காமுஞ்சின்மறை யவருக்குமையோர்பாகன், றுவர்மலர்த்தாளிணைப்பத்தியில்லாமைக் குறுமேதுசொற்றவாறும்.

ப்ரமசிவநற்றிரு நாமவைபவமுமாசிரியன் பாங்கர்ச்சென்று,கரவறுநன்மாணுக்கனுபதேசங்கொளுமுறையுங்கரிசிலாத, வரமலிசற்குருபாரம்பரியமுஞ்சீகாளத்திவரையின்வீறும்,விரவுயிர்களெளிதின் முத்திபுகுவதற்குத்தருமேதுவிசித்தவாறும். (௩௫)

சருவசாதனவீறும்வேதாவிரோதத்தின்றகைமைப்பாடு
மொருவாறுநற்சருவசித்திகாமும்பாதகவிசாரமு முறைக்கு
மருவுகழுவாய்மந்தணமும்பாவநிவிர்த்திக்காவருக்கப்பட்ட
பொருவில்பலதலமிறைவனிறைவிதிருப்பெயரோடுபுகன்றவாறும்.

தணவறுமேன்மையர்கொள்ளும் பற்பறிரவியசுத்தித்தகைமைப்பாடுங்,குணமறையோர்முதலியோர்க் குணத்தகாப்பொருள்பலவுங் குறித்தவீறு, மணவுமுபகாரமேயாகமரணக் குறிநன்கறைந்தவாறு, முணர்வுடையாருளமதிக்கும்பாவபரிபாக மெடுத்துரைத்தவாறும்.

வானவர்கள்பிரமலோகம்புகுந்தவாறுமறைமலரின்மேலோன்
மேன்மையவர்க்கைதரேயகவுபநிடதப்பொருளும்விளங்காநின்ற
பான்மைமிகுதைத்திரீயகவுபநிடதப்பொருளும்பண்பினோர்க்கே
யானபுகழ்ச்சாமசாகோபநிடதப்பொருளுமறைந்தவாறும். (௩௬)

பொலிதருசாந்தோக்கியமு மீட்டுமெந்த வுபநிடதப்பொருளுமெய்ச்சி, றொலிபுனையுந்திருமுண்டகோபநிடதப்பொருளு முண்மையோங்கி, வலியுறுகைவல்லியமும் பிரகதாரணியகமுமற்றதற்குண், மெலிவறநின்றோங்குடத்தப்பிராமணநற் பெரும்பொருளும் விரித்தவாறும். (௪0)

கடவல்லியொடுசுவேதாச்சுவதரப்பொருளுங்கரைந்தவாறுந்
திடமல்குபுகழ்ச்சருவவேதார்த்தசங்கிரகந்தெரித்தவாறு
மடமில்லாச்சூதமுனிவாதராயணனனுஞைபெற்றவாறு
மிடமல்குமின்பமருள்பரமவிஞ்ஞானத்தையெடுத்திசைத்தவாறும்.

மன்னுவேதப்பிராமாணியத்தை யையமறவகுத்தவாறு, மூன்னு புகழ் கொண்டோங்கும் விசேடசிருட்டியை யறியவுரைத்தவாறுந், துன்னுநயமிகுமான்மவனான்மவிவேகந்தெரியச்சொற்றவாறும், பன்னுநலமார்சருவசாத்திரசங்கிரகத்தைப்பகர்ந்தவாறும். (சஉ)

புண்ணியவிண்ணவருடம்பிணிற்குநிலைமையை யெடுத்துப்புகன்றவாறு, மெண்ணியசீர்புனைசருவ வேதாந்தசங்கிரகமிசைத்தவாறுந், தண்ணியபேரருட்குணத்துச்சான்றோர்மூன்முறையிருகைதலைமேற் கூப்பிக், கண்ணியநற்பொருள்விளங்கவிரித்துரைப்பாமுத்தியின்பங் கலப்பமாதோ. (சங)

## அவையடக்கம்.

தள்ளுதன்மான்மதமெனினு மதினியைந்தநறுவிரையின் நன்மைநோக்கிக், கொள்ளுதல்செய்வார் சேரக்களித்துலகரதுபோலக் கோடலின்றி, யெள்ளுதவெள்மொழியெனினுமதினியைந்த சிவகதையினினிமைநோக்கி, விள்ளுதல் செய்யார்சேரக்கொள்வர் நல்லோரெனத்துணிந்துவிளம்பலுற்றேன். (சச)

ஆற்றநெடுநாளுழந்துபன்மறையுமாலயனுமளவுசெய்து
சாற்றரியசிவபெருமான்புகழ்க்காதையான்மொழியுந்தரமன்றேனு
மாற்றரியவேணவாநவிறிமெனநாக்குதலின்வழங்கலுற்றே
னேற்றவறிவினரிசழார்மடமையோரிகழ்வதற்கோரேதுவின்றே. சரு

குழையடருங்கருநெடுங்கட் பெருமாட்டிமொழிதீஞ்சொற்கொள்கையோடாங், குழையடருங் கொடுமுழக்குங் கொள்பெருமான் றிருச்செவிகளுவர்ப்புறுத்தேங், கழையடரும்பாகனையசான்றோர் தம்பாடலொடுகடையேன்செய்யும், பிழையடரும்பாடல்களுங்கொண்டுவக்குமெனத்துணிந்துபேசலுற்றேன். (சசு)

பார்பரவுபுகழ்ச்சூதசங்கிதையைச்செந்தமிழிற்பாடல்செய்தான்
பேர்பரவுநலமிகுசீர்க்கருணீகர்குலத்தினன்பொற்பெருகுவல்லூர்க்,
கார்பரவுகொடைத்தடக்கைவீராச்சாமிக்குரிசில்காதன்மைந்தன்
சீர்பரவுசைவசிகாமணிதேவராசப்பேர்ச்செய்யவேளே. (சஎ)

வலிதருமெய்ச்சிவபத்தி மருவினோர்கேட்ப மனமகிழ்ந்துகாந்தத், தொலிதருநற்புகழ்ச்சூதசங்கிதையைச் செந்தமிழி லொளிதரச்செய்தான், மலிதருநுண்ணுணர்வுடையோ னிலக்கியமு மிலக்கணமும்வரம்புகண்டோன், பொலிதருபூம்பணைவல்லூர்த்தேவராசக்குரிசில்புலவரேறே. (சஅ)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

வாசவன்மலரோன் மாயவனேத்த வரந்தருங் கயிலைநாயகனே, யீசனென்றெவரு முணர்தரத்தெளிவாவியம்பிடுஞ்சூதசங்கிதையை, மாசறுதமிழில் வகுத்தனன்றொண்டை வளம்பொலிநாட்டில்வல்

ஊரிற், றேசமர்ந்தோங்குந் தேவராஜேந்திரன் ஜெகதலம் புகழு நாவலனே. (௯௬)

(எண்சீரடியாசிரியவிருத்தம்)

ஏராருஞ்சகாத்தமொராயிரத் தெழுநூற்றெழுபத்தியைமூன்றி னிகழ்சாதாரணவாண்டிற்றேனென், பேராருமதியி ருபத்தைந்தா நாள்பரிதிப்பெருவாரம்பஞ்சமிநல்லோணமெழிறிகழு, நீராருங்கடக விலக்கினமதனிற்சூதனிகழ்த்தியசங்கிதையை யியற்றமிழ்ப்பாவினி யற்றிச், சீராரும் புலவர்மகிழ்தரவரங்கேற்றினனாற் சிவனடியைப் பணிதேவராசநாவலனே. (௯௭)

பாயிரமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯௭,

விநாயகர்துதி க ஆ ௯௮.

---

உ

முதலாவது

# புராணவரலாற்றத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

திருந்தவந்தளிர்பன்மலர்நனிதுறுமிச்செங்கதிர்வெப்புநுழைற்றுய்ப்
பொருந்தவந்தரநாட்டமரரும்புகழும்பொற்பினதாகியொப்பின்றி
வருந்தவங்கடிந்துபூதிசாதனமெய்மருவியூறின்றியெஞ்ஞான்று
மருந்தவம்புரியும்பெரியவர்க்குறையுளாயதுநைமிசாரணியம். (க)

மூடங்குளைமடங்கலோடு கருங்களிறுமுதிர்வலித்தாக்கொடுமா
னு,மிடங்கொள்செஞ்சிறையகலுழனோடரவுமிகறடிந்தென்றுநட்புற
லான்,மடங்கருமகத்தீநின்றெழுபணியுமதியமும்பகையறக்கொண்ட,
விடங்கனெம்பெருமான் செஞ்சடைக்காட்டை விழைவதுநைமிசக்
காடு. (உ)

தவர்சினங்கதுவிஞெழிதருமாறுசபிப்பவுந்தக்கமற்றவரே
யிவர்வறுகான்றசோறெனநோக்கியிகழவும் பகையலைத்திடவுந்
துவரிதழலர்மினுறைநிறத்துவனத்தொங்கலான்வேரொடுபறித்துக்
கவரவும்படாதநைமிசவனத்தைக்கற்பகவனங்கொலோநிகரும். (௩)

தரையகம்புகழத்தளிர்த்துறப் பூத்துத்தாழ்ந்தபாதவ விடபத்
துப், புரையறுமுனிவெள்ளரும்பகங்கிடப்பப்பொலிசெங்கேத்திருல்
வலயத்தை, விரைகெழுமுறுக்குவிட்டசெங்காந்தண்மென்மலர்சா
ருபுமறைத்தல், கரைதலையுவாச்செங்கதிரவன்றனைச்செங்கட்செவி
கவர்ந்தது கடுக்கும். (௪)

செந்தளிரரும்பிக்கருங்குயிறலைக்கீழ்ச்சினையமர்தரப்பலதேமா,
நந்தலிறருக்களாவயிற் பொலிதனுடும் வான்றவத்தவர்பலர்க்கு, மந்
தினின்றருள்வானந்திவானிறக் காரணிமணிகண்டத்தெம்மண்ணல்,
வந்தனைக்குரியபல்லுருக்கொண்டுவயங்குறுகாட்சியையமானும். (௫)

சால்வுமலர்ந்தபிண்டிமுற்றருக்கடையிடையுதிர்த்த பன்மலர்
மேற், கோலமாதவத்தர்சுருப்பு நாண்கருப்புக் குனிசிலைமாரவேள்
பகழி, மாலயன்வலாரிமுதலியோர் கடவார்மதி முடிப்பிரானருள்
வலியா, லேலயாங்கடந்தேமெனத்தெரிப்பார்போ லெய்துவர் பதத்
துறமிதித்து. (௬)

ஒற்றைமாங்கனிமெய்யடியவர்க்குதவியும்பர்க்குமரியநன்கதியை
யுற்றசீரம்மையார்தொழினன்றென்றுவந்தெனப்பன்முசுக்கலைகள்
சொற்றவவ்வனத்திற்செற்றதேமாவிற்றூங்கியதேங்கனிபலவு
நற்றவச்சைவப்பெரியவர்கொள்ளநாடொறுநாடொறுமுதிர்க்கும்.

துன்றுநம்மடியிற்றோன்றிநங்குலக்குத் தொலைவிலாப்பெருஞ்
சிறப்பளித்த, குன்றவிற்பிராற்கியாஞ் செய்வதெனவன்றாள் குறிப்
பவர்க்குதவிசெய்திடுவா, மென்றுநின்றாற்போ லவ்வனஞ் சூழ்வே
யிணைந்துமேற்கவிந்துமாமகக்கூ, றொன்றவாங்கடுக்குமசுரருட்புகாம
லொதுக்கி யெஞ்ஞான்றுமிக்குடற்றும். (௮)

அமையுநம் பெயர்கொண்முனிவரனிருக்கையா மெனப்பற்பல்
கிள்ளைகளு, மிமையினம்முருக்கொளிறைதருநிழல்விட்டிருந் தவம்
புரியிடமெனவுட், சமைகுயில்களுநம்முருக்கொடம்பிரானார்தம்மடிப்
பூசனைபுரியுங், கமையவரிருக்கையாமெனச்சரபக்கணங்களுமவ்வனத்
தகலா. (௯)

சயம்படுகல்வியாளர் போன்மணந்து தண்ணென்றுசந்தனம்
பொலியும், பயம்படுசெல்வர்போன்மெனத்தளிர்த்துப் பழுத்தசூதம்
பலசெறியுங், கயம்படுமுலோபர்போன்மெனவுடலிற்கழிமடற்பனை
சிலகளுலும், வயம்படுமிவற்று ளொன்றுமில்லவர்போல்வற்றன்மா
மரஞ்சிலமருவும். (௰)

கோட்டுவெங் களிறுகாத்திரத்தூறுத்த குழியிடைக்கவிரலர
ரணி,மூட்டுசெந்தழலிற்செறித்தவட்கிடக்குமுளிவளார்முளரியிட்ட
விர்மாக், கூட்டிறால்கிழித்துவழி நறவவியக்கொழுந்தழை வழிவழி
தரச்செய், நீட்டுபுன்முருங்கைப் பூம்பொரியட்டியியற்றுமாலிட்டி
மந்திகளும். (௰க)

பச்சிளந்தருப்பையணிவனைபொருந்தப்படுதலிற்குவலையம்பொ
லிய, மெச்சுறுமுளரிவிளங்குறவளர்க்கும்வியப்பினிற் கிடைகெழு
முதலி, னிச்சலுமடைந்தோரழுக்ககற்றிடலினிரம்பியபுட்பயிறலிற்
பூ, வைச்சிருத்தலிற்றண்ணெனும் பெருங்குணத்தின் வனமென்
மெய்ம்மையேபோலும். (௰உ)

நாவலங்குருந்துப்ராய்பணையரசுநறு மருதார்கரவீர, மாவயங் கரம்பை பாடலம்பாகல் வடமகிழ்செறிதரநிற்றன், மேவுதம்மினத் தொவ்வொன்ருேரொரு மெய்த்தலங்களில்விளங்குதல் காணு உத், தாவிலப்பெருமைதாமுநன்குறவாதவம்படத்தவஞ்செயல் புரை யும். (௰௩)

தாமரைக்கிழவோன்றண்டுழாய்த் தொடையோன்றருக்குமிக் கிகலியஞான்று, மாமறைச்சிகையுநாடொணுப்பெருமான் வளரழலு ருக்கொடுநின்ருங், கேமுற்றவத்தோர்ருளத்தினையவருக் கிருக்கை யாகியவனமேய்ப்பக், காமருசோதித்தருப்பொலிந்தாங்குக்காரிருட் கலப்பறக்கடியும். (௰௪)

வற்கலையுடையர்தெய்வநீற்ருெடுகண்மணிபுனைமேனியர் மறை முற், சொற்கலையுணர்ச்சிமிக்கவர்பவநோய் துடைக்குமைந்தெழுத் தியையுளத்தர், விற்கலைநுதலார் மயன்முதல்யாவும் வெறுமயலென வெறுத்தொழிந்தோ, ரற்கலைமுடியாரடிவிருப்புடையாரவயிற் பயி லுமாதவர்கள். (௰௫)

மலர்பலகுற்றுத் தொடலைகளியற்றிவயங்கெழு சிவபிரான் பூ சைக், கலர்முகங்கொடுநன் களித்துநற்றருப்பை யாதியதேடுபுகொடு த்தும், வலனுயர்சிறப்பிற் புராணநூல்கேட்டு மாண்புறச்சிந்தித்துந் தெளிந்தும், பலர்புகழ்தரு மைந்தெழுத்துறப்பயின்றும்பயனடைப வர்கண்மற்ருெருசார். (௰௬)

ஐவகைச் சுத்திபுரிந்துநாயகனையந்தரியாகப்பூசனைசெய், துய்வ கைக்கடுத்தபுறத்தினும் போற்றியொளிர்தழல்விதிப்படி வளர்த்து, மெய்வகைக்குரியவதிதியர்ப்போற்றிவிமலமார் சிவானந்தவாழ்க்கை, செய்வகைக்குரியவருட்டிறஞ் சிந்தைசெய்திருப்பவர்கண் மற்ருெரு சார். (௰௭)

இடகலையொடுபிங்கலைவளியியங்குமியக்கடைத்திடையுறவிருத்திப் படர்தருமிருமூன்ருயவாதாரம்பயிறருபொருளுணர்ந்தேகி யிடர்தபமதிமண்டலத்தமுதருந்தியிணையிலாப்பேரொளிப்பிழம்பே திடனுறத்தமக்கங்கரணுறச்செய்துதிகழ்பவர்குழாமுமற்ருெருசார்.

கருவினையியற்றும்பற்றறக்கடிந்துகருதிருவினைச்சமம்வாய்ந்து, மரு வுமைவகைப்பாசங்களுங்கழிப்பி வயங்குறுசிவானந்தவெள்ளட்,பெ ருகுதண்கடலொன்றிரண்டறக்கதிரிற்பிணைவிழிப்பெற்றியினழுந்தி, வருகைபோக்கிறந்துபரவசத்தின்பமடுப்பவர்குழாமுமற்ருெருசார்.

கற்பகஞ்சுரபிநிதிமணியிருபாற்கவினநின்றியாது வேண்டிடினு, மற்பகமிக நல்குவமெனவிரப்பவவற்றுளமமைத்திலராகிப், பற்பல வேதாகமபுராணங்கள் பகர்தருமிருதிநூல்பயில்வார், சொற்பொருள் விரித்துப் பயிற்றுவாரனைய தூயவர்குழாமுமற்ருெருசார். (உ௰)

இத்தகுமுனிவர் பற்பலர் குழுமியியற்று சத்திரமக்முடிவிற் சத்துவகுணம்போர்த்தென்ன வெண்பூதிதயங்கிய மேனியும் பவளக் கொத்தெனத்திரண்டுநீண்டவேணியுங் கோத்தணிதிருவக்கமாலிகையுஞ், சுத்தவைந்தெழுத்துள் சிந்தையுமுடைய சூதமாமுனிவரன் வந்தான். (உக)

வந்தமாமுனியைஇருந்தமாமுனிவர்மழ விளங்கோதனமன்னை, சந்தமார்வருங்கன்றெதிரோடுந்தன்மைபோல் விரைந்தெதிர்கொண்டார், சிந்தையுண்மகிழ்ந்தார்வந்தனைபுரிந்தார் செய்யதாமரைமுக மலர்ந்தார், முந்தியாதரவினருக்கியமுதலா முறைப்படி செய்கடன் புரிந்தார். (உஉ)

இனியவாதனத்திலிருத்தினர் சூழவிருந்தன ரிப்பவமெமக்குப், புனிதமாகியதித்தினமுநற்றினமாய்ப்பொருந்தியதையநின்வரவாற், பனிவிசும்பிறைவன்பங்கயன்றிகிரிப்பண்ணவன்றிருவமோர் பொருளோ, தனிவருபூதிசாதனத்திருவந்தனக்கெனமனக்கொளும் பெரியோய். (உங)

தன்னிடத்தடைந்து கைவிரித்திரந்தோர்தமக்கழி தருபொருணல்கும், பொன்னிடத்தமருங்கற்பகதருவோ புகர்படுசிறியரோமிடத்து, மன்னுநல்லருளால்வலியவந்திரவாதிருப்பினு மழிவின்மாண் பொருளை, நன்னலம்பயப்ப மூகமலர்ந்தினிதுநல்குறு நின்றனைநிகர்த்தல். (உச)

மறைமுழுதுணர்ந்தவாதராயணன்பான்மயக்கறயாவுநன்குணர்ந்தோய், கறையறுதவத்துரோமவரிடணன் காதலவெனப்பலதுதித்தா, ரிறையவயாரும்வகையொருபுராணமினிதுவாய்மலர்கவென்றிரந்தார், நறைகெழுநறுந்தண்மலர்தளிர்துவன்றுநைமிசவனப்பெருமுனிவர். (உரு)

கேட்டலுமகிழ்ந்து குறுநகைமுகிழ்த்துக்கிளர்முடிதுளக்கி நன்றென்று, வேட்டவர்மலங்கள்வாட்டிவெம்பவமும்வீட்டிடப்பாட்டளித்துளவக், கோட்டடலேனமண்புகுந்துளைந்துங்குறுகொணுநறிய செம்பதுமத், தாட்டுணைகூட்டத்தக்கதியாதென்னுச்சற்றுளத்தெண்ணுபுநவில்வான். (உகு)

செயற்கருஞ்செயலிற்றிறம்பிடாதுயர்ந்தசெந்நெறிச் செல்வமாதவத்தீர், முயற்கலைமிலைந்ததம்பிரா னருளேமுதன்மையென்றுளத்துறக்கொண்டீர், வியக்குமற்றதனுற்சிவகதைகேட்க விரும்பினீரிவ் விருப்புடையோர், பெயர்க்கரிதாகுஞ்சிவானந்தவீடுபெறுவதற்கையமொன்றின்றே. (உஎ)

வேதசம்மதமாயளவின்மந்தணங்கள்விளங்குவதாய்நெடுங்கால மாதவம்புரிந்தோர்க்கன்றி மற்றையர்க்குவகுத்துரைத்திடப்படாதது

வா, யேதமொன்றின்றிச்சிவபெரும்போகமியையதரச்செய்வதாயியை ந்த,சூதசங்கிதையென்ஞென்றுளதஃதியாதென்றிடிற்சொல்லுகேன் கேண்மின். (௨அ)

இரும்புனல்பிறைகொக்கிறகலர்தும்பை யெழில்வளைக்குழையியை தரித்து,விரும்புவெண்ணீறுமெய்யெலாம்பூசிவெள்விடையுகைத் தருள்பிரானை, யரும்புவெள்ளுருவொற்றுமையிறுற்றுங்கலழகென மதித்துவெண்டிருப்பாற், பெருங்கடறிரண்டுநின்றெனவிளங்கும்பெ ரும்பெயர்வெள்ளியங்கிரியில். (௨௯)

அளவறுமறைகடுதிக்கவீற்றிருக்குமப்பெருந் தகைப்பிரான்றன் பாற், களமறவுணர்ந்தோனந்திமற்றவன்பாற்கற்றுணர்ந்தவன்சனற் குமார, வளமுனியவன்பாற்பன்னெடுங்காலம்வழிபடுபுண்மைமுற்று ணர்ந்தோன், றுளவினன்கூறென்றுரைத்திடும்வியாசத்துரிசறுமுனி வரன்மாதோ. (௩௰)

அன்னமாமுனிவனியற்றியபுராணத்தளவையீரொன்பதுபிரமம்
பன்னுமாபதுமம்வயிணவஞ்சைவம்பாகவதம்பவுடிகமே
துன்னுநாரதீயமாற்கண்டேயம்மேதுலங்குறுமாக்கினேயம்மே
மன்னியபிரமகைவர்த்தமிலிங்கம்வராகமேகாந்தம்வாமனமே. (௩௧)

நலங்கெழுகூர்மமச்சங் காருடமே நற்பிரமாண்டமேயென்ன, விலங்குமிப்புராணக்கிரந்தத்தின்ஞெகைநாலிலக்கமாமிம்முனிவரன் போற், றுலங்குறவுணர்ந்திரொன்பதின்மர்களீரொன்பது புராணம் பின்சொற்று, ரலங்குறுமுபபுராணமாயவைதாமவ்வவர் பெயரினுல் விளங்கும். (௩௨)

நயச்சனற்குமாரநாரசிங்கம்மேநந்திகேச்சுரஞ்சிவதருமங்
கயக்கமிறாருவாசநாரதீயங்கபிலமானவமவுசனசம்
வயப்பிரமாண்டம்வாருணங்காளிவாசிட்டலைங்கஞ்சாம்பவஞ்சீர்
பயக்குறுசௌரம்பராசமாரீசம்பார்க்கவமென்பனபெயரே. (௩௩)

இத்தகுபுராணக்கிரந்தத்தின்ஞெகையோரிலக்கமாவிதுநிற்கவிளங்கு
முத்தமமுனிவீர்முன்பதினெட்டுளுயர்ந்தனவுலகுறுமுயிர்கள்
சித்தமாசறுத்துப்பரகதியுய்க்குஞ் சிவபுராணங்களோர்பத்து
மத்தகுபுராணம்பத்துளுமுயர்ந்ததளவிலாப்புகழ்பெறுகாந்தம். (௩௪)

விரிவுறுகாந்தமாறுசங்கிதையால் விளங்குதம்பெயரினுற்சொற்ஞேர்
துரிசறுசனற்குமாரமாமுனிவன் சூதன்சங்கரனரியயனென்
றுரியவையயுதத்தோடையாயிரமாறுயிரமோங்குமூவயுதந்
தெரியையாயிரமூவாயிரமோராயிரங்கிரந்தம்முறைசெப்பில். (௩௫)

ஆகமோரிலக்கத் தொகைக்கிரந்தங்கொ ளாறுசங்கிதையினுஞ் சிறந்த, தாகமார்சூத சங்கிதையதுதா னுறுஞ்சிவமான்மியஞான

யோகமேமுத்தியாகவைபவமென் றுரைத்திடுகொண்டானிருஞ்சீர்
போகுமத்தியாயங்கிரந்தமுமுறையே புகலுதுங்கேண்மின்மாமுனி
வீர். (௩௯)

ஒருபதின்மூன்றேழ் நூறிருபதுமற்றுறையெழு நூற்றுமுப்பத்தேழ்
தருநவமைஞ்ஞூற்றறுபத்துமூன்றுசாற்றிடுமோரறுபத்தேழ்
பெருகியநாலாயிரமிவற்றளவில் பெருமறைப்பொருளெலாம்விளங்கு
மிருநிலத்தியாவராயினுமுணர்ந்தோரின்பவீடெளிதி னெய்துவரால்.

ஆரணமுழுதுமுணர்ந்தவேதியனேயாயினுஞ்சிவபுராணத்தி,
னேரணிபொருளையுணர்ந்திலானுயினிலங்குமவ்வேதமற்றவனைத்,
தாரணியிடத்துநம்மைவஞ்சிப்பேனென்றுனிவனெனநனியஞ்சும், பூர
ணமுறவாதலின்மறைப்பொருளைப்புராணத்தாற்றெரிதரல்வேண்டும்

அறையுமென்னூற்குமறைபிரதானமாகியபெரும்பிரமாணம்,பொ
றைதருமிருதிபுராணங்களுபபுராணமற்றுள்ளசாத்திரங்க, ணிறை
தருமறைக்குவிரோதமாகாதுநிகழ்த்திடுமெனுகுணமாகி, யுறைதரு
மறைக்குவிரோதமாநூல்களொருவர்க்கும்பயன்படாதனவே. (௩௯)

வயம்படுமெறையுமொன்றம்மா மறைசொன்மதிப்பரும்பொருளு
மொன்றேனும், பயம்படுமனேக சாகைகளாகிப்பரந்தனவாதலான்
மறையு, நயம்படுபலவாயம்மறைப்பொருளுநாடரும்பல்லவாய்நாளு,
மயம்படுபிராணரியற்றிடுமாயாவைபவமும்பலவான. (௪0)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஆதிநான்முக்கணெம்மானலர்மகன்றனையுண்டாக்கி
யோதுதன்னுருவினின்றமறையினோடுறுபடைப்புங்
காதலினவற்குநல்கக்கறைமறைப்பொருள்விளங்க
மேதகுமருளாலன்னுன்மிருதியைநிருமித்தானே. (௪௧)

தலமெலாம்புரக்குமாயன்சங்கரனருண்மேற்கொண்டன்
பலர்பராசரன்சேயாகியசுன்றமாமறையனைத்து
மிலகுறப்பிரித்துநான்காவியற்றினனதனுலென்று
மலர்தலில்புகழ்வியாதனெனும்பெயரொன்றுபெற்றான். (௪௨)

ஆயநான்மறைப்பேர்சாகையிருபத்தொன்றவிரிருக்கு
மேயநூறுடையதாமியசுருமிக்காயிரங்கொ
டேயசீர்ச்சாமமொன்பானதர்வணமென்றுசொல்ப
பாயசீரவ்வியாதன்பயிலவன்முதலியோர்க்கு. (௪௩)

மறையளித்தலகிலோதிவகுத்திடுவீர்களென்று
நிறையருட்புராணம்யாவுநேசமோடென்பாற்றந்து
குறைவறவகுத்தியார்க்குங்கொளுத்துகவுண்மையென்றான்
றுறைகெழுமன்னுன்சொன்ன முறைப்படிசொல்கேனென்று.

அம்பைதன்சமேதனாகியமைதலாற்சாம்பனென்றும்
வெம்புயிர்த்துயரந்தீர்க்கும்விதத்துருத்திரனேயென்றும்
பம்புநற்சுகந்தைச்செய்யும்பண்பாற்சங்கரனேயென்று
நம்புடைத்திருநாமங்கொளுயகப்பெருமான்றன்னை. (சரு)

மாலயனிந்திராதிவானவர்க்கரியான்றன்னை
யாலமார்கண்டத்தானையறவிடைநடாத்துவானைக்
காலகாலனைமெய்ஞ்ஞானக்கருத்தினார்கண்ணினானைச்
சால்வுட்டியானஞ்செய்துதன்வசமில்லானாகி. (சசு)

செய்யகண்மலர்முகிழ்த்துச்சிறிதுபோதிருந்துபின்னர்
மையமர்மலக்காழட்ட மாதவர்வதனநோக்கித்
தெய்வநாயகன்சீர்கேட்குந்திருவினிற்சிறந்தீர்கேண்மி
னுய்யுமாநெறியீதன்றியின்றெனவுரைத்தான்மாதோ. (சஎ)

முதலாவது

புராணவரலாற்றத்தியாயம் முற்றிற்று.

---

உ

இரண்டாவது

# திருமான்முதலிய தேவர்களுலகிற்கு முதல்வனை யுணர்ந்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

பொற்றசடையந்தணிர்புராணவரலாறு
சொற்றனமுராரியயனாதியர்தொகுப்புற்
றுற்றவுலகிற்குமுதல் யாரெனவுசாவிப்
பிற்றடையிலாதறிபெருங்கதையுரைப்பாம். (க)

முன்னரொருகாலம்வனமுத்திரையவெற்றும்
பின்னலுறுவெண்டிரைபிறங்குகடனாப்பட்
பன்னகமிசைக்க மலைபாதம்வருடக்கார்
மன்னுமுகில்போல்விழிவளர்ந்தருளுமாயோன். (உ)

இலகுகலைமங்கையெழிலேந்துமுலைபுல்லு
நலமுறிருநான்குபுயநான்முகவிதாதா
வலனுயிர்குடித்தவயிரப்படைகொள்வள்ளல்
குலவுமுடிவானவர்கள்கூடினர்களோர்சார். (ந)

அண்டமுழுதிற்குமுதல்யாரெனவொர்சங்கை
கொண்டனரொருத்தரையொருத்தர்குறியாகக்

கண்டனர்விஞயினர்கவற்சியறயாதும்
விண்டிலர்கண்மூகைமைவிராயினருமொத்தார். (ச)

மேக்குமுகமாயினருமேவுபுகிழக்கி
ஞக்குமுகமாயினருமாயவிவையின்றி
நோக்குமுகமாயினருமாய்நுதலிஞர்க
டேக்கினர்மயக்கநனிதேறும்வகையில்லார். (ரு)

ஈங்குறைதலிற்பயனியாதுமிலையென்று
தேங்குமயறீரும்வகைசிந்தைசெய்தெழுந்தார்
வீங்குதுயரக்கடல்விலங்கிடவடைந்தா
ரோங்கொளியதாயுறையுருத்திரவுலோகம். (சு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அன்னகாலையிளஞாயிறளவில்கோடியுதித்தாங்குப்
பன்னற்கரியதன்னருளாற்பன்ஞளுடலம்வருந்துதவ
மன்னிற்சிறந்தோர்களுங்காணற்கரிதாய்வயங்குதிருவுருவ
நன்னர்த்தோற்றிமான்முதலோர்நடுவணின்றனம்பெருமான்.

பண்டுகனவத்திடத்துமறியாதபடிவநனவிடத்துக்
கண்டுவணங்கிமாயவனுங்கமலப்பொகுட்டுமேயவனும்
வண்டுமுரலாக்கற்பகப்பூமாலைத்தடந்தோளனுமற்றை
யண்டர்களுநேர்நோக்கிநீயாரையென்றுவிஞயினரால். (அ)

மன்றவுயிருக்குயிராகி வயங்குமகிலகாரணஞய்
நின்றமுதலைநேர்கண்டு நீயாரொன்று விஞவுவரோ
வென்றோர்சங்கை கொள்ளற்கவெண்ணில் கதிர்களுதித்தாலு
மொன்றுபடலத்துறும் விழிகட்கந்தகாரமொழியாதே. (கூ)

உடங்குமாயையான்மறைப்புண்டுண்மைதெளியவொட்டாத
மடங்கொண்மனத்தராய்வினவுமாலாதியர்தம்முகநோக்கி
யிடங்கொளுலகமனைத்தினையுமியற்றிக்காத்துத்துடைத்தருளுந்
திடங்கொள்பெருமான்மறைநவின்றதிருவாய்மலர்ந்துநவில்வாஞல்.

அண்டத்தொகுப்பெலாமெவனிஞுகுமவனெண்ணில்லாத
வண்டத்துயிருக்குயிராகியமைந்தானெவன்மற்றவனென்று
மண்டத்தகத்தும்புறத்துமெவன்சான்றாயமைந்தானவனிகரின்
றண்டத்திருநலுருவனெவனவனென்றறிமினெனையிமையீர். (யக)

எவனும்பதங்கணிலைபெறுதல்செய்யுமிறைவனெஞ்ஞான்று
மெவனெப்பொருட்குமாதாரமாகியிருக்குமிணையில்லா
னெவஞன்மறைநும்போல்வார்க்குமுண்மைதெரிந்தெட்டிடப்படா
னெவன்மெய்யன்பினவலைப்படுவானவனென்றறிமினெனையிமையீர்

எவனைவணங்கின்யாவுமுறுமெவனைவழுத்தினினித்திருக்கு
மெவனைநினையிற்பிறவியறுமெவனைமறையீறெடுத்துரைக்கு
மெவனைமெய்ஞ்ஞானியர்தொழுவரெவனையரியனென்றுரைப்ப
ரெவனைநாசமிலியென்பரவனென்றறிமினெனையிமையீர். (௰௩)

நானேயுலகமனைத்தினுக்குமிலற்கரியகாரணனு
நானேநிகிலநியாமகனுநானேயென்றுமிருப்போனு
நானேயனைத்துமறிபவனுநானேயறியப்படாதவனு
நானேபரம்பிரமமுமினித்தெளிமினவிவற்றிமையீரோ. (௰௪)

அளவிலுயிர்க்குந்தனுகரணபுவனபோகமாயினநம்
வளருமாயாவிருத்தியேமற்றிம்மயக்கமுறுதகற
லுளதெக்குருகவெவையுணர்வானெவனோவவற்கேயொல்லுமாற்
பளகின்றுணர்மினெனப்பேசிமறைந்தான்முக்கட்பரஞ்சோதி. (௰௫)

நம்மான்மறையவெருக்கொண்டுநன்குயிற்றுநம்மறிவென்
றம்மான்முதலோர்பொறிகலங்கியந்தோபிரானையாரொன்று
வெம்மாசுடையமனக்கடையோம்விறுவிறுமென்செய்தாமா
விம்மாப்பிழையெவ்வாறொழிப்போமென்றுகசிவுற்றிரங்கினரால். ()

என்னபிழையாமியற்றிடினுமெண்ணுதிறைவனருளியதான்
முன்னமிருந்தசங்கையறமுதல்வனவனேயெனத்தெளிந்தாங்
கன்னிபாகத்தப்பெருமான்கருணைக்கிலக்காயிடுவோமென்
றுன்னினார்களுண்ணெகிழாவோலிட்டழைப்பத்தொடங்கினார். (௰௭)

சீலமில்லேங்குணமில்லேஞ்சிந்தைத்தெளிவுசற்றுமிலே
மோலமறையிட்டுணராதாயுண்மையுணரவல்லேமோ
மூலமுதல்வாபிறைவேணிமுடித்தாயுரைக்கமுடியாதாய்
காலகாலாகாபாலிகாட்டிமறைத்தல்கடனேயோ. (௰௮)

புரைசேர்சிறியேமிழைத்தபிழைபொறுத்தல்பெரியோர்கடனன்றோ
திரைசேர்கொடியவிடமுண்டுசிதையாதெம்மையன்றளித்தோய்
நரைசேரேறுகொடியுயர்த்தாம்பாவம்மையொருபாகா
வரைசேரரவாவம்பலத்திலாடீயெங்குப்புகுந்தாயே. (௰௯)

அழுங்கும்பிறப்போடிறப்பென்னுமாழிவீழ்ந்தேநின்மாயை
விழுங்கப்பட்டேமெங்கண்மேற்குற்றஞ்சொலவும்வேண்டுமோ
தொழுங்கையடியாருளத்தேத்தோதுதிக்கும்வேதமுடித்தேத்தோ
செழுங்கண்மலிபூங்கடுக்கைமுடிச்சிவனேயெங்குப்புகுந்தாயே. (௨௰)

(கலிநிலைத்துறை.)

என்றிரங்கினரீன்றதாய்பிரியிளம்புனிற்றுக்
கன்றுபோன்றனரவரிடைச்சிதருக்கலப்ப

நன்றுநாம்பெறலருஞ்சிவஞானஞ்சித்திக்க
வொன்றுகண்டனமெனத்துணிவுற்றனர்செய்வார். (உக)

அமலமாமிடத்தமரரெலாமுறுப்படங்கும்
விமலமேயவானனுமையமாய்நின்றவேலை
நிமலமாமனுவொடுமயநிலம்விழாமுன்னர்க்
கமலமெல்விலேயேந்தினர்வழும்புமேல்கழித்தார். (உஉ)

தீதில்கௌவியங் கூட்டுப்பிசைந்தனர்திரட்டி
யாதபம்படுத்தழலிலிட்டெடுத்துடனரித்துக்
கோதில்பாத்திரம்வைத்தூநற்குளிர்கொணீர்மூழ்கி
யேதமின்றியாசமனமோரிருதரமியற்றி. (உங)

ருசைமுடிந்தபைம்பவுத்திரமனுமிகைகோத்துத்
திசைகொணீறுபூசுதற்குரிமந்திரஞ்செபித்து
வசையிலங்கையிற்புண்ணியநீறெடுஇவைத்து
நசைகொளப்புவிற்கதிபனைநினைந்தறனைத்து. (உச)

ஊறுநீங்குறவனுவளவகற்றியொண்கலையோ
டேறுசங்கிதையாலபிமந்திரித்தியைய
நீறுசென்னிமுற்முளளவுறுத்திப்பினெறியான்
மாறிலாநுதலகன்றமார்புந்திவண்புயங்கள். (உரு)

இந்தவைந்திடத்தினுந்திரிபுண்டரமிலகச்
சந்தமாருமும்மூர்த்திபாவனைசெய்துதரித்துச்
சிந்தைமாசறவிடையத்துச்செலாப்பொறியினரா
யெந்தைபேரொளியுருவினையிருதயத்திருத்தி. (உசா)

இருந்துமுன்பிரணவமுறநமோந்தமீருகத்
திருந்துமைந்தெழுத்தும்புடையெழாவகைசெபித்தார்
பருந்துசூழ்தருசூற்படைப்பராபரன்முன்போன்
மருந்துனுவினர்மகிழ்தரவாவயின்வந்தான். (உஎ)

செழுந்துழாயணிமாயனைமுதலியதேவ
ரெழுந்துதுள்ளினராடினரிணையடிமீது
விழுந்துதண்டெனக்கிடந்தனர்வெம்பவக்கடலி
லழுந்திடாமெனவறைந்தனராழ்ந்தனர்களிப்பின். (உஅ)

தொடுமெனற்சிறுகேணியிற்கண்புனல்சுரப்பப்
படுமழற்கண்வீழ்மெழுகெனவுளம்பரிந்துருக
விடுவதின்றியற்புதமெனமெய்ம்மயிர்பொடிப்ப
வடுவிறுத்தழுதழுத்திடவழுத்துவாரானர். (உகூ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஒன்றுமாய்ப்பலவுமாகியுருவுமாயருவுமாகித்
தொன்றுமாய்ப்புதிதுமாகித்தூரமாய்ச்சமீபமாகி
யின்றுமாயென்றுமாகியிருளுமாயொளியுமாகி
நன்றுமாய்த்தீதுமாகிநயந்தரும்பொருளேபோற்றி. (கூ0)

பிறையணிசடிலபோற்றி பேரருட்பாகபோற்றி
கறைமிடற்றிறைவபோற்றிகாலனைக்காய்ந்தாய்போற்றி
நிறையுடைமுதல்வபோற்றிநிருமலக்கொழுந்தேபோற்றி
மறைவிரித்துரைத்தாய்போற்றிமறைமுடிவுணராய்போற்றி.

என்னநின்றேத்திறைவரையெம்பிரானினிதுநோக்கிப்
பன்னருமேன்மைப்பாசுபதவிரதம்பூண்டன்பின்
மன்னிநோற்றீர்மகிழ்ந்தேன்வயங்குலகெவைக்கும்யானே
யுன்னருமுதல்வனென்னையன்றிவேறொருவரின்றால். (கூஉ)

நித்தியநியமஞ்செய்தந்நியமங்காமியமின்றாக்கிச்
சித்தசாந்தியனாய்ப்பன்னாட்செய்தயோபலமுள்ளானாய்ச்
சுத்தவேதாந்தவுண்மைதொடர்சிரவணத்தனாகு
முத்தனேயலான்மற்றோர்க்கெனுண்மைகண்டிடன்முற்றாதால்

பத்தியினேவன்பாசுபதவிரதங்கொள்வானச்
சுத்தனுமறியவல்லான்சொற்றவிவ்வுண்மைகொண்டு
பித்துளமொருவிநீவிர்பெரிதுநம்பூசையாற்றி
முத்திமுன்னானபெற்றுமுனிவறவாழ்வீராக. (கூ௩)

எனவுரைத்துத்தனிச்சையியலுருக்கரந்தானெம்மான்
மனநெகப்புளகம்போர்ப்பமாயவன்முதல்வானோர்கள்
பனகவாபரணத்தோனேபரம்பொருளென்னத்தேறி
யனகமார்தத்தம்வைப்பையடைந்தினிதிருந்தார்மன்னோ (கூ௪)

இவ்வகைநெடுமாலாதியிமையவர்மயக்கம்பூண்டு
செவ்வியமுதலைப்பின்புதெளிந்தனரென்றாலந்தோ
வெவ்வியமுலோபங்காமமகங்காரம்விழுங்கப்பட்டுப்
பௌவநீருலகின்வாழுமாக்களோதெளியற்பாலார். (கூ௫)

இரண்டாவது திருமான்முதலியதேவர்களுலகிற்கு
முதல்வனையுணர்ந்தவத்தியாயம்முற்றிற்று.
ஆ. அத்தியாயம் உக்குத் திருவிருத்தம் அகூ.

உ

மூன்றவது

# திருமாலகம்பாவநீங்கி யானந்தநடந்தரிசித்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மோனமுனிவீர் திருமான்முதல்வானேரு லகினுக்குமுதன்மை பூண்டோ, னவனையறியாதுபின்றெளிந்தவாறுரைத்தாமம்மால்பி ன்னு,மீனமறுபரம்யாமென்றுளமயங்கிநந்திசொலாலிரித்துமுக்கண் வானவனையருச்சித்தானந்தநடந்தரிசித்தவாறுசொல்வாம். (௧)

காமருபொற்றகடடுக்கிவைத்தனையவிதழ்விரிசெங்கமலக்கோயி ற், றூமணிவெண்முறுவலரிபடர்ந்தகருநெடுந்தடங்கட்டுவர்வாய்ச்செ ய்ய, மாமகடன்மார்பிடங்கொண்டண்ணுந்துமிடியின்றிமதர்த்தகொ ங்கை, யேமமுறவுழுதுழுது கலக்கமகிழ்திளைக்குமெழிலேந்துதோ ளான். (உ)

முன்னரொருகற்பத்தெம்முன்னவன்றன் பெருமாயைமூடப்ப ட்டுத்,தன்னிலைமையறியாதுமதிமயங்கியகங்காரந்தலைமேற்கொண்டு மன்னுமறைக்கெட்டாதபரம்பிரமம்யாமென்றும்வயங்காநிற்கு,முன் னரியபல்வகையவண்டமெலாமெம்மிடத்தேயுள்ளதென்றும். (௩)

சங்கமந்தாபரமுண்டாயினநமதுசத்திவிலாசத்தினென்று,மெங் குறமக்கொப்புயர்வுவகுத்திடுமுக்காலத்துமில்லையென்றும், பங்கமற நாமேயாவருமெக்காலமும்போற்றப்படுவேமென்றுஞ், சிங்கலில்வே தமுநமையேசொலுமென்றும்பலநினைந்துசெருக்குக்கொண்டு. (௪)

சிலவேலைத்தேவர்கடன்வழியேவல்செயவாணைசெலுத்திச்செ வ்வா, யிலவேலையொருபாகன்றனைமடமையாலுணராதிருந்தானந் நாட், குலவேலைந்தொன்றினுக்குமெட்டாதானவனகந்தைகுறித்து நக்கு, நிலவேலையாம்வண்ணங்கொண்டபெருஞ்சேட்டையெலாநீற் றினுனல். (௫)

நீற்றுதலுமவனுமவனருள்வழிப்பட்டோருமொருநிலையராகிச், சாற்றரியபெருந்துயரந்தலைப்பெய்துமுகம்புலர்ந்துசாம்புமேல்வைக், கூற்றுயிருண்டொளிர்நறும்பங்கயத்தாளார் நம்முதன்மைக்குரவனு ன,போற்றலுறுநந்திபிரான்றனையேவமாயவன்பாற்போயினுனே. ()

நந்திபிரான்றனைக்கண்டுநாணமுமச்சமுமகிழ்வுநணுகாநிற்ப,வந்தி லெழுந்தெதிரோடியடியிறவீழ்தருநிகர்ப்பவடியில்வீழ்ந்தான், முந்து மறைமுதல்வினிதுறப்பணிந்தாரெழுந்தார்கைமுடிமேற்கூப்பி, யெ ந்தைவரவினிதாயிற்றென்றவனல்லாதனமொன்றெழிலினிட்டார்.

அருணந்திப்பெருமானுமிருந்துமாலையுமிருக்கவருளியன்றான், றெருணந்தியுய்யும்வகையுண்மைநவில்வான்றுளபத்தெரியலோயுள், ளிருணந்திநீகொண்டவெண்ணம்யாததுபின்னை யென்றாயிற்று, மருணந்தியாரேனும்வருதவறியாதொன்று மதித்தநீதே. (௮)

பேதைமையினெண்ணியவெண் விடுமெதிநீ யெக்காலும்பிரமமாகாய், மாதையொருபாலுடையபிரானொருவனேபிரமம் வயங்கெஞ்ஞான்று, மேதமறயாமுரைத்ததன்றியெலாமறைமுடிவுமிவ்வாறோதும், போதமுறுமிவ்வுண்மை நினக்கருளால் யாமின்று புகன்றோமன்றே. (௯)

வளங்கனியும்வைகுந்தப்பெருநகரநீமருவிவாழுமாறும்
விளங்குசதுமறைக்கிழவன் சத்தியலோகத்திருக்கைமேவுமாறு
முளங்கவர்மற்றைப்பதங்களிந்திரன்முன்னோர்மருவியுவக்குமாறுங்
களங்கனியைநிகர்களத்தாற் பூசித்தபலனென்று கருதிடாய்கொல்.

எம்பிரான்முதல்வனென யாமுரைக்கவேண்டியதின் றென்றுமந்தத், தம்பிரான் மணிகண்டந்தானுரைக்குஞ் சடைத்தலைமாலைகளுஞ்சொல்லும், பம்பியநின்விழிவிழியினென்பதள்கோடோடரிகொள்பதுமப்பூந்தாள், வெம்பவில்கைவிரலரைமார்போங்குமெழிற்றிருமேனிவிளம்புமன்றே. (௰௧)

இந்தனமார்செந்தழலாலயம்விளங்கல்போலண்டமெல்லாமந்தச், சுந்தரநாயகனருளால் விளங்கிடுமான் முன்னரொருதுரும்பானின்னை, யந்தமின்மற்றைச்சுரரைவலியளந்தானஃது மறந்தலைகொவின்றிச், சந்ததமு மழல்வரையாய் நிற்குநிலைமையுமுணராந் தன்மையென்னே. (௰௨)

பகுத்தறிவிலாதவர்போலுண்மையுணர்ந்திலைமயக்கிற் படிந்தாய்நீங்கி, வகுத்தவெனதுரைமனக்கொள்யான்பிரமமென்பதினிமறந்துமெண்ணேல், மிகுத்தசிவபூசை புரிந்தருள்பெற்றுவாழ்தியெனவிளம்பித்தீமை, யிகுத்தபெருந்தகைநந்திவிமானமேல்கொடுகயிலைக்கேகினனே. (௰௩)

மாமங்கைவளர்மார்பனந்திதிருமொழியனைத்து மனத்தூட்கொண்டு, வேமங்கிநிகர்தருமிவ் வெண்ணங்கொண்டது வீண்வீணென்றுபோக்கி, யேமங்கொளருச்சனைக்குவேண்டுமுபகரணங்களெல்லாந்தேடிக், காமங்கைத்துள்ளுருக நீராடிநீறணிந்துகண்டிபூண்டு. (௰௪)

வேதமொழிப்படி நேசமிக்கூறச்சிவபூசை விழைந்துசெய்தானேதமறமனைவியுமற்றையர்களுமிப்படிப்பூசையியற்றினார்க, ளாதரவிற்சுரர்களலர்மாரிபொழிதரவியங்களார்த்துமார்ப்ப, மாதர்மடமயிலினொடுமெம்பெருமான்விடைமீதுவந்தானங்கு. (௰௫)

கண்டமாயவன்விரைவினெழுந்தெதிர்சென்றடுத்தாருங்கவினச்சூழத், தண்டநேர்தரப்புவியிற்பலதரம்வீழ்ந்தெழுந்துவலஞ்சமையச்சூழ்ந்து, விண்டாத்தழுதழுப்பமெய் பொடிப்பவிழிகண்ணீர்வெள்ளத்தாழ்ந்து, தொண்டனேற்கிக்காட்சி கிடைத்ததாவாவென்றுதுதிக்கலுற்றான். (௰௬)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பவத்தினையஞ்சும் பான்மையோர்க்கின்பப்பயனுறுமுத்தியாயதனை, நிவப்புறக்கொடுக்கு முதலுமாயெங்கு நிறைந்துறைபொருளுமாய்நிமலத், தவத்தினைவிழைந்தோர்க்கப்பெருந்தவமாய்ச்சமீபமாய்த்தூரமாயெவரு, முவப்புறச்செய்யுந்தொழிலுடையாளுயொளிர்தருநிராமயபோற்றி. (௰௭)

தரைபுனலனல்காலம்பரம்பரிதிதண்சுடரோடுபல்லுயிரென், றுரைதருமெண்மூர்த்தங்கொடுநின்றாயுனக்குவேறாயதொன்றில்லாய்புரையறுவிசுவாதீதனேநிமல பூரணபுராணனே தரும, நரைவிடைபோலென்னையுமினிதூருமம்பனே நின்னடிபோற்றி. (௰௮)

வானிடையொன்றாய் வளியிடையிரண்டாய் வயங்குறுகனலிடைமூன்றாய், மீனிடையருத புனலிடைநான்காய் மேதினியிடையைந்தாய்விரிந்தா, யூனிடையுயிருக்குயிருமாயுறைந்து முற்றநீர்நிழலெனத்தோன்றாய், கானிடையாடலுவந்தகங்காளாகாமருநின்னடிபோற்றி. (௰௯)

இரவியிற்கதிரு மதியினிற்கலையு மெழில்பெறுமணியினிலொளியும், பரவியமலரின்மணமுமொண்புனலிற்பகர்தருதண்மையும்போல, விரவியெந்நாளும்பிரிதராவியல்புவிளக்குவானிடத்துமையோடு, வரமுறுகாட்சிதந்துமுன்னின்றமறைமுதலடிகளேபோற்றி. (௨௰)

மண்ணிடைச்சில்லோரெனைப்பரமென்றமற்றைவானவர்பரமென்று, பெண்ணிலராய்த்தாமேபரமென்றுமெடுத்துரைத்துழன்றுதீவினையிலொண்ணுவரவருளொருவனாய்மயங்குமூரனிலாவென்னையுநந்தியண்ணலாற்றெளியத்தேற்றுவித்தாண்டவற்புதத்திருவருள்போற்றி

ஏழையேனறியாமையின்மயங்கிடவு மிடித்துரைத்தெடுத்தினிதாண்ட, மாழைபோனிறத்தாய் பரம்பொருணீயே மற்றிதற்கையமெனுலகீ, ரேழையுமுடையாயெண்டிசையுடையாயெரிக்கொழுந்தெழுமழுப்படையாய், மானழயங்கண்ணிகூறுடைப்பிரானேவாழ்வினின்னடியிணைபோற்றி. (௨௨)

எனத்துதிமுழக்கிப்பணிந்தனன்மாயோனெம்பிரானினிதருள்சுரந்து, கனக்கருநிறத்தோய்மகிழ்ந்தனம்வேண்டும்வரம்பெறுவன்கணாந்திடுகென்ன, மனத்திடையருதுநின்னடிக்கன்புவளரவுமம்பலத்தாடுமுனற்கருநடனங்காணவும்வேண்டுமென்றனனுதவினன்பகவன். ()

ஏற்றினைக்கடவியெம்பிரானேக விணர்த்துமாய்மாலேயயன்பிரமன், வேற்றடங்கருங்கட்கமலேமற்றுள்ளவிண்ணவரனைவருந்தொடர்ந்தார், சாற்றிடுமுணர்வினெனுமறந்தேனுஞ்சார்ந்தவொழுகைகைச்சன்மச், சேற்றினைக்கழுவிமுத்திக்கண்படுக்குந்தில்லேயினெல்லேயையடைந்தார். (உச)

இதுசிவலோகமெனவிழிவிடுத்துநோக்கியேத்திரைரங்குப்பணிந்து, முதுமறைக்கிழவர்மாளிகைநிறைந்தமொய்யொளிவீதியைப்பணிந்து, குதுகுதுப்படைந்துவிண்ணின்மீதுயர்பொற்கோபுரவாயிலும்பணிந்து, கதுமெனச்சிவகங்கைப்பெருந்தீர்த்தங்கண்டுமெய்பொடிப்பெழப்பணிந்து. (உரு)

நீருருவாயும்பவப்பெருவனக்குநெருப்புருவாயவத்தீர்த்தஞ்
சாருபுமூழ்கிப்புண்ணியநீறுதரித்துயர்கண்மணிபூண்டு
சீருருவமலற்காயவைந்தெழுத்துஞ்சிந்தையினமூழ்ந்துறப்பதித்து
மேருவைநிகர்த்தாய்க்கதிரொளிசமழ்ப்பவிளங்குபேரம்பலம்பணிந்து

தயங்குசிற்பரவியோமமாகியசிற்சபையெதிரடைந்தனராக
வயங்குமற்றவர்க்குமுன்னெழுந்தருளி வந்தநாயகன்விடையிழிந்து
பயங்கொள்வேதாந்தமன்பர்தம்முள்ளமெனப்பகரச்சபைமேவி
நயங்கொள்யாழ்தழுவித்தும்புருவோடுநாரதமுனியிசைபாட. (உஎ)

நந்திமாமுழவமெழுப்புறத்தாளநயம்பெறச்சிற்சிலரொத்த
முந்திநன்கிருகைசிரத்தின்மேற்குவியாமுனிவரரரகரவென்ன
வந்தின்மெய்யடியார்பெருங்கணத்தவர்க ளானந்தத்தவசராய்த்துதிப்பச், சிந்தியாநின்றவிமையவர்பலருந்தெய்வமாமறையொலியெழுப்ப. (உஅ)

கருடர்கந்திருவர்சித்தர்கள்விச்சாதரர்முதலோர்களிப்படைய
வருடருமொருகைத்துடியொலிபொங்கவங்கிமற்றொருகையிலுறுமிரு
மருவுமற்றொருகைகவிதரவொருகைம்மலரமைவெய்திடவொருதா
ளொருமுயலகன்றணிகல்வெரினெளியவூன்றுமற்றொருதிருத்தாள்.

குஞ்சிதமாகவீசுபுபவளக்கொழுஞ்சடையெண்டிசைதடவப்
பிஞ்சுவெண்மதியோடுறுபுனறுள்ளப்பேரெழிற்குன்றுசெவியசைய
வெஞ்சினவுரகம்வெண்டலேமாலேவிராகமழிதழியங்கண்ணி
மஞ்செறுழ்ப்புயத்திற்றுயல்வரவரையின்மலிபுலியதள்பொலிவெய்த

மணியரிச்சிலம்புகழலிடையொலிப்பவாமபாகத்துறநிற்கு
மணிமலர்கூந்தலெம்பெருமாட்டியலர்முகங்கடைக்கணோக்கப்
பணிபுகண்டவர்கட்குள்ளநெக்குருகப்பவளவாய்க்குறுநகைதோன்ற
தணிவிலானந்தத்திருப்பெருநடனமியற்றினனுலகெலாந்தழைப்ப,

(கலிவிருத்தம்.)

கண்டமாயவன் கண்புனல்வாக்கிட
வண்டுசேர்முடிமாலெநிலத்துற
மண்டுமன்பின் வணங்கியெழுந்தனன்
கொண்டனன்முடிமேற்கைகுவித்தரோ. (௩௨)

சோதிபோற்றிசுடருஞ்சிற்றம்பலத்
தாதிபோற்றியருமறையாகம
மோதிபோற்றியுயக்கொண்டெனையுமா
ணீதிபோற்றிநிருமலபோற்றியே. (௩௩)

காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி
யோதுவாருளத்துள்ளொளியாகிய
நாதபோற்றிநடனம்புரிதிருப்
பாதபோற்றிபராபரபோற்றியே. (௩௪)

என்றுமாயன்றுதிசெய்திறைஞ்சினன்
றுன்றுவானர்மற்றோருந்துதித்தனர்
குன்றவில்லியருள்வழிகோலமிக்
கொன்றுதத்தமுறையிடஞ்சேர்ந்தனர். (௩௫)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

விரிதிரைநீருலகுமுதல்யாவுமினிதளித்தருளு மேன்மைபூண்ட
கரியவனும்யாம்பரமென்றெண்ணியதற்களவில் பிழைகலந்ததென்று
முரியபிறப்பிறப்பொழியாச்சீவர்சிலர் யாம்பரமென்றுரைப்பரந்தோ
தெரியினிவர்தமைநிரையமுமிழாதெஞ்ஞான் றுமிதுதிண்ணந்தானே

மூன்றாவது திருமாலகம்பாவநீங்கி
யானந்தநடந் தரிசித்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௩க்குத் திருவிருத்தம் ௱௰௬.

---

௪

நான்காவது

# சிவபூசாவிதியுஞ் செய்தோர்பெருமையு முரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஆழியான்செருக்குநீங்கியருள்பெற்றகாதைசொற்றும்
வீழிவாய்மயிலோர்பாகற்பூசைசெய்விதியுஞ்செய்தார்

பாழியுமவரைப்போற்றிப்பாதகனொருவன்முத்தி
வாழியவுலகஞ்சேர்ந்தகாதையும்வகுப்பாங்கேண்மின். (௧)

மருக்கிளர்மலர்களுட்டாமரைமலருயர்ந்தாற்போலும்
விருக்கமுள்ளவற்றுட்டெய்வமிளிர்தருவுயர்ந்தாற்போலு
முருக்கொள்பன்மனுக்களுள்ளைமைந்தெழுத்துயர்ந்தாற்போலுந்
திருக்குபல்பூசையுள்ளுந்தம்பிரான்பூசையேற்றம். (௨)

சாற்றிடுமுறுப்பியாவுந்தலைக்குமேலுயராபாவங்
காற்றிடுநதிகள்யாவுங்கங்கைமேலுயராவான
மாற்றிடும்பலரைப்போற்றும்பலமெலாமடுத்தோர்சன்மம்
பாற்றிடுஞ்சிவனைப்போற்றும்பலத்தின்மேலுயராவன்றே. (௩)

மலர்ந்தமண்புரக்கவேண்டின்வானகங்காக்கவேண்டி
னலர்ந்தபூவிருக்கைவேண்டினவிர்கடற்கிடக்கைவேண்டி
னலந்தருமின்பமுத்திநண்ணிடவேண்டிற்கூற்றின்
வலந்தருமுயிர்குடித்தமலரடிப்பூசைசெய்வார். (௪)

திருவமிக்கடையவேண்டிற்செம்மகப்பேறுவேண்டின்
மருவலர்ச்செருக்கவேண்டின்மாண்பொருட்கல்விவேண்டின்
வருபெரும்புகழ்ச்சிவேண்டின்வான்முதலெவ்விடத்தும்
பொருவிலிபூசையன்றிமற்றெவற்றாலும்பூவா. (௫)

வானவரியக்கர்சித்தர்கருடர்கின்னரர்மாநாகர்
தானவர்நிருதர்விச்சாதரர்முனிவரர்கண்மற்றை
மானவரிவருள்யாரேமதிமுடிப்பெருமான்பாதத்
தானவர்ச்சனைசெயாதாரச்சிறப்புளாப்பினீரும். (௬)

செந்நிறச்சுட்டுமுட்டாட்சேவல்கூவிடுமுன்னுக
மன்னியதுயினீத்தையன்மலரடிநினைந்துநீறிட்
டந்நிலைநிருதித்திக்கினடைந்துபூணூல்காதேற்றிப்
புன்னிலநன்னிலமுற்போக்குபுதகுமிடத்தில். (௭)

இகலறத்திரணமொன்றிட்டிருகரமுக்காற்றட்டிப்
பகல்வடக்கிரவுதென்பாற்பார்த்திரண்டியக்கநீத்துத்
தகலிடக்கையாற்கோசம்பற்றுபுகரகந்தாங்கி
யகலநீர்த்துறைக்கட்சென்றுங்கரும்புனன்முகந்துபின்னர். (௮)

குலவுமண்புனல்பெய்திட்டுக்குறிகுதஞ்சுத்திசெய்து
நிலவுறக்கைக்குமவ்வாறியற்றுபுநீர்வாய்ப்பெய்து
தலமுற வுமிழ்ந்துதாளும்விளக்கிமுட்டாருவன்றே
விலகுபான்மரத்தின்மொய்த்தவிருஞ்சினைபலவற்றுள்ளும். (௯)

வடுவுறுசினையிற்பன்னீரங்குலவளவைவாய்ப்ப
நடுவிரற்பருமங்கொண்டுநன்குபற்கறையெறிந்து
படுபுனல்கொடுவாய்சுத்திசெய்துபின்பாவமூற்று
மடுநதியுள்ளிறங்கியரையளவறலினின்று. (௧௦)

போதிகூவிளம்பைங்குல்லைபுளிவடஞ்சம்புமூலங்
காதுமால்யானைக்கூடங்கலினவாம்பரிசெறிந்த
தீதின்மந்திரங்குடங்கர்ச்செருத்தலான்றொழுவங்கல்லி
மேதகக்கொண்டமண்ணைமெய்யிடைத்திமிர்ந்துமூழ்கி. (௧௧)

சுரைபடுமூலைநல்லான்பாறேய்தயிருநெய்துநீர்
புரையகன்மயமிவ்வைந்துந்தனித்தனிபொருந்தவாடித்
தரைபடுகுல்லைகிந்தஞ்சம்புகூவிளமால்போதி
யுரையறுகென்னுமிவ்வேழ்தளிரினூலறுநீர்தோய்த்து. (௧௨)

சென்னிமேற்புரோக்கித்தாசமனமுதற்செய்வசெய்து
மன்னியநீறுபூசிவானவர்முதவியோர்க்குத்
துன்னியநீரிறைத்துத்தூயகண்மணியும்பூண்டு
பன்னியவைந்தெழுத்தும்பரிவுடனெண்ணியப்பால். (௧௩)

மஞ்சனம்பள்ளித்தாமமாநிவேதனம்பூசனைடை
பஞ்சகவ்வியநற்கந்தமுதலியபாங்கிற்கொண்டு
விஞ்சியதீம்பானல்லான்மேதகுமயத்தாற்சுத்தி
வஞ்சமின்றமைத்தவோர்சார்வடமுகமாயிருந்து. (௧௪)

துன்றியவோரேழ்சன்மத்தொடுகடல்வறக்குமாறு
வென்றிகொள்சைவபூசைவிருப்பினிலியற்றலுற்றேன்
மின்றிகழ்சடிலமோலிவிநாயகப்பெருமானேயூ
றின்றிநன்களித்தியென்றுவிரந்துசங்கற்பஞ்செய்து. (௧௫)

திருந்துபாத்தியமுன்மூன்றுஞ்செம்மையிற்றாய்மையாக்கி
யருந்திறற்றுவாரதேவரனைவருமுவப்பச்செய்து
பொருந்துறப்பூதசுத்திபுரிந்துளத்துண்மைஞானப்
பெருந்தகைப்பொருளையுள்ளிப்பெரிதும்பூசனையியற்றி. (௧௬)

வயங்குமப்பரமானந்தன்வடிவம்பாவனைசெய்தன்பி
னியங்குமாதாரசத்திபீடத்தினிருநூல்கூறு
நயங்கொளுமிலிங்கந்தாபித்திருதயநின்றுஞான
சயம்புநாயகனையாவாகனஞ்செய்துசமையப்பின்னர். (௧௭)

முறைமையிற்றண்டபங்கிமுண்டபங்கியுமியற்றி
மறைசொரூபனமுன்யாவும்வயக்கிநன்முகமன்கூறி
நிறைகொள்பாத்தியமுனீத்துநிவேதனஞ்செய்வசெய்து
குறைவில்பாத்தியமுன்மூன்றுமன்பினிற்கொடுத்துமீட்டும். (௧௮)

மாலியங்களைந்துவேறோர்பீடத்தில்வைத்துவாச
வாலியவெண்ணெய்க்காப்புமாநெல்லிமஞ்சட்காப்பு
நூலிபலாணிலைந்தைந்தமுதமேநுவலுந்தீம்பான்
மேலியதயிர்நெய்செந்தேனிளநீர்மென்கருப்பஞ்சாறு. (௧௯)

கனிபலவருக்கம்வாசங்கலந்தசந்தனக்குழம்பு
புனிதநீர்சைவசூக்கம்புருடசூக்கத்தான்மற்று
மினியவைந்தெழுத்தாலாட்டியிலகுமொற்றாடைசாத்திக்
கனிவின்முற்பீடத்தேற்றிக்கவின்றபட்டாடைசாத்தி. (௨௦)

சந்தனக்கலவைசாத்தித்தடமணிப்பூண்கள்சாத்திப்
பைந்தொடையலங்கல்சாத்திப்பாவநோயறுக்கும்வில்லத்
தந்தளிர்மலர்முற்கொண்டன்பாயிலயாங்கபூசை
நந்துபோகாங்கபூசைநயமுறவருச்சித்தம்மா. (௨௧)

மற்றுளவனைத்துஞ்செய்துவயங்குறுதூபதீப
முற்றுறக்கொடுத்துப்பின்னர்முதிர்சுவையன்னமூட்டிச்
சிற்றுணவகைகணல்கிச்சிறந்தபானீயமீத்துப்
பொற்றவாய்பூசிக்கந்தம்பூவடைபாகுநல்கி. (௨௨)

அமையவெட்டாறைந்தங்கமணிநிலந்தோயத்தாழா
விமையவருய்யுமாறேயிகல்விடமமுதாக்கொண்டாய்
கமையறுமடியேன்செய்தகரிசுநற்குணமாக்கொண்டே
யுமைமணவாளகாத்தியெனத்துதிபலவுரைத்து. (௨௩)

இன்புறவணங்கிமீட்டுமிருதயத்தொடுக்கிக்கொண்டு
மன்புலத்தெளிவினாசமனஞ்செய்துநீறுபூசி
யன்பினைந்தெழுத்துமெண்ணலான்றவிச்சைவபூசை
கோன்பெறுபிரமசாரியாதிமூவருக்குங்கூடும். (௨௪)

(மேற்படிவேறு.)

மருவியநான்காநிலையன்பிரணவத்தாற்பூசிக்கவேண்டும்வானோர்
கருநெடுங்கண்மாதரசற்சூத்திரர்ப்பிரணவத்தைக்கழித்துநாளு
மொருவருநமோந்தமாப்பூசிக்கவேண்டுமற்றைச்சாதியுள்ளார்,பொரு
வில்சிவாலயம்பணிதல்சிவபூசைசெய்வாரைப்போற்றல்வேண்டும். ()

இத்தகையசிவபூசையியற்றுனரைப்பணிவோருமேத்துவோருஞ்
சித்தமுறநினைவோருமேலாயசிவலோகஞ்சேர்ந்துவாழ்வா
ரத்தனுரைத்தருளியநல்லாரணமாகமமிவ்வாறறையாநிற்கு
முத்தமமாமுனிவீர்காளிதனாலுண்டாகாததொன்றுமின்றே. (௨௬)

பேர்யவிடங்தோறுமரகதங்கதிர்த்தாலனையபசும்புல்லுண்டாற்ற
வாயசெழும்பச்சிலையுண்டறலுண்டுகினைதோறுமாங்குத்தோற்று
நேயமுறுபரம்பொருளுமுண்டுதவமலிபூசைநிலவச்செய்து
பாயசிவானந்தமுறார்பவத்துழல்வார்சிலரென்னேபாவம்பாவம். ()

முன்னாளிலொருவனிறவுளர்குலத்திலுதித்தவன் மொய்முகரோமத்தன், பன்னாளுங்கொன்றுழலக்குலத்தினரும்பாவியெனப்பகருநீரா, னென்னார்கடலைவளையச் சிலைவளைக்கும்வலிமிக்கானுருமேறார்க்கு மின்னாருமுகிறவழுங்கடுங்கானங்குடியிருக்கைவிள்ளாதுள்ளான்.()

நடலையியங்குனர்மறையோர்முதல்யாவரெனினுமவர் நடுக்கங்கொள்ள, வடவைவெனக்கூற்றமெனவாலமெனக்கனன்றெதிர்ந்துமறியிற்பாயு, மடல்கெழுபல்கொடுவெரிவல்லுழுவை யெனவுடல்வீழ்த்தியணிபூணுடை, சுடர்கெழுபொன்முதல்யாவுங்கவர்ந்துபாழ்வயிறோம்புந்துட்டன்மாதோ. (உகூ)

அறையிடைக்காரிரும்பசிக்குமுட்டிகையிலாங்கலிக்காயடுதன்மான, மறையுவரிற்சிலரைவயத்தண்டுகொடுதலைபுடைத்துமடித்துஞ்செங்கேழ்க், கறையொழுகச்சிலரையகன்மார்பிலயில்கொண்டெறிந்துகடிந்துங்கையாற், றறையிடைவீழ்தரச்சிலரையெருக்கியுமுள்ளனகவர்ந்துதருக்கிச்செல்வான். (௩0)

இவ்வாறுகொடுநரகும்வெறுக்குமாபாதகங்களியற்றுநாளிற், செவ்வாய்மையந்தணரில்விடனொருவனுடனட்புச்செய்தந்நாளிற், றவ்வாமையுடையனுய்ச்சிலபொருளீந்தா னவனுந்தொடர்புகொண்டா, னெவ்வாறுதீமைபுரியினும்பொருள்வீசுவர்பானட்பியற்றார்யாரே. (௩க)

மாமறையோனொருதினந்தன்னட்புடையவனசரன்றன்வதனநோக்கித், தேமொழியினயந்துரைப்பான்றீமைபுரிசவரர்குலச்சென்மமுற்றுய், நாமடையயாவரையுங்கொன்றுழன்றுயறமேதுநண்ணுகில்லா, யேமமறத்தண்டதரன்கொண்டுநரகிடுநாளையென்னேசெய்வாய். ()

ஓவாமனினக்கியைந்தபாதகங்கணினைதொறுமென்னுள்ளமஞ்சு
மாவாவென்செய்துமெனநீயிரங்காதிருக்குமறியாமையென்னே
நாவாரவுரைத்தியெனவிவ்வாறுநன்மொழிபன்னாளுஞ்சொற்று
னேவாய்வெஞ்சிலைப்புளிஞன்முன்செய்தகல்வினைசற்றிருத்தலாலே

நல்லறிவுசிறிதரும்பநட்புடையோனுரைத்தமொழிநயந்து கொண்டான், புல்லறிவிற்கடையமியாமென்செய்தாமெனவுள்ளம்புழுங்கிநைந்தா, னெல்லையெழுந்தந்தணன்றாள்பணிந்தடியேனளற்றுநெடிதுழல்வான்செய்த, சொல்லருமாபாதகங்கடொலைந்துய்யும்வகைசெய்யுந்தொழில்யாதைய. (௩ச)

'தோற்றமுதலின்றளவும்யான்செய்த தீவினைகள்சொல்ல வொண்ணுதேற்றவவைநினைதொறுமென்னுள்ள நடுநடுங்குவதின்றியாது செய்வேன், மாற்றுதற்கோர்தந்திரநீயுரைத்தியெனவிரந்தனனம் மறைவலானுந்,தேற்றமுறுமுவகையனாய்ச்சிறிதுபோழ்தெண்ணியிது செப்பலுற்ருன். (ருரு)

(கலிவிருத்தம்.)

வதம்பரவையின்மிகவளர்த்தவேட்டுவ
விதம்பரவுறவியம்பிடுதுங்கேண்மதி
சுதம்பரவினர்க்கொரீஇச்சுகத்தைநல்கிடுஞ்
சிதம்பரமெனவொருதெய்வத்தானமே. (ருசு)

அராவணையவன்முதலமரர்மாதவர்
விராவுமற்றெண்ணிலார்விரும்பிநிச்சலும்
பராவவீற்றிருப்பதுபாவமாய்ப்பது
புராதனமாயதிப்புவிக்கணுண்டரோ. (ருஎ)

வானந்தவமர்பவர்வையம்வாழ்பவ
ரூனந்தமதிக்குறுதுயர்விளுய்ந்திடத்
தானந்தமில்லவன்றயங்குசிற்சபை
யானந்தநடனமங்காடுமென்றுமே. (ருஅ)

நித்தியநிராமயநிமலநாயகற்
கெத்தலங்களினுமிக்கினிமையுள்ளது
முத்தலங்களும்புகழ்முதன்மைசான்றதென்
றுத்தமமறைமுடிவுணர்த்துமுண்மையே. (ருகூ)

அன்னமாதலத்தினையடைந்துகாலையி
னன்னர்வான்புனலிடைப்படிந்துநாடொறு
முன்னுசிற்சபையினைச்சேய்மைநின்றுள
மன்னுறத்தரிசனஞ்செயாவணங்குதி. (சு0)

பலபிரதக்கணம்புரிதிபாசநீத்
தலகிலன்பொடுஞ்சிவார்ச்சனையமைந்தவர்
நிலவியகூட்டமும்பணிதிநின்பொரு
ளலமுறுமவருக்கொளுநல்குதி. (சுக)

கேடிலாதுயருமக்கேத்திரத்தினை
வீடிலாதிருத்திநின்பாவம்வீடிடு
நாடிலாருனக்கிணையாவர்நாடொறுங்
காடிலாவுறைநிறங்கரியவேடனே. (சுஉ)

என்றனனந்தணனிறவுளன்பவந்
துன்றியதீங்கெலாந்தொலைந்தவோமென

நன்றவனிணையடிநயந்துதாழ்ந்தனன்
வென்றிகொணல்வினைவிளையின்யாவுரு. (௪௩)

மறையவன்முன்செலவலியவேடனற்
றுறையவனிழலெனப்பின்றொடர்ந்தன
னிறைபலகானநெடுநீந்திப்போய்ப்
பொறைமலிவியாக்கிரபுரத்தையண்மினன். (௪௪)

வேதியன்சொற்படிவேடனுமொரு
நீதியினறவிடைமூழ்கிநேயம்வைத்
தாதியம்பரம்பரனுடுஞ்சிற்சபை
காதலிற்றூரத்துநின்றுகண்டரோ. (௪௫)

பற்பலதரம்பணிந்தெழீஇப்பரம்பர
னற்புறுசிற்சபைக்கைங்குரோசநின்
றெற்பகல்வருத்தமிக்கெழவலஞ்செய்து
பொற்பமைசிவார்ச்சனைபுரிநல்லோர்களை. (௪௬)

அல்லறீர்தரப்பணிந்தவர்கொண்மார்தன
தெல்லையில்பொருளெலாமீத்துவந்தனன்
கொல்லியற்கிராதனுங்கொடுக்குமோவெனி
னல்லறிவுறிற்பொருணல்கிடாரெவர். (௪௭)

கரிசறநாள்பலகழியவின்னணம்
விரிவுறுபாதகமெலிந்துமேவிடு
மரியபுண்ணியத்தினலத்தலத்தினே
யுரியவாழ்நாண்முடிந்துடல்விட்டானரோ. (௪௮)

திப்பியமாகியதெய்வரூபம்பெற்
றொப்பறுவிமானமுற்றும்பர்போற்றிட
வப்பனுமம்மையோடமர்ந்துவாழ்தரு
செப்பரிதாஞ்சிவலோகஞ்சேர்ந்தனன். (௪௯)

அறுதொழிலாளனுமத்தலத்திடை
மறுவறுபூசனைமாண்பிற்செய்துவாழ்
வுறுதிருநடனமுமுவந்துகண்டன
னிறுதியின்முத்தியையெய்தினனரோ. (௫௦)

ஆகமவிதிப்படியளவிலாதவ
ரேகநாயகனடியிணையருச்சியா
மோகவல்வினைகெடமுத்தியெய்தினர்
போகுயர்புரிசையப்பொன்னகர்க்கணே. (௫௧)

தரைபுகழ்ந்தேத்துகேதாரஞானநற்
றுறையினர்நிறைதிருச்சோமநாதம்விண்
பிறைதவழ்சிகரசீசயிலம்பேசவார்
குறையறவரமருள்கோபருப்பதம். (௫௨)

கார்தவழ்இமயத்தென்கயிலைகண்டவர்க்
காரதரவின்பருளக்கினீச்சுரஞ்
சேர்தருசேதரதீர்த்தம்வெவ்வினை
வேரறுத்தருள்செய்வன்மீகக்ஷேத்திரம். (௫௩)

என்னையாளுடையவற்கினியவாலவாய்
துன்னிவானவர்மலர்தூய்ப்பராவிடு
மின்னியபுகழிராமீசம்வெவ்வினை
தன்னமுமுறுதகாந்தாரமாதலம். (௫௪)

இத்தகுதானங்களிடத்துமெண்ணிலா
ரத்தனையருச்சனையாற்றியுய்ந்தவர்
தத்தமதில்லினுந்தம்பிரானடிக்
குத்தமபூசைசெய்துய்ந்துளார்பலர். (௫௫)

வினையிலிபூசனையியற்றின்விண்ணுளோ
ரனைவருமுவப்பதற்கையமில்லையா
னனைதரமூலத்திரைமூட்டிடிற்
சினையெலாந்தழைதரநெரிந்திலாததோ. (௫௬)

இமையவர்நாயகனெங்கணாயக
னுமையவனாயகனுபயபாதங்கட்
கமையுறற்பூசையினன்றிவேறொன்றாற்
கமையுடையீர்கதிகாண்பதில்லையே. (௫௭)

நான்காவது சிவபூசாவிதியும் செய்தோர்பெருமையும்
உரைத்தவத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம் ௪-க்குத் திருவிருத்தம் ௨௭௬.

---

உ

ஐந்தாவது

# பராபரை பூசாவிதியை யுரைத்த வத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

மேதகுமுனிவீருயர்சிவபூசாவிதியுமற்றதுநயந்தியற்று
மாதரவுடையார்பெருமையுமவரையடைந்தறனிலாவொருகிராதன்
காதரமிரித்துமுத்தியிற்புகுந்தகாதையுமுரைத்தனமினிமேல்
வேதநான்கியம்பும்பராபரைபூசாவிதியையுந்தொகுத்துரைத்திடுவாம்

அரும்பரைபூசைபாகியமாப்பியந்தரமெனவிரண்டாகும், விரும்புமற்றவைதாம்புறமகமுறையேவிளைத்திடன்முன்னஃதிரண்டா, மிரும்புவிவியக்கும்வைதிகந்தாந்திரிகமெனவைதிகற்கதுவே,வரும்பலனுறுதாந்திரிகனுக்கதுவேமாறிடிற்பதிதரேயாவர். (உ)

ஆசனங்கொடுத்தாவாகனமியற்றியருக்கியமுதலமூன்றமைத்து
வாசநீர்நானந்திருவுடையுத்தரியமணிப்பூண்மலிகந்தந்
தேசவிர்நறும்பூவிரைகெழுதூபந்தீபமேநிவேதனமாலை
யேசறுமனுலேபனம்பணிந்திடுதல்விசர்ச்சனமிவைமுதல்யாவும். (௩)

சொல்லகாராதிவன்னத்தின்கூட்டசொரூபமாமாதருகையின
னல்லமாபூசைபுரிந்திடல்வேண்டுநவிலரும்பலமனுக்களினு
மெல்லையில்பெருமையிம்மனுவேற்றமிஃதின்றேலெம்மனுக்களுமின்
றல்லதீதுவுந்தூலமேசூக்கமதிசூக்கமென்னமூன்றுமால். (௪)

அத்தகுசொரூபஞ்சற்குருமுகத்தினறிதரவேண்டுமஃதன்றி
யெத்தனைநூல்கற்றுணரினுமறிதலியலுருதான்முனமுரைத்த
வுத்தமவாப்பியந்தரபூசையுண்மையினுளத்திடையொருவாச்
சுத்தம்வாய்த்திடிற்பாகியமொரீஇயியற்றத்துணியலாமற்றதுதானும்.

ஏற்றசாதாரமுயர்நிராதாரமெனவிருவகைப்படுமவற்றுண்
மாற்றில்சாதாரமருவகாராதிவன்னங்களாலமைத்திட்ட
போற்றுவிக்ரகத்தாரியனளித்தபொருண்மொழிப்படியெவராலுஞ்
சாற்றுதற்கரியபத்தியினிமலைதன்னையாராதனைபுரிதல். (௫)

அருநிராதாரஞ்சம்விதுசொரூபமாகியபராபரையிடத்து,மருவுற மனத்தையிலயஞ்செய்திடுதன்மற்றிதுவிசேடமாநனியு, மொருவில் சம்விதுவேநின்மலைசொரூபவுண்மையென்றருமறையியம்பும், பெருக மற்றிதனையறிதராச்சீவர்பிறப்பிறப்பொழிதராரென்றும். (எ)

காரணங்கடந்தபரனின்வேறல்லள்கருதுறுபரையுமற்றிவளி
னாரணமுடியினுறைபரமனும்வேறல்லனினின்மலையடியிற்
சீரணவுறவிவ்வாறுநற்பூசைசெய்தவர்திகழறிவுருவப்
பூரணன்றனையும்பூசைசெய்தவராய்ப்பொருந்துவரவனடிநீழல் (அ)

காமமிக்குடையார்களிமயக்குறுதார்கடுங்கொலைபுரிவதற்கஞ்சார், மாமறைப்பொருளை யிகழ்ச்சிசெய்புதகர்மாட்சியில்கயத்தொழில்புரிவார், தேமலர்க்கடுக்கையெம்பிரானடியார்திறத்தினிலூறுசெய்துழலும், பாமரக்கொடியார்க்கென்றுமீதுரைக்கப்படாததாலுணர்மின் மாதவத்தீர். (௯)

வேணவாவெகுளிவேரறக்கடிந்துவிரும்புமாசானடியடைந்து
மாணமற்றவன்சொற்படிகடவாராய்மதிமுடிப்பிரானடியவரைக்
காணுறிற்சிவனேயெனப்பணிந்தேத்திக்கருதுறுபூசனையியற்றிப்
பேணுதல்வல்லபக்குவத்தினர்க்குப்பேசலாமெனமறைபேசும். (௧௦)

ஐந்தாவது பராபரபூசாவிதியையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம் ரு-க்குத் திருவிருத்தம் ௧அ௬.

உ

ஆறவது

## அடியார் பூசாவிதியு மவரைப்போற்றினோர் பேறுமுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

அந்தணர்பரைபூசையறைந்தனம்
புந்தியாருமடியவர்பூசையுஞ்
சந்தமாரவர்ப்போற்றித்தலந்தொறு
முய்ந்துளோரையுமோதிடுவாமரோ. (௧)

படியினூலின்படியிப்படியிடை
முடிவிலன்புமுதிருபுருற்றும்வெண்
பொடிகொண்மேனியன்பூசையினுமவ
னடியர்பூசையதிகமதிகமே. (௨)

முராரிவேதன்முதற்சுரர்யாவரும்
புராதனற்கடியார்திருப்பூசையே
விராவவ்வவ்வுலகத்தும்விளைப்பரேற்
றராதலத்திடைச்சாற்றவும்வேண்டுமோ. (௩)

தன்னடிக்கன்புசான்றவராயினு
மன்னுமெய்யடியாரைவழிபடா
ரென்னிலந்தண்மதிமுடியீச்சுர
னன்னவர்க்கருள்செய்தலரிதரோ. (௪)

நீறுகண்டிகைகொள்ளுநியதிய
ரேறுமைந்தெழுத்தெண்ணுமுளத்தினர்
மாறில்பத்தியிற்பூசைவயக்குன
ராறுகுடியடியவராகுவரால். (௫)

பரவுகோயிற்பணிபலசெய்பவர்
விரவுமென்மைப்புராணவிருப்பின
ருரவுறும்மரவோதையெழுப்புவ
ரரவுபூண்டவற்கன்பர்களாவரால். (௬)

காவுளானயன்கண்ணன்முற்றேவர்கள்
யாவருந்தொண்டராயினுமும்மல
மோவிமெய்யருளுண்மையிற்பற்றுபு
மேவுமின்னர்விசேடவடியரே. (௭)

உயர்குலத்தினரேனுமுயர்ச்சியின்
றயர்குலத்தினரேனுமமையொழுக்
கியலநிற்பவரேனுமொழுக்கினுக்
கயலினிற்பவரேனுமடைதரின். (௮)

வேடமேபொருளென்றுமிகமதித்
தோடுமென்மலர்த்தாள்பணிந்தோகையி
னுடியஞ்சலியாற்றிவலஞ்செய்து
பீடமிட்டதினேற்றிப்பிறங்கவே. (௯)

கரகநீர்கொடுகால்கள்விளக்கியவ்
விரவுநீர்சிரமேற்றெளித்துக்கொடு
பரவுள்ளும்பருகிமெல்லாடையின்
வமிரகும்பதமாண்புறவொற்றியே. (௧௦)

அப்பிக்கந்தமலர்கொடருச்சியா
வொப்பிறூபமொண்டீபமுங்காட்டுபு
வைப்புநேர்தரவந்தசருட்சிவந்
திப்பியம்மெனத்தேமொழிகூறியே. (௧௧)

அவர்குறிப்பறிந்தன்புறநல்குத
லெவர்களுக்குமினிதுகொள்வாரெனிற்
கவரும்வாசநெய்க்காப்பிடலின்சுவை
யிவருமன்னமினிதுறவூட்டுதல். (௧௨)

பொன்னிலங்குளிர்போக்குதற்காடையெய்த்
துன்னுநோய்க்குமருந்துறைதூமட
மன்னுமாதபமாய்க்குங்குடைபதந்
துன்னுபாதுகைதூக்குகரகங்கள். (௧௩)

இனியபாற்பசுகண்டிகையின்னன
புனிததானங்கணல்குதல்பூசையாங்
கனிவிருப்பமின்றேனுங்கசிந்துள
நனியுரைத்தவர்க்கேநல்கனன்றரோ. (௧௪)

நகச்செய்செல்வனுணுகிலராயினு
மிகச்செய்பொருட்டொண்டர்க்குவெவ்வினை
யுகச்செயின்மொழியோடுபணிவிடை
தகச்செய்தற்குந்தரித்திரமுண்டுகொல். (௧௫)

இன்னவாறன்பியற்றியடியர்பான்
மின்னுபூசைவிளைக்குமவர்கள்பான்
மன்னிவாழ்குவர்மாதொருபாகனு
ரென்னபோகமுமீத்துமகிழ்ந்தரோ. (௧௬)

## கொச்சகக்கலிப்பா.

கரையெறிவெண்டிரைசெறிகார்க்கடலுடையிந்நிலவரைப்பி
னிரையளிகொடளவொளிர்தாரிளங்கோக்கள்குலத்துதித்தோ
னுரையகலும்பெருநிதியினுத்தரதிக்கிறைநிகர்த்தோன்
புரையில்செழுமுழுமணிப்பைம்பூணணிமார்பினனொருவன். (௧௭)

அன்னவற்குநான்மைந்தருளராயினரவருண்
முன்னவன்மிக்கருளுடையான்முனிவின்றெவ்வுயிர்களையுந்
தன்னுயிர்போலினிதளிக்குந்தன்மையினனன்மையினு
லின்னவனுக்கிணையின்றென்றெவருமுரைத்திடச்சிறந்தான். (௧௮)

சிரணவாசிரியனருள்வழிநின்றுசெறிசென்ம
காரணவாசிரியவிரித்தருண்மேவுங்கருத்தினனாய்த்
தோரணவாசிகைமலியுஞ்சுடர்வீதிநெடுமாட
வாரணவாசியையடைந்துமாண்கங்கைத்துறைமூழ்கி. (௧௯)

நச்சுவர்யாவரும்பெற்றுநாமுமிதென்றுளமகிழ்வுற்
றச்சுவமாயினிவருவோனயன்றேடிக்காணாத
விச்சுவநாயகன்மலர்த்தாள்பணிந்திம்மேதினிவாழ்வு
முச்சுவர்க்கவாழ்வும்வெறுத்துயர்ந்தவடியரைக்கண்டு. (௨௦)

வந்தனைசெய்தினியமொழிந்தவர்தமனக்குறிப்பின்வழிப்
பந்தமறத்தன்னுடையபொருளெல்லாம்பயன்படுத்திச்
சிந்தைமிகுகளிப்பினனாய்ச்சின்னாளிவ்வாறிருந்து
சந்ததமுமின்பமருத்தனிமுத்தியுலகடைந்தான். (௨௧)

இவனிளையகாளையுமிக்கினியதொழிற்றலைநின்று
புவனிமகிழ்தரவளவில்பொருளுடையனாயுமகி
னுவகையுறாகிருவினையின்றொடக்கறப்பவுளத்துன்னித்
துவசவெறுமேறுயர்த்தான்சோமநாதம்புகுந்தான். (௨௨)

அத்தலத்தினம்பெருமானடியிறைஞ்சியாங்குள்ள
மெய்த்தவத்தொண்டர்கள்பூசைவிரும்பியவரெண்வழித்தன்
கைத்தலச்செம்பொன்முழுதுங்கனிந்துதவிச்சின்னளின்
மொய்த்தபேரின்பமருமுழுமுதல்வனடியடைந்தான். (௨௩)

பொன்னாரந்துஞ்சுமணிப்புயத்தானொருமைந்தன்
மன்னாதபொருட்செல்வமதித்துநெறியல்வழியிற்
றுன்னார்களெனச்சுற்றத்தொடர்பினர்வேற்றுமையாகப்
பன்னாளுமுழன்றீட்டிப்பயன்றருமுன்னல்வினையால் (உ௪)

அண்டரிகவாதென்றுமாசிரித்துச்சூழ்வதாய்த்
தொண்டரிகபாத்தானைசெவாலைத்துவழிபடுவதாய்
மண்டரிகமலமதுவுண்வாவிகள்சூழ்தரவிளங்கும்
புண்டரிகபுரமடைந்தான்பொய்ப்பாசம்போயொளிப்ப. (உரு)

அம்பலத்திலெம்பெருமானுனந்தநடங்கண்டு
நம்புமடியரைத்தாழ்ந்துநாடோறுமவர்பூசை
யும்பர்களும்வியப்பவினிதாற்றியுளபொருளெல்லாம்
பம்புமவர்தமக்காக்கிப்பரகதியிற்புகுந்திருந்தான். (உ௬)

மூவருக்குமிளையான்றீமுயற்சியினுமிளையான்வெம்
பாவவினைத்திறமொழியான்படிறுகுடிகொளுமொழியா
னேவின்மறையொழுக்கொருவியுறுபொருள்கண்மிக்கீட்டி
யேவிகக்குநெடுங்கண்விலையேழையரில்லகத்திருப்பான். (உ௭)

பமரமலர்க்கருங்கூந்தற்பரத்தையர்கண்வலைப்பட்டுக்
கமடமுதுகனையபெருங்காழல்குற்றுறைபடிந்து
சமரமிகுகரிமருப்புத்துணைத்தடத்துக்கண்படைகொண்
டமிர்தமெனவாயூறலருந்தியுளங்களித்திடுவான். (உ௮)

பகலிரவுமாரவேள்பகழிகளுக்கிலக்காகி
யகலரியகணிகையரோடமளிமிசைக்கிடைகொண்டான்
புகலரியகைப்பொருளும்போயொழிந்தவிவ்விதத்திற்
றகவில்கரவாதிசெயத்தடையின்றியுளங்கொண்டான். (உ௯)

நிலத்தமராருயிர்செகுத்துநெடிதவர்கைப்பொருள்கவர்ந்து
கலத்தலுறுபெருங்காமக்கடலழுந்திவாழ்நாட்சஞ்
சலத்திருத்துக்கொடும்பிணிகள்பிரமராக்கதந்தழுவ
வுலத்தலுறுதுயருழந்தொழிந்தார்கள்பரத்தையரும். (௩௦)

மைந்தனுறுதுயர்கண்டுமயங்கியீன்றவனோ
ரந்தணனார்முழுதுணர்ந்தவறிவனடியிணைவணங்கிச்
சிந்தைகளிப்புறப்பொருளுஞ்சிலகொடுத்துமகன்செய்கை
முந்தியுரைத்திடவவனுமுன்னியுளத்திதுசொற்றான். (௩௧)

பொருவிருத்தாம்புதிருழிப்புவனிவானினுஞ்சிறப்பப்
பெருவிருத்தாவண்டயிறேம்பெய்கடுக்கையார்க்கிடமாய்க்
கருவிருத்தாதடியர்சதிக்கரையேறக்கடைக்கணிக்குந்
திருவிருத்தாசலமென்னச்சிறந்தவொருதலமுண்டு. (௩௨)

சதநறுமலர்மேயோன்சக்கராயுதமாயோன்
ன்மைந்தமர்வச்சிரப்படையோன்மற்றுமுளவானவர்க
ளாந்தடக்குமுனிவரர்களமைதருமானிடர்யாரும்
வந்தனைசெய்தேத்தவரமளித்தென்றும்வயங்குமது. (௩௩)

கொலைகளவுகட்காமமுதற்கொடியபாதகங்க
ணிலையழியப்போக்குவதுநேர்தானஞ்சிறிதேனு
மலையினுமாணப்பெரிதாவயக்குவதோர்வருடமுளத்
துலைவறவங்குறுவோர்யாரேனுங்கதியினுய்ப்பதது. (௩௪)

அத்தலத்துநின்கடம்போடணைந்துநியானித்தோர்க்கு
மைத்தவினைத்தொடராறுக்குமணிமுத்தாநதிமூழ்கி
யத்தன்முதுகுன்றீசனடிவணங்கியாலயத்தைச்
சுத்தியினெண்டலைப்பெய்தநூறுதரஞ்சூழ்ந்தேத்தி. (௩௫)

ஆங்குறையுமடியாரையனுதினமும்பூசித்து
நீங்கரியபாதகமுநின்மகனுக்கொழிதரச்செய்
தோங்குகதியினைநீயுமுறுதியிதேயுறுதியாற்
றேங்குபுகழ்மிகுநாய்கர்செழுங்குலசிகாமணியே. (௩௬)

என்றுரைத்ததிருமறையோனிணையடித்தாமரைவணங்கித்
துன்றுநறுங்குழன்மனைவிமகன்முதலோர்களுந்தொடரச்
சென்றுமுதுகுன்றடைந்துதீர்த்தங்களெவற்றினுக்கு
மன்றவாகரமானமணிமுத்தாநதிமூழ்கி. (௩௭)

முதுமறைக்குமெட்டாதமுதுகுன்றப்பெருமானை
விதுவணிசெஞ்சடையானைமெய்யன்பினடிபணிந்து
பதுமனையொத்துறைமறையோன்பகர்ந்தபடிவலஞ்செய்து
புதுமையடியரைப்பூசைபுரிவான்றன்கேளோடும். (௩௮)

பனிமதிதோயுயர்மடமொன்றமைத்தொருப்பண்புறும்யோகிக்
கினிதுதவியன்னமுதலெவ்வகைத்தானமுநிதமும்
புனிதவடியவர்க்கீத்துப்பூரணன்றன்பேரருளே
புனிவதிவுற்றுன்வணிகனேராண்டுகழிந்ததால். (௩௯)

அரவுவாய்நீங்குமதியனையனுய்மைந்தனுடல்
விரவுநோயொடுகோறல்வெட்டழியுய்வேறுபடப்
புரவுபூண்டளவில்பொருள்போற்றியடியருக்குதவி
பரவுமாரருள்வாய்த்துப்பரகதியையடைந்தனனால். (௪௦)

போற்றுமடியவரடியைப்போற்றல்பொருளெனக்கொண்ட
தேற்றமுறுநாய்கனுமில்லவண்முதலோரொடுஞ்சிறப்ப
வேற்றமுறுதிருவருளாலெய்தினன்சிவலோகஞ்
சிற்றமிலோர்முனிபூசைசெய்ததுவுஞ்செப்புவாம். (௪௧)

சக்திபனின்றுயர்ந்தவன்செந்தமிழ்மணக்குஞ்செவ்வாயா
னகத்தியன்றனடியடைவின்மைமாணுக்கருளொருவன்
சுகத்தியனன்றுறவிரும்புஞ்சுவேதமுனியெனும்பெயரா
னகத்தியன்யாமயில்பாகனல்லருள்பெற்றிடவிரும்பி. (௬௨)

ஆசிரியனடிவணங்கியடியேற்குச்சன்மவினை
மாசிரியுமாறுதிருவாய்மலர்கவேண்டுமெனப்
பாசிரியப்பொருமென்றோட்டைபங்கொடிகூற்றெம்பெருமான்
றேசிரியாமுதுகுன்றின்றெய்வமான்மியமியம்பி. (௬௩)

சென்றினியமாபூசைசெய்தெண்ணமுற்றுகென
வொன்றியவன்பினின்விடுத்தானடிவணங்கியுடனெழுந்து
வன்றியுமன்னமுந்தேடிக்காணுதான்மருவுமுது
குன்றடைந்துமணிமுத்தாநதிகுறுகிமூழ்கினான். (௬௪)

பூதியணிந்துயர்கண்மணிபூண்டுநியதிகண்முடித்து
மாதியவும்பாதியனைவளர்முதுகுன்றுடையானைப்
போதின்மணிமுத்தாற்றுப்புனலாட்டிப்பூசித்தான்
கோதிறுமப்புனலேயோர்குடிஞையாயோடுமால். (௬௫)

துலங்குறுமந்நதியின்பேர்சுவேதநதியென்றுரைப்பா
ரலங்குகதிர்வாரத்திலட்டமியிற்பருவத்தி
னலங்கொடிருவாதிரையினயக்குமாமகநாளில்
விலங்கவிலன்பொடும்பரனைவிசேடபூசனைபுரிந்தான். (௬௬)

தொண்டர்கள்பூசையும்புரிந்துதுதித்துவருநாளொருநா
ளண்டர்பிரான்வெளித்தோன்றியருள்வழங்கிமறைந்ததனு
லெண்டகுசுவேதமுனியின்பவாரிதிபடிந்தான்
மண்டியவன்பினிலாங்கிவ்வாறுற்றூர்க்களவின்றே. (௬௭)

நீர்கொண்டமுகிறவழுநெடுமுதுகுன்றினையடைந்து
வார்கொண்டபவஞ்சவட்டுமணிமுத்தாநதிபடிந்து
கார்கொண்டகண்டத்தான்கழலிறைஞ்சியவனடியா
ரேர்கொண்டதிருப்பூசையியற்றுரும்யாங்கனுளார். (௬௮)

எத்தலத்திலுறைந்தாலுமெழில்விரித்தகிரியென்னு
மத்தலஞ்சார்ந்தொருமுட்டியாவதுமெய்யன்பர்திருக்
கைத்தலத்தினுதவாரேற்காண்பாரோகதியுலக
முத்தலமுங்கொண்டாடுமோனவரமுனிவீரே. (௬௯)

ஆறுவது அடியார் பூசாவிதியு மவரைப்போற்றினோர்
பேறு முரைத்த வத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம்-௬-க்குத் திருவிருத்தம் உ௱௩௰௫.

உ
ஏழாவது
# விமலன் வாதராயணன்முதலோர் சங்கைதீர்த்த வத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பொறியியங்கன் மனமறமுயன் றருள்பொருந்திநின் றதிறலந்தணீர்
நெறியியங்கடியர்பூசையோடவனைநேர்ந்துபோற்றினர்விளக்கமுங்
குறியியங்கிடவகுத்தனங்குழகன்வாதராயணன்முனோருளஞ்
செறியியங்குமொருசங்கைதீரவருள்செய்தகாதையுரைசெய்குவாம்.

முன்னரோர்பகல்பராசரன்புதல்வன்முத்திசாதனம்விளைவிடின்
மன்னவொவ்வொருவரொவ்வொர் சாதனம்வகுப்பர்யாந்துணிவதியா
தாமற், றின்னசங்கையினையாரிடைத்தெளிவமென்றுளத்துறநினைந்
தெரீஇ, யன்னவூர்திமுதலோர்தொழத்தகும்வைகுந்தலோகமதடை
ந்தனன். (உ)

வண்டிமிண்டிமதுவுண்டுபண்பயின்மலர்ப்பசுந்துளபமார்பமுங்
குண்டலங்கலவுகாதுமோலியொளிர்சென்னியுங்குலவுவதனமு
மெண்டருங்கமலவிழியுமம்பவளவாயுமின்னகையுமினிதுறக் [ன்
கொண்டிருந்தவொருகொண்டலன்னகுரிசிற்பிரானையெதிர்கண்டனை

தரியலாருயிர்சவட்டியுண்டுவளர் சக்கரப்படை தயங்குகைப்,
பெரியமாயனுமுவப்புறக்களிபிறங்கிடுங்கடனியற்றுபு,விரியுநூலுணர்
வின்மிக்கநீவரவிழைந்ததென்னெனவியாதனுந்,தெரிவரும்படியெர
ர்சங்கைகொண்டிவணடைந்துளேனஃதுசெப்புகேன். (ச)

மன்பதைத்தொகுதிமால்கடற்றிரையின் வருபிறப்பொடிறப்பொரீ
இ, யின்பமுந்திமகிழ்விற்புகுந்திடவியைந்தசாதனமியாதெனி
னன்புறுற்றிடும்விசேடஞானமெனவறைநருங்கருமகாண்டநூல்
வன்புபற்றுசிவபூசையாதிகருமங்களென்றுமொழிவார்களும். (ரு)

தானமென்மருமெய்யென்மரும்மகமதென்மருந்தவமதென்மரு
மூனமில்பிரமசரியமென்மருமுறைத்திடுங்கிரகமென்மரு
மானவாச்சிரமமூன்றதென்மருமடங்கலுந்துறவதென்மரு
மானமிக்கபலதீர்த்தயாத்திரையெனவயக்குபுசொல்வார்களும். (சா)

வேதவத்தியயனத்தைநன்கெனவிளம்புவார்களுமிகுஞ்சிவ
மாதலத்திடைவிருப்பினொடுறும்வசிப்பதென்மர்களுமாயினோர்
காதலிற்றுணிவுபற்றிடப்படுவதெதனைநீகரைதியென்னலுஞ்
சீதரப்பகவனுள்ளகத்ததமையவெண்ணினன்சிறிதுபோதரோ. (எ)

நம்புமாறெவருமிஃதெனச்சொல்விதமோர்கிலான்றுணிவுநாடினு
ணம்பிகாபதிபதத்தடைந்தினிதிறந்திடப்படுவதீதெனு
வம்புமாமலரின்மேயமைந்தன்முனிவாதராயணன்வயங்குவிண்
ணும்பர்மற்றுமுளபரிசனத்தருமுடங்குறக்கயிலையெய்தினான். (அ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அடுங்காலமாழியெலாமடர்ந்ததெனப்பெருகியுலகழித் தியாம்பூ
ணுங், கடுங்காலப்பழியொழியச்சடைத்தாங்கும்பெருமானைக்கனிவி
ன்யாமு, நெடுங்காலந்தாங்குவாமெனக்கங்கைதிரண்டுயர்ந்துநின்றாற்
போலு, மொடுங்காதபுகழ்விளைத்துப்பொலிவெள்ளிமால்வரையினும்
பர்மாதோ. (௯)

பாராளுமணிவையத்தடியாதனீங்கவருள் பண்பிற்கொள்வான்,
றேராளுமெழுபரியோன்றண்மையனுய்ச் செங்கதிராயிரமுந்தூணு,
வேராளும்வணநிறுவித்தானுமேற்பரப்பாகியிலங்கலேய்க்கும், யாரா
லுஞ்சொலற்கரும்பொனுயிரக்காணிலைபெறுமண்டபத்தின்மாதோ.

கொற்றவிறில்வெள்ளொருபத்தாங்குடைமுழுப்புகழுங்கூடிற
நில்லை, பொற்றவறக்கட்டவுள்பயல்கோடலினுலெனச்சூழ்ந்துபொங்
குஞ்சீர்த்தி, முற்றுமுறவாளரியாகியபயில்விற்கோளரியாய்முராரிதா
ங்கும், பெற்றியெனப்பொலியுமணிமுடங்குளையமடங்கலணைப்பிறங்
கமாதோ. (௧௧)

செங்கதிரினடுவமர்தண் கலையெனச்செஞ்சடையி னிளந்திங்க
டோன்றச், சிங்கவின்முத்தழற்குடையோனிவனேயென்றியாவர்க
ளுந்தேருமாறு, பொங்குநுதல்விழிபொலியவடியர்பவக்கடல்சுவற்ற
ப்பகழ்சாலோர்கண், டங்கருளாரமுதமழையெவ்வுயிர்க்கும்பொழிந்
தொருகண்டயங்காநிற்க. (௧௨)

குறைவறவின்னிசை பாடும்புலவருக்குவேண்டுமெனிற்கொள்க
வென்று, நிறைவுறுமொண்சங்கநிதிதூக்கிவைத்தநீர்மையெனநிலவுகா
திற், கறையில்பணிலக்குழைவில்விடத்தேவர்மங்கையர்மங்கலநாண்
காத்த,வறைகளக்காருலோசனமுச்சுடர்க்குமொளித்தொடங்கியுறை
யல்லையேய்ப்ப. (௧௩)

பொற்புரிநேர்சடையின்மரகதந்தளிர்த்தாலனையபசும்புல்வாய்க்
கௌவ, நிற்பதுபோலிடக்கையிருகாலூன்றிமேற்றாய்மானிலைப்பவெ
ண்ணில், கற்பமழியினுமழியாக்கூர்க்கணிச்சிமிகையென்றுகழித்தல்
செய்யா, தற்புறவாண்டனமையென்னிவன்கருணையெனவுண்மகி
ழ்ந்தலங்காநிற்க. (௧௪)

பிரணவத்தினுரியபொருளயனென்று மரியென்றும்பேசுவார்க
ள்,காரணநிலைகலங்கிமுகங்கவிழவவிழ்நறுங்கடுக்கைக்கண்ணிமார்பின்

முரண்மிகுமாலூர்தியைக் கண்டேன்கருடசுகங்கொண்மொழிந்திடு வையாலென், றரண்மிகுமேக்கழுத்தமொடுவினவுதல்செய்மணிப்ப ணியுமலங்கித்தோன்ற. (௧௫)

திக்குடையாற்கிதுமிகையென் றுரைக்கவதளுடைதிகழுமரையி ற்சீர்ப்ப, வக்கிரவெள்ளெயிற்றியமனகர்புகுமாசையர்பிறர்தாண்மதி மின்மற்றவ், வுக்கிரனைவணக்குநசையினரித்தாண்மதித்திடுமென் றுரைத்தலேய்ப்ப, மிக்கொலிக்கும்பொற்கழலக்கூற்றுயிருண்மலர்க்கழ லின்விளக்கஞ்செய்ய. (௧௬)

ஆழிமால்வரைச்சுவருண்டாக்கிநடுவிமயவடற்றூணநட்டுப்
பாழிமாமுகடுவெளிவேய்ந்துகதிர்மதித்தீபம்பரப்புஞ்சிற்றி
லூழிதோறும்பலவாப்புதிதுபுதிதியற்றிமகிழ்ந்தோரைசெய்யும்
விழிவாய்ப்பேதைமயில்காயருவல்லியினிடப்பால்விளங்கிவைக (௧௭)

சக்கரவெம்படையாளியுலகிருக்கைக்கங்கையும்வாசவனுலோகம்
பக்கறைநகங்கையுஞ்சடையினிருக்கையேசிறந்ததெனப்புந்திசூழ்ந்து
தக்கதொருவடிவுங்காட்டச்சடையுறவேய்புய...
பக்கமுழிதரவெனவொள்வயிரக்காற்கவரியிருபாலும்வீச. (௧௮)

எண்வடிவத்தொருவடிவாய்முக்கணிலோரருட்கணுயியையேதேர் க்காலாய், பண்மருவுபலகலனிற்றலைக்கணுய்விளங்கும்யாம்பாலமே ற்ற, கண்மருவுதழலவிந்தான்குடையாதவிழிவென் றுகருதிவட்டத், தண்மதியமுடிமீதுநிழற்றலெனவெண்கவிகைதயங்காநிற்க. (௧௯)

பேராலவட்டமொடுசாந்தாற்றிப்பணிவிடையும்பிறங்கச்சில்லோர்
சேராவ்முடனியற்றகறுவிரைத்தூமஞ்சில்லோர்சிறப்பிற்செய்ய
வாராக்கப்புரவிளக்கஞ்சிலர்வயக்கச்சிலர்கண்மலர்மாரிபெய்ய
வேராாநல்யாழ்தழுவித்தும்புருநாரதமுனியினிசைத்தேன்வாக்க.

எதிரிவிகளுறும்பானுகம்பன்வளையாயிரமாயிரம்வாய்தோறும்
பதிதரவைத்தோரிரண்டாயிரங்கைகளானுநணிபற்றியூத
வதிர்கடலேழுஞ்சமழ்ப்பக்குடமுழவின்றடமுகமாயிரங்கடோறு
மதிதருமன்புடைவாணனுயிரங்கைகளுமோச்சிமாண்பிற்றுக்க. (உ௧)

வானநாட்டவர்களியமைந்துமினிதியம்பமணித்தாளமொத்தி, மானமார்தருகொளை வல்விஞ்சையர் பின்னின்றசைப்பமலர்ப்பூங் கொம்பிற, கானவார்கூந்தலரமாதரபிநயக்கைவழிகண்கள்செல்லப், பானனேரக்கண்கள்வழியனஞ்சென்றிடநடனம்பாங்கிற்செய்ய. ()

சிலருளினற்புரிநிக்கிரகமெலாமொருபாங்கர்ச்செப்பவன்பார்
புல்னமைவ்ற்றகச்செயனுக்கிரகமெலாஞ்சிலரொருபாற்புகழ்ந்துபாட
வல்தருமாமறையனைத்துஞ்சிலர்முழக்கச்சிற்சிலர்பல்லாண்டுகூற
நல்னுறுநாத்தழும்பவரவொலிசிலர்செய்திடச்சிலர்கணடியாநிற்ப. ()

வானவர்விச்சாதரர்கின்னரரியக்கர்சித்தர்கண்மாமுனிவர்யோகர்
நானஞ்றுங்குழலரமாதர்களுகரசுரர்களநாகர்பூத
ரானவர்மற்றையர்நெருக்கினந்திபிரான்றன்பணியினமைந்துலாவத்
தானமுறெவ்வுலகுமனிதழைத்தோங்கவீற்றிருந்தான்றம்பிரானே.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

அந்தவேலையின்மான்முதலியோர்நந்தியமலனைப்பணிந்தவனரு ளாற், சந்தமார்திருவோலக்கநேர்கண்டுசாற்றருங்களிப்பினராகிப், பந்தம்வீடுறத்தாள்பணிந்தனரெழுந்தார்பாடினராடினர்மகிழ்ந்தா, ரிந் தநாட்டவமேபெருந்தவமாயிற்றேழையேங்களுக்கெனவிசைத்தார்.()

அவிர்கலைவிரியாதொடுக்கி மார்பொருகையாத்தொருகையின் வாய்புதைத்துக், கவிழ்தருமேனிகொண்டுநிற்பாருட்கண்ணனைப் பரன்கடைக்கணித்துப், புவிமுழுதளந்தோய்மனக்குறையாதுபுகலு தியென்றுவாய்மலரக், குவிமலர்த்துளபத்தொங்கலான்மீட்டுங்கூற்று யிர்குடித்ததாள்வணங்கி. (உ௬)

பராசரன்புதல்வ னின்றனையடுத்துப் பகர்தருமுத்திசாதன த்தை, விராவுறவினுவினெவ்வொருவர்களோவ்வொன்றினைவிளம் புவர்துணிந்து,தராதலத்தியற்றவிதுவெனச்சாற்றுகென்றனன்றன்ன முமுணரே, னிராமயமறைமுற்றுரைத்தவாய்மலர்ந்து நிகழ்த்திட வேண்டுமென்றிரந்தான். (உ௭)

என்னையாளுடையான்றிருவுளமிரங்கி யிங்ஙனமுன்னரெம்பா லே, கன்னலந்தீஞ்சொற்குதலைவாயுமையாள்கனிந்துளம்விளுவிநன் குணர்ந்தா, னன்னவட்குரைத்தபடிவிளங்கிடயாமறைகுவமருங்கதி புகுத்து, நன்னர்மிக்குறுசாதனம்பகருண்மைஞானமேயன்றிமற்றி ன்றால். (உ௮)

திருகிலம்மெய்ஞ்ஞானமுநல்வேதாந்தசிரவணத்தாற் கிடைத்தி டுவ, துருகுமன்புளத்திற்பெறட்படுமதுவுமுற்றபல்சன்மவாசனையாற், பெருகுவைதிகந்தாந்திரிகமேமிருதிபேசியவழியெமதிருதா, ளொரு வறுபூசையுஞற்றலினெப்பின்றுயர்ந்தவெம்மருளினாற்கிடைக்கும், ()

இத்தகுஞானசாதனக்கதிகாரிகளெவராவரென்றிடினே
வைத்தவாச்சிரமுநின்றவைகடந்தோர்மறையவர்புரவலர்நாய்கர்
தத்தமதொழுக்கினின்றுமாயிடுவர்தருமறைக்குலமகளிர்களு
மொத்தநல்வேதமுரைத்திடுஞானமுறுமதிகாரிகளாவார். (௩௦)

சிரவணத்திச்சையுடையசூத்திரருந் தெளிபுராணங்களின்ஞா ன, வரமுறுநிலையையுணரலாம்ஞானம்வயங்குறுபுராணமாதிகளை, விரவுமவ்வவருக்குணர்வுறப்பாடைமிகுமொழிபெயர்த்தநன்குணர்ந் து,புரவுபூண்டுயர்ந்தபுலவர்காப்பியமாப்புதிதுசெய்தளித்திட்லாகும்.

செறிபிரதிபந்தமுக்கியலதிகாரிகடமைச்சேர்வுறுதென்று
மறிதருஞானமெளிதினிவர்க்கேயாகுமற்றையருறலின்மூன்
மறியுமப்பந்தமுடையரேமுத்திமருவுவரெடுத்தவோர்பவத்திற்
குறிகொள்யாகாதிகருமத்தாற்பதமேகூடுவர்முத்திகூடாரால். (கூஉ)

ஆயமெய்ஞ்ஞானமடைவதெவ்விதத்து மாள்வினைமிகையினுயி டினும், பாய்நீர்ப்பரப்பினெளிதினிவடையப் படுவதற்குபாயமொன்றுண்டான், மேயமற்றதுவும்விளம்புதுமளவாமேன்மைசால்பெருமறைமுடிக்குஞ், சேயநம்மடிகள்புகுற்றிமிக்குயர்ந்ததிகிரியம்படைத்திருமாலே. (ருரு)

கண்ணகன்புவியினருளினால் யாமேகதித்தமாதலங்கண்மற்றனேக,மெண்ணவற்றினுள்யாதாயினுமொருபேரெழிற்றலவாசமுற்றினிதெம், மண்ணலங்குறியைவழிபடுவாருக்கமைதரும்போகமெய்ஞ்ஞான,நண்ணுறுமின்பமுத்தியுங்கூடுமவின்றவித்தலங்களினுள்ளும்.

மேவருதெய்வக்கங்கைசூழ்காசிவிருப்பமிக்கதுநமக்கென்று, மாவயினுடம்பினீங்குமெவ்வுயிர்க்குமருள்செறிபிரமதாரகத்தை,யோவவுணர்த்திமுத்தியீத்திடுவோ மொப்பில்த்தலத்திடையொழியாப், பாவவல்லுயிர்க்குமரணத்தான்முத்திபயப்பதற்கையமொன்றின்றே.

பிறங்குதென்கயிலையெனுந்திருத்தலமும்பிரியமிக்கதுநமக்கதன்பா, லறங்கிளர்தீர்த்தமெவைக்குமோருரையுளாயபொன்முகரியுண்டதன்கண்,ணிறங்கிளர்கதிர்வாரங்குருமகநீடியவிதிபாதமிந்நாள்கண் மறங்கெடப்படிந்தோ ராண்டெமையாங்கு வணங்குவோரிணங்குவர்முத்தி. (ருசு)

இயம்பரும்பெருமைச்சிதம்பரமெமக்கிவ்விடத்தினும்விருப்பமிக்கஃதந், நயம்படுதலத்தினுகவிலின்பகடனமோர்யாண்டுகண்டேத்தி
வியம்படுமெப்போழ்துண்டெஃஞெழிலுமேவினனிருப்பினுமன்றன்
சயம்படவீற்றொன்றிரண்டறுமின்பஞ்சார்வதுசத்தியமாமால். (ருஎ)

திருமுதுகிரியைமுத்தாஞ்சூழ்ந்துசெய்துவந்தனையிருவருட்
மருவுவரென்னின்மருவுவர்முத்திமற்றுளதலம்வதிவோரு
மொருவியபாசப்பிணிப்பினராகியுறுவரெம்மடிநிழலுண்மை
வெருவயர்வின்றிக்கதியடைபவரிச்சாதனம்விளைத்திடல்வேண்டும்.

இத்தகுபெருஞ்சாதனத்தினிற் சிறந்ததில்லையாலறிமதியெவர்க்கும், வித்தகமாகவுணர்த்துதிநீயும்விரும்புதியையமற்றிடுதி, மைத்தகார்நிறமாலேயென.த்திருவாய்மலர்ந்தனனென்னை யாளுடையான், பைத்தபாம்பல்குற் றிருமகண்மணாளன் பங்கயன்வியாதன்மற்றுள்ளோர். (ருகூ)

அனைவரும்வணங்கியெழுந்தனர் சிரமேலஞ்சலிகுவித்தனர்நின் று, நினைவருமருளாலெம்முளத்தையநீக்கினையுய்ந்தனமடியே, நனை வருங்கடுக்கைக் கண்ணியாயென்றுநாத்தழுதழுப்பவாழ்த்தினரா, லினைவரும்வாழ்வுபெற்றனர் விடைகொண்டிலகெழிற்கயிலையையகன்றார். (௬0)

தண்டுழாய்முகுந்தன் கமலைபின்ருடரத்தகுபரிசனமுஞ்சூழ்த ரக்கா, மண்டும்யோசனையைந்தகலமுமிரட்டிநீளமும்வயங்குதென்க யிலை, விண்டுவையடைந்தான்முகரியிற்படிந்தான் விழைந்துபலண் டமுமென்றுந், தொண்டுபூண்டிறைஞ்சுங்கடவுளைப்பணிந்தான்றுரிச றவெண்ணியபெற்றான். (௬௧)

சதுமறைக்கிழவன்வெள்ளியமேனித்தாழ்குடற்றையல்பின்ருடர, முதுகிரித்தலத்தையடைந்தரற் போற்றிமுன்னியயாவையும்பெற்றான், கதுமெனக்கருத்தினையநீத்தன்பிற்காசியைவியாதன்சென்றடைந்தான், குதுகுதுப்படைந்துதம்பிராற்போற்றிக் குறித்தவைய னைத்தையும்பெற்றான். (௬௨)

வானவர்முனிவர்வியாக்கிரபுரத்தை மருவினர்வயங்குசிற்சபையின், ஞானநாயகனட்டுவந்தனர்பணிந்தார்நண்ணினரெண்ணியவனைத்தும், யானுமிந்நான்குதலங்களிலொவ்வோர்யாண்டிருந்தமலனைப்போற்றி, யூனமின்ஞானம்பெற்றனன்மலநோயுடங்கொறுத்துயர்ந்தமாதவத்தீர். (௬௩)

ஏழாவது விமலன்வாதராயணன்முதலோர்
சங்கைதீர்த்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம்-எ-க்குத் திருவிருத்தம்-௨௭அ.



உ

## எட்டாவது

## காலவளவையுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

மடுத்தகேள்விவளர்தவத்திர்பொறி
விடுத்துயர்ந்தவியாதன்முன்னேருளம்
படுத்தசங்கைபறித்ததுரைத்தன
மடுத்தகாலவளவைவிளம்புவாம். (௧)

அளவில்சன்மந்தொடர்ந்துரையாடினும்
வளருங்காலவளவைவகுப்பர்யா
ருளநிவாவச்சுருக்கியுரைப்பன்யான்
பளகின்மாதவப்பண்புடையந்தணீர். (௨)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

குறிபெறுமிடமொருபதினைந்து கொண்டதுகாட்டையக்காட்டை, யறிதரமுப்பான்கொண்டதுகலையக்கலைமுப்பான் கொண்டது முகூர்த்த, முறுமதுமுப்பான்கொண்டதுமனிதர்க்கோரகோராத்திரமாகும், பெறுமஃதொருபானைந்துகொண்டதையோர்பிறங்குறுபக்கமென்றுரைப்பர். (௩)

பக்கமோரிரண்டு கொண்டதோர்திங்கள்பகருமத்திங்களோராறு, தொக்கதோரயனமஃதிருவகையாந்துலங்கிடுதக்கணாயனமென், றொக்கவந்தடுக்குமுத்தராயணமென்றுவற்றுண் முன்னயனம்வானவர்க்குத், தக்கவோரிரவுமுத்தராயணமோர்பகலுமென்றுரைப்பர்சான்றோரே. (௪)

மனிதர்க்கெவ்விதமோவவ்விதம்பக்கமாதமற்றயனம்யாண்டமைந்த புனிதவானவர்க்குமன்னவர்வருடம்பொருந்து பன்னிராயிரங்கொண்ட, டினியதாநான்குயுகமெனப்படுமோவிவற்றுண்முன்யுகவருடத்தெண், முனிவிலாயிரஞ்சந்தியங்கிசத்தெண்ணுறெனமொழிவர்.

கரைதருமிரண்டாம்யுகஞ்சந்தியமிசங்கருதுமூவாயிரமறுநூறுரைதருமூன்றாம்யுகஞ்சந்தியமிசமுபயவாயிரமொர்நானூறு வரைதருநான்காம்யுகஞ்சந்தியமிசம்வகுத்தவாயிரமிருநூறு [வார். புரைதருமிந்நான்குகத்தையோர்தெய்வப்புண்ணியயுகமெனப்புகல்

ஓதியயுகமோரெழுபத்தொன்றேகிலொருமனுவந்தரமாகு
மீதியமனுக்களொருபதினால்வர்நீங்குறிற்கமலமென்பீடத்
தாதியம்பிரமற்கோர்பகலாகுமப்பகலேயொருகற்பங்
காதியவினையீரப்பிரமனுக்குக்கரையிரவளவுமவ்வளவே. (எ)

இத்தகுநாண்முந்நூற்றறுபதுசென்றிடினொருவருடமவ்வருட மொத்தநூறெழுழியினிருபராத்தமுமாயொடுங்குவன்மரைமலர்க்கிழவனத்தகுபிரமனுயுளோர்தினமாமரிக்கதுமூன்றுநூற்றறுபான் கொத்ததோர்வருடமதுவொருநூறுகூடிடிலொடுங்குவனவனும். (அ)

சொற்றவிவ்விருவர்மூர்த்தபேதங்கடோன்றியகாரணத்தொடுங்கு முற்றிடுசகமுமொடுங்குமாலனைத்துமொடுங்கிடங்கொடுப்பதுமாயை மற்றவம்மாயையபேதமாய்ப்பரமன்மாமலரடித்தலத்தொடுங்குந் துற்றிடுமபேதமாயினும்வேறாய்த்தோன்றலின்மாயையேயென்றும் ()

நீளவான்மாவினுண்மையைமறைத்து நிற்றலினுற்றமமென்றும் வாளவிர்வித்தையென்னுஞானத்தைமறைத்தலினவித்தையேயென்றுங், கோளுறஞ்ஞானகாரணமாகிக் குலவலின்மோகமேயென்றுமாளுறுசத்துவிலட்சணமாகியமைதலினுலசத்தென்றும். (௧0)

உலகுதித்திடற்குக்காரணமாகியுறைதலிற்காரணமென்று மிலகுகாரியமாகியவுலகாகியிருக்கவுந்தெரிதரப்படாத வலனுறுதலினவ்வியத்தமேயென்றும்வருப்பரம்மாயைக்குப்பெயர்க ணிலவணிபெருமான்றன்வலியாற்கற்பித்ததிங்கிரம்பியகாலம். (௧௧)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

அளவினிகிலமுங்காலவயத்தொடுங்கு மதுவுமசத்தாதலான்மாயையொடுமிலயமாகும், வளமலிகாலமுமுறைத்தமாயையுமம்மாயைமருவுகாரியமுமரனுல்வியாத்தமதா, முளமலியுமுண்மையுருவுடையமாதேவனொருவனேமுக்காலத்தினும்வாதையில்லான், றளர்விலாணிலயமுறுதலுமில்லானவனே சாற்றுதிரிகாலசிருட்டிக்குங்காரணனே. (௧௨)

மதிகுடியனுக்கிரகத்தாற்பிரமன் மாயன்மற்றையோர்க்கவ்வவான்பதங்கிடைக்கலாகு,மெதிரிலவன்வயப்பட்டேயகிலசராசரமுமிருக்குமான்மறையனைத்துமிவ்வாறேயியம்பும், புதியமலர்க்கிழவர்நாரணரளவிலாதார்பூருவத்தி லுரைத்தபடிபோயிலயமானார், வதிதருமுத்தொழிற்குங் காரணனருளாறபிரமன்வயங்குமிராசதகுணசுபாவனேயாகி. (௧௩)

அக்குணசாதனஞ்செய்துகொண்டு படைத்திடுவனூழியான்றமகுணசுபாவனேயாகி, மிக்கநற்சத்துவகுணசாதனஞ்செய்துகொண்டு வியனிலங்காத்திடுவனுயர்மேன்மையுருத்திரன்றான், முக்கியசத்துவகுணசுபாவனேயாகி முடித்திடுவன்றமோ குணசாதனஞ்செய்துகொண்டு, தொக்குறுமிம்முக்குணபேதங்களாலெடுத்துச்சொலுமூவர்மூர்த்திபேதங்களுமனேகம். (௧௪)

மன்னியவான்மாக்களெங்குஞ்சிவசொருபமென்றேமதித்திடார் மாயையான்மறைப்புண்டுநானீ,யென்னமிகுபேதமேகுறித்துழல்வர் முன்னொடுத்தசனனங்களினன்கியற்றியபுண்ணியத்தாற், பொன்னவிர்செஞ்சடைப்பரமனருள் வந்துகூடிற்பொருந்தவவன்சொரூபமுணர்ந்திடலாகுமதனாற், றுன்னியவெமூர்த்திகளைப்பூசிப்பினுமம்மூர்த்திதூயசிவமூர்த்தியெனத்தொழுபவர்நன்குயர்வார். (௧௫)

பகர்தருமெவ்வகைமூர்த்தங்களுமெங்குநிறைந்தபரசிவமேயாயிடினுமேற்றந்தாழ்வுண்டாற், புகரறுமாடியில்வதனமிகவிளங்கித்தோன்றும்புகருறுமாடியில்விளக்கமத் துணையின்றதுபோ, னிகரிலுருத்திரமூர்த்தியிடத்ததிகம்விளக்கநிலைமையின்மற்றைய மூர்த்தத்தத்துணையின்றதனாற், சுகமருளவ் வுருத்திரமூர்த்தியைத்தொழுவோர்பந்தத்துயரகன்றுவினைவிலின்பத்தூமுத்தியடைவார். (௧௬)

மறையெலாம்பரசிவனே பொருளென்றுமுழங்குமற் றையரையொரோவிடத்துச்சொற்றிடினுமுடிவி, னறைதராபதற்பல்புராணங்

களும்படியே யழல்கதிர்நான்முகனெடுமாலிவரை யொவ்வோர்புராணங், குறைவறவேதிமுடிவிற்சிவம்பொருளென்றுணர்த்துங்கூர்ந்தவறிவினிதனையுணர்வர்மதிமுடித்த, விறைபரமென்றுறமுடிவிற்சொலு நூல்களெல்லாமியைகருமத் துயிர்களுணர்வேற்றந்தாழ்வுணர்ந்தே. (கஎ)

எவ்வுயிர்க்குமனுக்கிரகஞ் செயுநிமித்தமாயேயிலங்குதிருத்தில்லைவனநலங்குடிகொள்காசி, செவ்வகையருணசோமநாதமுதுகுன்றந்திகழும்வேதாரணியஞ்செழும்பொழில்சூழாரூர், தெய்வமணங்கமழ்திருக்கேதாரங்காளத்திசிறக்குமிவைமுதலாய வளவில்பலதலத்து, மெய்வளருங்கருங்கூந்தனெடுந்தடங்கட்பாவைநிலவுமொருகூறனமர்கின்றதுணர்வீரே. (கஅ)

எட்டாவது காலவளவை
யுரைத்தவத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம் அ·க்குத் திருவிருத்தம்-உகக.

---

௯

## ஒன்பதாவது

# வராகம் பாதலத்தழுந்திய பாரையெடுத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அடர்புலனவித்தீர்காலவளவையோர்வாறுசொற்றும்
படர்பெருவெள்ளமூடப்பாதலத்தழுந்தும்பாரை
மடவவிழ்மலரோன்மாலாய்வராகமாய்க்கோட்டிற்றாங்கி
யிடர்கெடமுன்போல்வைத்தகாதையுமியம்புவாமால். (க)

சாயுமுன்னொருகாலத்திற்சலப்பிரளையமுண்டாகிப்
பாயபாரனைத்துமூடப்பட்டழுந்தியதுகீழா
லாயவப்பொழுதொடுக்கமாயினசராசரங்கண்
மேயவவ்வெள்ளமன்றிவேறொன்றுகாண்டற்கின்றால். (உ)

அம்மகாசமுத்திரத்தினலரணையிருக்கைப்புத்தேள்
பொம்மல்வெம்முலையோர்பாகப்புராதனனருளினாலே
செம்மலர்ப்பழிக்குமக்கந்திருமுகமங்கைபாதம்
விம்மவொவ்வொராயிரங்கள்விளங்குருமாலாய்த்தோன்றி. (ஙூ)

வயங்கிளர்விருப க்கண் ணன்மலரடித்தியானத்தோடப்
பயங்கிளர்தருகளிப்பிற்பள்ளிகொண்டிருந்தானுக
நயங்கிளர்நரனெனும்பேர்நக்கனேர்கற்பமுன்ன
ரியங்குறப்படைப்பகாரமெனப்பெயர்கொளுமந்நாரம். (ச)

அயனமாக்கொளவிஞராயணனெனுமொருபேர்பெற்று
ன யனமூன் றுடையானுழ்ந்தஞாலத்தையெடுத் துமுன்போ
லியலுறவைத்திடென்றுவெறுழ்வலியுடனுபாயஞ்
சயமுறவளித்தானன்றுணையைத்தலைமேற்றங்கி. (ரு)

மங்குல்கண்படுக்குமுச்சிவரையெல்லாநாணுக்கொள்ளப்
பொங்குபேருருவிற்கோடல்பொருந்திருபான்மருப்புந்
திங்களின்வகிரையேய்ப்பத்திறல்கொளோர்வராகமானன்
கொங்கலர்துளபத்தண்டார்க்குவவுத்தோட்குரிசின்மாதோ. (சு)

பாதலமுழங்கிப்புக்குப்பாரையோர்கோட்டிலேற்றன்
காதுமக்கோட்டிற்பூமியணுவெனக்காணப்பட்ட
தேதமிலருள்பெற்றேருக்கிதுவுமோரதிசயங்கொல்
மேதகுசனலோகத்தர்வியந்தனர்துதிக்கலுற்றர். (எ)

உலகெல்லாமுள்ளடிக்குளொடுக்கியுமொருதற்றுக
நிலவுறவுண்டுங்காக்குநினக்கிதோர்பொருளோவைய
சலசமென்மடந்தைகொங்கைதாக்கிடக்களிக்குந்திண்டோட்
குலவனேதிகிரிச்செங்கைக்கொண்டலேகோதிலானே. (அ)

இருநிலமனைத்துங்காக்குமேந்தலேயின்றேன்மாந்திக்
கருஞிமிறிசைத்தேன்வாக்குங்கமழ்நறுந்துளவத்தாரோய்
திருகியமனைத்துச்செங்கட்சினங்கொள்வாளவுணர்ச்சாடி
மருவமுதமரர்க்கூட்டிமாண்புகழ்பெற்றுளாயே. (கூ)

மகரவாய்ப்பட்டுவாடிவருந்தியோலிட்டசெங்கட்
புகர்முகக்களிற்றைக்காத்தபுண்ணியாபுயல்போல்வண்ண
நிகரில்செங்கமலக்கண்ணநிறைதருமுதல்வாயார்க்கும்
பகரும்பெருமையோய்சிற்பரசிவசொரூபபோற்றி. (கo)

எனத்துதிபுகன்றருள்ளத்தெழுதருமகிழ்ச்சியோடு
கனத்தமேதினியைமுன்போனிறுவியவ்வுருக்கழிப்பி
நனைத்துழாய்மாலைமாலாய்நண்ணியவ்வுருவுமாற்றி
யனைத்துமாக்கிவோன்முன்னைப்பிரமனேயாயினனே. (கக)

ஒன்பதாவது

வராகம் பாதலத்தழுந்திய

பாரையெடுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. அத்தியாயம்-கூ-க்குத் திருவிருத்தம்-நாஎ.

௨

# பத்தாவது

## பிரமசிருட்டியுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

பாயதாமரைமேவியபண்ணவன்
மாயனுய்ப்பன்றியாகிமன்பாதலத்
தேயபாரையெடுத்ததுரைத்தின
மாயவன்செய்சிருட்டியறைகுவாம். (௧)

(எழுசீரடியாசிரிய விருத்தம்.)

மதியறுகிதழிநதியொளிர்சடிலவள்ளலார்பெருந்திருவருளால்
விதியவன்முன்னர்க்கழிந்தனவனைத்தும்விதித்திடமதித்திடும்போழ்தி
னதிசயம்பயப்பவபுத்திபூருவமாவவனிடைத்தமோமயசிருட்டி
யொதிதரதோன்றிற்றதுதமமோகம்புகலுமாமோகந்தாமிசிரம். (௨)

அந்ததாமிசிரமெனவிவைநாளுமவித்தியாபஞ்சகவுருவா
யுந்துறவிருக்குமெனநலோருரைப்பருற்றதுபின்ருேழிலறிவில்
நந்துபாதவமாதியமுக்கியசிருட்டிநன்குதீங்குணர்தருபழக்க [டி
மந்திலின்றிநற்கென்றுளத்துறநினைத்தானமைதர வேறுமோர்சிருட்

இனையவப்போழ்துதிரியக்குசுரோதமெனப்படுசிருட்டியுண்டாயிந்
றனையதுபசுமுன்னாகியசிருட்டியதுசிறப்பின்றெனவேறு
நினைதரவூர்த்தசுரோதமென்சிருட்டிநிகழ்ந்ததுசத்துவகுணத்தாற்
புனைதருமதுதெய்வதசிருட்டியதாம்பொருந்துமச்சிருட்டியுமாதோ.

சாதகமின்றென்றுளத்துன்னும்போதுதயங்கிடுமிராசதகுணத்தான்
மேதகர்வாக்குசுரோதமென்சிருட்டிவிளைந்ததாலதுநரர்சிருட்டி
தீதறமீட்டும்பூதபிரேதாதிகள்சிருட்டியுமுளைத்ததுவா [வீர்
லோதுமிவ்வைந்துமுரைப்பர்வைகிருதசிருட்டியென்றுத்தமமுனி

வருமகத்துடையசிருட்டிமிக்கெழுதன்மாத்திரையாயசத்தாதி
யொருவறுசிருட்டியிந்திரியங்களுவைக்கதிட்டானதெய்வங்கண்,மரு
விபசிருட்டியாயவிம்மூன்றும்வளர்பிராகிருதநன்சிருட்டி, திருகில்
கௌமாரசிருட்டியோடொன்பான்சிருட்டியாமவைவிரிக்குவனே.

மகத்துடைச்சிருட்டி முதலெனவகுப்பர் வயங்குசத்தாதியே
யிரண்டாம், பகுத்தவிந்திரியா தியவொருமூன்றும் பகர்தருவாதிய
நான்காம், வகுத்திடுவிலங்கின் சிருட்டியே யைந்தாம் வானவராறு
மானிடரேழ், மிகுந்தபூதா தி யெட்டுகௌமாரம்விளங்குமொன்பா
னெனமொழிவர். (எ)

மற்றுளசிருட்டிபேதங்க ளனைத்தும்வகுக்குறின்வளருமான்முன்னர்ச், சொற்றகௌமாரசிருட்டியின்பேதஞ்செல்லுகேன்கேண்மினப்பிரம, னற்றவச்சனகன்சனாதனன்சனந்தனன் சிறப்பினிலுயரிருபு, மற்றுளச்சனற்குமாரனைவரையுமானதசிருட்டிசெய்தனனே.

இவர்கண்மானதபுத்திரரெனப்பெயர்பெற்றெதிரில்வைராகமிக்குளராய்க், கவர்படுமனஞ்சற்றின்றியெப்போதுங்கண்ணுதற்றிருவடித்தியானத், தவமலிதரநன்கிருந்தனர்பின்னர்ச்சதுமுகன்படைப்பினிற்சிறந்தா, மெவர்நமக்கிணையென்றெண்ணினன்செருக்கியெம்பிரானருள்வலிமறந்து. (௯)

ஆதலின்மாயைமூடிடப்பட்டேயயர்த்தனன்படைத்திடுதொழிலு, மேதமுற்றிருந்தானஃதுணர்ந்தவன்முன்னிணர்த்துழாய்மாலையான்சென்று, காதலிற்பலபோதனைசெய்துமறைந்தான்கருகிருண்மாயைசற்றகலப், போதமுற்றனன்சற்றத்திருநெடுமால் பூங்கழன்மனத்துறக்குறித்து. (௧௦)

படைத்திடுதொழிலை யானினிதடையப்பண்ணுகென்றருந்தவம்பலநா,ளடைத்தவறிலாதுபுரிந்தனன்றிருமாலுமளித்திடும்வலியிலமென், றடைந்தவெண்ணுளத்தனாயவன்முன்னரணுகிடாதிருந்தனன்பிரமன், விடைத்தெழுகுரோதமேற்கொளத்துயராய்விழிகணீருகுத்தனன்மாதோ. (௧௧)

மலர்மகன்றுயர மறிந்துதன்செய்ய மலரடியென்முடிக்கணியு, மிலகுசெஞ்சடையோனுலகின்யாவருஞ்செயிதமகிதங்கண்முற்றுணர்ந்து, குலவிருபயனுமளிப்பவன்றானேயாதலிற் குணமிகுதன்னை நிலவுறத்தியானஞ்செய்யுமாசிறந்தநினைவவற்களித்தனன்மாதோ. ()

மலைமகளொருபாலெம்பிரானருளான்மற்றவன்மறைமலர்ப்பாத, நிலையுறப்புருவநடுவவிழுத்தநிறுத்துபுதியானஞ்செய்திருந்தான், கலைமகள்களபக்கனதனமுழக்குக்கமலமாலிகைப்பணைத்தோளான், மிலைமதிப்பெருமா னவன்றியானித்தவியவிடநின்றுதோன்றினனால்.

மரையொருபாகப் பிரான்வெளிப்படலும்பதைபதைத்தெழுந்தனன்பணிந்தான், கரையறுமகிழ்ச்சி மீக்கொளச்சூழ்ந்தான் காதலிற்றுதிபலசெய்தான், புரையுறுசெருக்கான்மயங்கினேனடியேன்போதநல்குபுதடுத்தாண்டாய், நரைவிடைப்பாகாபடைத்திடும்பகுப்புநாயினேற்குணர்த்துதியென்றான். (௧௪)

அந்தணன் மொழிகேட்டென்னையாளுடையானலங்குதன்கூற்றினின்றனேக, மைந்துருத்திரர்கடோன்றிடச்செய்தான்மலரவன்பின்னரும்வணங்கிப், பந்தமார்முதலீறுள்ளமானிடரைப்படைத்திடவேண்டுமென்றிரந்தான், சந்திரமௌலிநகைசெய்துதுக்கசகிதரைத்தோற்றிடேன்யானே. (௧௫)

*இத்தகுசிருட்டி யனைத்தையுநீயேயியற்றுதி யியற்றுமாறளித் தேர்,தத்துறுபவத்துன்பொழிந்துயிருய்யத்தக்கனுமூர்த்தியாயாமே யுத்தமவனுக்கிரகம்புரிந்திருப்பேமென்றருக் கரந்தனன் பெம்மான், வித்தகவுருத்திரர்கள்சுபகுணமேவிளங்குயிர்ச்சிருட்டிசெய்தாரால்.

அன்னவர்செய்யுஞ்சிருட்டியுமம்மானருளினுற் றன்வயத்தாக்கி த், தென்னவிர்கமலப்பொருட்டிஞேன்சத்தாதிகளையும் பூதமைந்த னையுந், துன்னுபஞ்சீகரணஞ்செய்துதூலஞ்சூக்குமமாம்வளியழனீர், மன்னுமண்வரைவாரிதிதருவாதிவருகலைமுதல்யுகமீறுய். (கஎ)

பேர்தருகாலமனைத்தையும்படைத்துப்பின்னருஞ்சாதகராக
வார்தருவிழியின்மரீசியையிதயத்தவிர்பிருகுவைச்சிரமதனிற்
சீர்தருமங்கிராவினையபானவாயுவிற்றிகழ்கிருதுவினை
யேர்தருவியானனிற்புலகனையுதானனினெழிற்புலத்தியனை. (கஅ)

தகுபிராணனிற்றக்கன்றனை நிறையுஞ்சமானவாயுவில்வசிட்ட னைச்சீர், புகுதருசோத்திரத்தினத்திரியைப்பொருந்துறப்படைத்த னனிவரைச், செகுவினைதவிர்ந்தநவப்பிரமரெனச்செப்புவர் சிறந்தி டுதரும, நகுதருசங்கற்பத்தினிற்றேன்றநன்கியற்றினனந்தத்தருமம்.

பகர்நவப்பிரமர் பாலனஞ்செய்யப் பட்டிருந்துயர்மனுச்சொரூ பம், புகரறவடைந்ததனந்தரம்பிரமன்புகல்சுரரைச் சகனத்தில், நிக ரறச்சிருட்டித் தவ்வுடலொரீஇயோர்நெறியுடலடைந்தனன்விட்ட, தகவுடன்மனிதர்க்கிரவெனுங்கால்சொரூபமாய்த்தயங்கிற்றுமாதோ.

ஆயவப்பிரமனச்சரீரத்தினவிருஞ்சத்துவகுணமதிகம், பாயநன் முகத்திற்றேவர்கடோன்றப்பண்ணியவ்வுடல்விட்டுவேறேர், தூய சத்துவநற்குணப்பிரதானச்சுடருடலடைந்தனன்விட்ட, காயமான வர்க்குப்பகலெனுங்கால சொரூபமாயிருந்ததுமாதோ. (உக)

தென்புலத்தவரைப் படைத்தனனந்தத் திகழுடல்விடுத்தன னதுவே, வன்புறுசந்திகாலமாகியது மற்றுமோருடலினையெடுத்து, மன்பல்மனிதரப் படைத்தொரீஇயினனவ்வுடலையும்வயங்குமவ்வுட லே, மின்படுசந்திரிகையுடைச்சொரூபமாய்விளங்கியது மென்மே லும். (உஉ)

மீட்டிராசதசம்பந்த மாகியமெய்விழைந்தெடுத்திராக்கதர்தொ குதி, கோட்டுடலரவம்பூதகந்திருவாதிகளெலாங்குறிபெறப்படைத் தான், வாட்டமின்மற்றேர்மெய்கொடு பறவைவளரிமிலேறுவாம் பரிமா, நீட்டுகோட்டிபங்கோகனைமற்றைவிருகநிரையெலாம்படை த்தனன்பின்னும். (உங)

முறைதருமறையினக்கினிட்டோம முதலியயாகம்பல்விதிக, ணிறைதரப்படைத்தான்முன்புபஞ்சீகரணஞ்செயநின்றமாபூதங், குறைவில்காரணமா யிருந்ததெவ்வுயிர்க்குமென்றுரைப்பார்குணப்பெரியோர், கறைமிடற்றிறைவனருளினாற்செழுந்தேங்கமலநாண்மலரணைக்கிழவன். (உ௪)

(கலிவிருத்தம்.)

இனையவாறுலகெலாமியற்றியாவரும்
புனையுமேழ்மகங்களும்பொலியச்செய்தனன்
றுனையவேதமோமயசொரூபமுற்றனன்
வினைவலிதொலைத்தமெய்த்தவத்துமேலையீர். (உ௫)

பத்தாவது பிரமசிருட்டி
யுரைத்த வத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம் ௧0-க்குத் திருவிருத்தம் ௩௩௨.

---

உ

பதினொன்றாவது

# இரணியகருப்பசிருட்டியுரைத்த வத்தியாயம்.

(கலிநிலைத்துறை.)

அரணியிலெழுந்தழலினைவளர்க்குமந்தணீர்
முரணிலையுலத்தவனருள்பெறுநான்முகமுளான்
றரணிமுனனைத்துஞ்சிருட்டிசெய்முறைமைசாற்றின
மிரணியகருப்பசிருட்டியின்விசேடமியம்புவாம். (௧)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அடர்சமுசாரக்கேதுவாகியதமோமயத்துப்
படர்தருசொரூபமுற்றபதுமன்முன்படைத்தயாவு
மிடரொரீஇவிருத்திமேவவெண்ணியச்சொரூபம்விட்டான்
றொடரிரணியகருப்பசொரூபத்தையடைந்தானமாதோ. (உ)

இயம்பிரணியகருப்பசொரூபமுமிதனோடம்ம
வியங்கலில்சூத்திரான்மாவுறுசொரூபமுமென்ஞான்றுந்
தயங்குமந்தரியாமிக்குத்தகுசொரூபமுமிம்மூன்றும்
பயம்பெறவகுத்துச்சொல்வாம்பாயமாதவத்திர்கேண்மின். (௩)

சூக்குமபூதமாயதொக்கசத்தாதியைந்திற்
போக்கில்சத்துவகுணத்தாற்பொருந்தியசமட்டியான
தூக்குஞானேந்தியங்களைந்தையுந்தோற்றுவிக்கு
மூக்கமார்ஞானசத்தியுதித்தவோரைந்துமாதோ. ௪

இன்னுமச்சூக்கபூதத்தினிலிராசதகுணத்தாற்
றுன்னியசமட்டியாங்கன்மேந்தியத்தொகையையாக்கும்
வன்மைசேர்கிரியாசத்தியைந்தமுற்பத்திவாய்ந்த
நன்மைசேரந்தஞானசத்திகளைந்துங்கூடி. (௫)

கருதுபல்லுயிர்க்குமந்தக்கரணமாமதனுளொன்று
மருவியசதுமுகத்தன்வயங்குமும்மூர்த்திகட்குட்
பெருகிரணியகருப்பனெனும்பெயர்பெறுவான்மற்றை
யருகலில்கிரியாசத்தியைந்துநற்சமட்டியாகி. (௬)

மருவுறுபிராணமாதிவளியைந்தின்சமட்டியான
வருமைசேர்பிராணவாயுவாயிற்றன்னதிலிருக்குங்
கரியவன்சூத்திரான்மாவெனும்பெயர்பெறுவான்கண்டீர்
தெரியினிவ்விரண்டிடத்துஞ்சேர்ந்துறைதருமயேசன். (௭)

அந்தரியாமியென்றேயருமறையையமின்றிச்
சந்ததமெடுத்துச்சொல்லப்படுவனச்சதுமுகன்பின்
பந்தமார்மாயையாற்றனுடலிருபாகம்பண்ணி
யுந்துமோர்பாகமாண்மற்றொருபாகம்பெண்ணுமானான். (௮)

அன்னபெண்பால்விராட்டுச்சுராட்டமைசம்மிராட்டே
யென்னவந்துதித்தார்மூவரினையமூவருட்சுராட்டு
பன்னருந்தூலபூதபஞ்சகசொரூபமாகி
மன்னெடும்பிரமாண்டத்தின்வயங்கபிமானியாவன். (௯)

உயர்வுறுசம்மிராட்டென்றுரைப்பவன்பிரமாண்டத்தி
லயர்வில்சூக்குமசரீரவதிகாரியாவன்மற்றை
யியலுறுவிராட்டெனும்பேரிறைவன்காரணசரீர
நயவபிமானியாவனென்மறையுணர்ச்சிமிக்கீர். (௧௦)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பகரிம்மூவருக்குள் விராட்டெனப்படுவோன்படர்மனுவையுஞ் சதரூபப், புகரில்யோகினியையும்படைத்தனனப்பொங்கெழில்யோகினியென்பா, ணிகரறுமனுவைப்புணர்ந்தனள்பிரியவிரதனைநீடிய கீர்த்தி, யிகவிலுத்தானபாதனையீன்றாளிவருளுத்தானபாதன்றான்.

கருநெடுந்தடங்கட்செய்யவாய்வெண்பற்கன்னியரிருவரையீன்றான்
மருவுமற்றவர்தம்பேர்பிரசூதிவயங்குமாகூதியென்றுரைப்பா
ரருகிலைநசுப்புப்பிரசூதிதன்னையடர்வலித்தக்கனென்பவன்சேர்ந்
திருகிலம்வியப்பவேந்தெழிற்சிரத்தையேமுதன்மாதர்பன்மூவர் (௧௨)

மொய்மலர்க்கூந்தற்சிற்றிடைக்கியாதிமுதன்மடவார் பதினொருவர், மெய்பெறவருமிவ்விருபத்துநான்குமென்னடைமாதரையளி

த்தான், மையவாங்கருங்கட்செய்யவாய்ப்பசுவேய்வாட்டியதோட்டு
ணையிவரால், வையமேத்தெடுப்பத்தோன்றியவுயிர்கள்வரையறைக்
கடங்கிடாமாதோ. (௧௩)

சேயரிநெடுங்கட்சிற்றிடைமற்றைச்சிறந்தவாகூதியென்பாளைப்
பாயசீர்மிருத்தமானசப்பிரசாபதிபுணர்ந்தெக்கியற்பெற்று
னேயவெக்கியனுந்தவவலிப்பன்னீரிருடியர்ப்படைத்தனனிவ்வா
றுயபன்முனிவர்தோன்றினர்கருமவனுரூபமாய்ச்சிவாக்கினையால். ()

தொக்கபேருலகிற்சராசரமனைத்துந் தோன்றுதலியற்கையே
யென்றுந், தக்கதாங்கருமவளவையாலென்றுஞ் சாற்றுவர்சிற்சிலர்
தெரியார், மிக்கமாமறையாகமமுதலெவைக்கும்விரோதமாமிவ்வுரை
யுணர்மின், செக்கரஞ்சடைமாமுநிவர்பூருவத்திற்றேர்ந்தனர்தவத்தி
னுவிதனை. (௧௫)

ஏர்பெறவதுவுமுரைப்பம்வானளாவுமிமயமால்வரையணிமையிற்சீ
ராருமோரிடத்திற்சயிமினிவியாதனக்கபாதன்களாமாவி
பார்புகழ்சுமந்துபயிலவன்கபிலன்பதஞ்சலிமோதகன்முகுந்தன்
கூருமொள்ளறிவாங்கிரசன்கணாதன்குணமகாமதிபரந்தபனே. (௧௬)

இலிகுசன்வன்னிவச்சிரதந்தனின்பவித்திரன்களாரூபன்
மெலிவில்வித்துவேடிநயக்கவித்துவசன்வேணுவாகனன்காலரூபன்
மலிமதிவேதக்கியன்மகாகாலன்வால்வலனின்னமுஞ்சில்ல
வொலிபுகழ்முநிவர்குழீஇயினர்சூழ்ந்தாருயிர்களுற்பத்தியாவதுதான்

காலத்தினாலோகருமத்தினாலோகருதிடுமாயையினாலோ, வால
த்தினாவின்னமுதமாக்கியநம்மடிகளாலோவறிந்திலமாற், சீலத்தினு
யர்ந்தமுநிவிர்காளெவனோதேர்ந்திடினியற்கையுமன்று, பாலத்தின்
விழியோனருளினாற்றெளியப்படுவதாலிதுவெனத்துணிந்தார். (௧௮)

அதிசயமானதவத்தினைப்பலநாளனைவருமர்வயிற்புரிய, மதிநதி
பொதியுஞ்செஞ்சடைப்பெருமான்மகிழ்ச்சியின்வெளிப்படநின்றான்,
விதியினுஞ்சிறந்தமுநிவரர்கண்டார்விரைந்தெழீஇப்பணிந்தனர் களி
த்தார், துதிபலபுரிந்தாரஞ்சலிகுவித்தார்சூழ்ந்தனர்துள்ளினர்மாதோ

சங்கைமுற்றொழியக்குடந்தமுற்றெதிரேசார்ந்துநின்றார்தனியிமய
மங்கையோர்பங்கன்கருணையூற்றெடுப்பவாய்மலர்ந்தருந்தவமுநிவீர்
பொங்கியசகத்தினுயிர்களுற்பத்திபொருந்தியமாயையினாலுந்
தங்கியகருமங்காலத்தினாலுந்தனித்தனியாவதின்றுணர்வீர். (௨௦)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.
அன்றேபல்லுயிர்க்குமுளகருமத்தைப்பற்றுவக்கருமவீக்க
நின்றேகும்பரிபாககாலமுணர்ந்துறுமாயைநிறைநஞ்சத்தி
குன்றாதமுதறுணைக்காரணமாகக்கொண்டருளிற்குலவும்யாமே
நன்றாகுநிமித்தகாரணமாகியாக்கிடுவேநாளுநாளும். (உ௧)

என்றருளித்திருவுருவமறைந்தனனெவ்விடத்துநிறைந்திருக்கு மெம்மா,னென்றவுணர்ந்துறுவரெலாஞ்சங்கையொழிந்தளவறுபேரு வகைபூத்தார், மன்றநடம்புரிபெருமானருள்வாழிவாழியெனவாழ்த் திவாழ்ந்தார், நன்றறிதனின்றுபொறிவென்றுயரொன்றினையுணர் ந்தநலத்தினீரே. (உஉ)

௧௧-வது இரணியகருப்பசிருட்டியுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௧௧-க்குத் திருவிருத்தம் ௩௫௪.

---

உ

பன்னிரண்டாவது

## ஜாதிவரலாறுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

சீரிரணியகருப்பசிருட்டியின்விசேடஞ்சொற்றும்
பார்புகழ்முனிவீர்முன்னர்ப்பைந்தமிழ்முனிவனுள்ளத்
தார்தரப்பரமன்பாற்கேட்டறிதரப்பட்டதாய
வார்கெழுபற்பல்சாதிவரலாற்றையியம்புவாமால். (௧)

சகமெலாம்பூருவத்திற்சலப்பிரளயத்தின்மூழ்கிப்
பகவருமந்தகாரம்படர்தரவிருந்தகாலை
முகமொராயிரங்கடோன்றமுராரிபாற்கடற்கணெம்மா
னகவிதழ்மலர்த்தாள்சிந்தித்தறிதுயிலமர்ந்தானன்றே. (உ)

அன்னமானுபித்தானத்தாயிரங்கதிர்போற்செய்ய
பொன்னவிர்கமலமொன்றுபூத்திருந்தஃதப்பூவிற்
பன்னகாபரணனுணைப்படிசகத்துயிர்படைப்பான்
மென்னடைப்பனுவலாட்டிவிழையுநான்முகனுதித்தான். (௩)

மதுமடையுடைக்குஞ்செந்தாமரைமலர்ப்பீடமேலோன்
விதுமுகத்தினின்முன்றோற்றவிளங்குவாசனையான்முன்னோர்
கதுமெனமடவாரோடுமுதித்தனர்கவின்செய்தோளின்
வதுவைசெய்மடவாரோமென்னவருதித்தாரன்றே. (௪)

ஊருவினாய்கர்மாதருட் னுதித்தவராற்பின்னோர்
சாருமாமடவாரோடுந்தாளிடையுதித்தாராக
வாருமிந்நால்வர்கூட்டத்தாயினபற்பல்சாதி
யோருமாறுரைப்பமற்றீதுலகுபகாரமாமால். (ரு)

குலமுயராணுந்தாழ்ந்தகுலமுறுபெண்ணுங்கூடி
யலமறப்பிறந்தமைந்தனனுலோமனென்னும்பேரான்
குலமுயர்பெண்ணுந்தாழ்ந்தகுலம்வருமாணுங்கூடி
வலனுறப்புணர்ந்துபெற்றவன்பிரதிலோமனாவான். (சா)

மருவனுலோமத்தந்தைவளர்பிரதிலோமத்தாய்பா
லொருவறப்பிறந்தபிள்ளையுறுபெயரந்தராளன்
றருபிரதிலோமத்தந்தைதருமனுலோமத்தாய்பால்
வெருவறப்பிறந்தமைந்தன்விராத்தியனென்னும்பேரான். (எ)

மறையவர்குலத்துமாதர்மணந்தவனிருப்பச்சோர
மறையவற்கூடியீன்றமைந்தன்குண்டகனேயாவன்
மறையவர்மடவார்பூண்டமங்கலமிழந்துசோர
மறையவற்கூடியீன்றமைந்தன்கோளகனேயாவன். (அ)

மன்னவர்மகளிராயுமறைக்குலத்தவனைக்கூடிப்
பொன்னெனவுயிர்த்தபிள்ளைபொருந்துபேர்சவன்னனென்பார்
மன்னவர்மகளிர்சோரமறையவற்கீன்றசேய்க்கு
நன்னிலத்தவர்சொல்வார்நக்கத்திரசிவகப்பேர். (கூ)

நாய்கர்தம்மகளிர்வேதநற்குலத்தவனைக்கூடி
யாய்தரவுயிர்த்தபிள்ளையம்பட்டனெனும்பேருள்ளா
னேயுமம்மாதர்பார்ப்பாற்கிசையதருகரவினீன்ற
சேய்பெயர்கும்பகாரன்சேருநாவிதனென்பேரும். (கo)

அந்தணன்சூத்திரப்பெணணிமுலைகுழையப்புல்ல
வந்திடுமைந்தன்பாரசவனெனவகுப்பர்யாருஞ்
சந்தவம்மடவார்சோரந்தனின்மறையோனைக்கூடி
நந்திடவுயிர்த்தமைந்தனிடாதனென்றுரைப்பர்நல்லோர். (கக)

பேரெழிற்றவுடியந்தப்பெண்ணுக்குமறையோனுக்கு
நாருறவுதித்தபிள்ளைநாபிதனென்னும்பேரான்
பார்கொள்சூத்திரற்குநாய்கர்பாவைக்குமுதித்தவாட்க
ணேரயோகவப்பெண்பார்ப்பாற்கீன்றசேய்பிங்களன்பேர். (கஉ)

சிற்றிடைப்பெரியகொங்கைத்திரும்மறைக்குலத்துமாதைக்
கொற்றவன்கூடியீன்றகுமாரன்பேர்சூதனென்பார்

பொற்றடமகுடவேந்தன் போற்றுவேதியர்தம்மாதை
யுற்றசோரத்திற்கூடவுதித்தவனிரதகாரன். (௧௩)

மன்னவன்குலத்துமங்கைமணந்தவனிருப்பச்சோர
மன்னவற்புணர்ந்துபெற்றமகன்பெயர்போசனென்பர்
மன்னவன்றனக்குநாய்கர்மங்கைக்குமுதித்தசேய்க்கு
மன்னவுண்டாகுமாகிட்டியனெனவழங்குமோர்பேர். (௧௪)

புரவலன்வணிகர்சாதிப்புணர்முலைப்பொற்பூங்கொம்பைக்
கரவினிற்கூடியீன்றகான்முளைப்பெயரம்பட்ட
னரவகலல்குற்பின்னோரணங்கினைமன்னன்கூடத்
தரணியில்வந்தமைந்தன்றவுடியந்தப்பேர்பூண்பன். (௧௫)

வணர்நறுங்கூந்தற்பின்னோர்மாதைமன்னவன்சோரத்திற்
புணர்தரவந்தோன்சூலிக்கியனெனுமொருபேர்பூண்பன்
பணவரலல்குற்செவ்வாய்ப்பார்ப்பனியுலகாள்வேந்தை
மணமுறப்புணர்ந்துபெற்றமைந்தன்பேர்கத்தாவென்பர். (௧௬)

பண்ணவாமின்சொற்செவ்வாய்ப்பார்ப்பனிகரவினீர்சூழ்
மண்ணவாமரசற்கூடிவருமகன்பிலேச்சனென்பான்
புண்ணவாம்வைவேன்மன்னர்பூவைநாய்கனைச்சேர்ந்தீன்ற
கண்ணவாமைந்தன்பேர்மாகதன்சீலகனும்பொருந்தும். (௧௭)

கருந்தடநெடுங்கணாய்கர்கன்னியைக்கரவின்மன்னன்
பொருந்தவந்துதித்தபிள்ளைபுளிந்தனென்றுரைக்கும்பேரான்
மருந்தெனவசியன்மாதை வசியன்சோரத்திற்கூடத்
திருந்தவந்துதித்தபிள்ளை திகழ்மணிகாரனாவன். (௧௮)

கருங்குழற்சூத்திரப்பெண்கடிதடமூழ்கிநாய்கன்
பெருங்கனகம்போற்பெற்றபிள்ளையுக்கிரப்பேர்பூண்பன்
மருங்குறேய்ந்தொழியவிம்மிவருமுலைச்சூத்திரப்பெ
ணொருங்குநாய்கனைச்சோரத்துற்றிடவந்தோன்கடகாரனே. (௧௯)

சுந்தரமறையோர்மாதுசூத்திரன்றடந்தோள்புல்ல
வந்தகான்முளைப்பேர்யாரும்வகுப்பர்சண்டாளனென்று
பந்தணிவிரலார்செங்கைப்பார்ப்பனமான்பின்னோனை
யுந்துசோரத்திற்கூடவுதித்தவன்பாகுதாயன். (௨௦)

பொற்பிதிர்பரந்தகொங்கைப்புரவலர்குலத்துமாதை
யற்புறுபின்னோன்கூடவாங்குதித்தவன்வைதேகன்
மற்படுபுயத்துமன்னர்மங்கைபின்னோன்றோள்கூடி
வற்புறுகரவிற்பெற்றமைந்தன்பேர்புலதனாமால். (௨௧)

கருகிருட்கூந்தனுய்கர்கன்னியைப்பின்னேன்கூடி
மருவவந்துதித்தோனுக்குவர்த்தனசாலிகன்பேர்
திருகுறுசோரத்தாற்சூத்திரனலநாய்கர்கன்னி
பருகிடத்தோன்றினேற்குப்பகர்வர்சத்திரியெனும்பேர். (உஉ)

பின்னவன்பின்னேர்மாதுபெருமுலைத்தடத்திற்றுஞ்சி
மன்னியகரவிற்றந்தமகன்மாலாசிதனேயாவன்
சொன்னவம்பட்டமாதின்றேளிணைசவன்னன்புல்ல
நன்னயத்துடனுதித்தோனர்த்துகனென்னும்பேரான். (உ௩)

நிரைவளைக்கரணமங்கைநேர்மாகிட்டியற்புணர்ந்து
தரையிடையுயிர்த்தஙமைந்தன்றக்ககனிரதகாரன்
கரையும்வர்த்தகியுலோககாரனேகருமகாரன்
வரைசெயிவ்வைந்துபேரான்மற்றவனென்பர்மாதோ. (உ௪)

உழுவவின்மறையோர்மாதையுக்கிரனென்பான்வீழ்ந்து
தழுவவின்வந்தமைந்தன்றக்கனென்றுபேரான்
செழுமணிவசியர்மாதைத்திகழுமுக்கிரப்பேரோன்சேர்ந்
தொழுகலிற்பிறந்தபிள்ளைக்குறுஞ்சாமுத்திரனெனும்பேர். (உரு)

அந்தணர்மாதையேனுமரசர்தம்மாதையேனு
மைந்துறுநிடாதன்கூடவருசேய்நாபிதனேயாவன்
கொந்தலர்க்கூந்தன்முன்னேர்குலப்பெணுபிதனைக்கூடி
விந்தையிற்பெற்றபிள்ளைவேணுகனென்றுபேரான். (உசு)

வாணுதன்மன்னர்மங்கைவயங்காபிதனைச்சேர்ந்து
பேணுறப்பெற்றபிள்ளைபெயர்சொலிற்கருமகார
னேனுறுதவுடியந்தனியைந்தபார்ப்பனியைக்கூடக்
காணுறத்தோன்றுமைந்தன்பெயர்பலகண்டனுமே. (உஎ)

நிடாதனும்வசியமாதுநேர்ந்திடவுதித்தோனுக்குந்
தடாவலிவைதேகற்குந்தழுத்திறுமார்துவிம்மும்
படாமுலைசுமக்கலாநூற்பகவிடைப்பார்ப்பனிக்கும்
விடாதுவந்துதித்தோனுக்கும்விளம்புவரிரசகப்பேர். (உஅ)

தூரமாஞ்சண்டாளற்குந்தூமறைக்குலமாதுக்குஞ்
சோரமின்றுதித்தமைந்தன்சுவபசனென்னும்பேரான்
கோரமாஞ்சுவபசற்குங்குலம்புரிபார்ப்பனிக்குஞ்
சாரமாயுதித்தமைந்தன்றகுபெயர்குகபனுமால். (உ௯)

நீதறுநாய்கர்மாதைச்சேர்ந்துசண்டாளன்பெற்ற
காதலற்குறுபேர்தண்டகபோலகனென்பராய்ந்தோர்
மேதகுபின்னேர்மாதைவிழைந்துசண்டாளன்சேர
வாதலையடைந்தமைந்தனுசிரயிகப்பேர்பூண்பன். (௩0)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பின்னவர்மாதுங்டாதனைப்புணரப்பிறந்தவன்பைரவனென்பான்
பின்னவர்மாதுமாகதற்புணரப்பிறந்தவன்கரண்டனென்றுரைப்போ
மன்னவர்மாதுமாகதற்புணரவந்தவன்பெறுபெயர்கனகன் [ன்
மன்னவர்மாதுகனகனைப்புணரவந்தவனுத்பலனுமால். (௩௧)

தறையயோகவற்கும்பார்ப்பனிக்குஞ்சேய்சருமகாரப்பெயர்பெறுவான், மறைவிராத்தியற்குமறைக்குலமகட்கும் வந்தவன்வந்திகனென்பான், முறைபுரியரசவிராத்தியனுக்குமொய்குழலரசமாதினுக்கு, நிறைவுறப்பிறந்தோன்பெயர்சொலிற்சல்பனிகழ்த்துவர்மல்லனேயென்றும். (௩௨)

மல்லனைப்புணர்ந்து விச்சிலைமாதுவயிறுவாய்த்தவனடனுகுஞ், சொல்லியநடனுக்குதித்தவன்கரணன்றெருடரவற்குதித்தவன்றுவட்டா, புல்லியதுவட்டாமன்னவர்மகளைப்புணரவந்தோன்றிரமிளனுவல், வல்லியைவசியவிராத்தியன்வசியமாதுறவந்தவன்சுதன்வன். (௩௩)

சொற்றிடுவெசியவிராத்தியன் வசியத்தோகையைச்சோரத்திற்புணர்ந்து, பெற்றிடுபிள்ளையருடணவற்குப்பிறந்தவன்மைத்திரனவனுக்,குற்றிடுமகன்சாத்துவதன்மைத்திரனுக்குதித்தமைந்தற்கும்வைதேகன், பற்றிடுமதற்குமாதங்க னெனும்பேர்பாரெலாம்பகர்ந்திடுமென்றே. (௩௪)

ஆருமாதங்கற்குதித்தவன்சூதனவனிடைத்தோன்றினேன்றசியு
சேருமத்தசியுக்குதித்தவன்மாவாகாரனுற்செறிபிரதிலோமஞ்
சாருங்டாதன்மைந்தன்கைவர்த்தன்றகுநீலகாரவொண்ணுதற்கு
நேருமயோகவனுக்கும்வந்துதித்தோனிலாதிவனீனவிக்கிரேதா.

அன்புறுகாரோசருமகணிடாதனணிநலங்கூட்டுணைப்பிறந்தோன்
வன்புறுசருமசீவியென்றுரைப்பர்மற்றுமுள்ளனவுரைக்கடங்கா
வின்புறுமுமக்குச்சங்கிரகமதாவியம்பினேமேவன்றன்சாதி
மூன்புறுமொழுக்கப்படிநடந்திடுவான்முத்தியையடைபவனவனே.

எனமறையியம்புங்கருமத்தின்சாரத்தியையுமிச்சாதிபேதங்கள்
வனமலிமிருகாதிகட்கிலையுலகின்மனிதர்க்குமாத்திரமுண்டா
லுனலுறிற்பூதசம்பந்தநூலவுடற்கன்றியுயிர்க்கில்லையேனு
மினவுயிருடலேநானெனவபிமானித்தலினிலையெனப்படாதால். ()

உயிரெல்லாந்தமதுண்மையையறியாமலுறுமறைப்பனுதியே யுள்ள, செயிரினுவுடனுனெனுமபிமானஞ்சேர்ந்ததிப்பந்தவஞ்ஞானம், பயிலும்வேதாந்தத்தெளிவுநூலோர்ந்து பத்தியாம்பெருவழியொழுகின், மயிலியல்பாகனருளுறுமதனுல்வாய்த்திடுமெனுபவஞானம். ()

அந்தஞானத்தாலொழிதருமொழிந்தவாருயிர்க்கில்லையாவிந்தப்
பந்தமார்சாதிபேதங்களனைத்தும்பகருமிஞ்ஞானமில்லாதார்
தந்தம்வன்னாச்சிரமதருமத்திற்றவறுருராகிச்சந்ததமுஞ்
சுந்தரமுக்கட்பரஞ்சுடரடியைத்தொழுதுகொண்டாடிடல்வேண்டும்.

சாதியாசாரமுதலியயாவுந்தம்பிரான்றிருவடிப்பூசை
யாதியாலடையுமுண்மைஞானத்தாலகன்றிடுந்தனையறியாம
னீதியார்கருமமறிந்தொழிப்பானேனிரையத்தேயுழல்வனெங்காளு
மோதியாகமவேதங்கண்முற்றுணர்ந்தவுத்தமப்பெருந்தவமுனிவீர். ()

கஉ-வது சாதிவரலாறுரைத்த

அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் கஉ-க்குத் திருவிருத்தம் ௬௬௪.

---

உ

பதின்மூன்றாவது

## தீர்த்தமான்மியமுரைத்தவத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

பூதிசாதனம்புரிபுல்மைமிக்குளீர்
சாதிவேற்றுமைசிலசாற்றினுமினித்
தீதிலாதுயர்கதிசேருமாறரு
ணீதியதீர்த்தமான்மியநிகழ்த்துவாம். (க)

பத்தியிற்படிபவர்பாவம்போக்கிரன்
முத்தியிற்புகுத்திடுமுடிவிறீர்த்தங்க
ளித்தல்த்தெண்ணிலவியம்பவல்லரார்
சுத்தமெய்த்தவத்தினீர்சுருக்கமேசொலல். (உ)

வானவர்முனிவரர்வணங்கத்தக்கது
தானமாருலகெலரிஞ்சாற்றப்பட்டது
மானவெப்போகமும்வழங்குரீரது
கானலர்செறிந்தகங்காத்துவாரமே. (ங)

விரும்புமத்தீர்த்தத்தின்மேடமாமதி
யரும்பிடுபுரவிநாளமர்ந்துமூழ்குபு
சுரும்பிமிர்குழல்வரைத்தோகைபாகனூர்
பெரும்பதம்பொதிர்தவுட்பெரியர்கைக்கணே. (ச)

வாய்ந்தபொன்னளித்துபவாசமுஞ்செயிற்
றெய்ந்திடும்பவந்தொறுஞ்செய்ததீங்கெலா
மேய்ந்திடும்பெறலருமின்பமுத்தியு
மாய்ந்திடுபிதிரருமடைவர்நன்மையே. (௫)

தூயவர்தொழுந்திருச்சோமநாதத்திற்
பாயபச்சிமகடற்பாலொர்யோசனை
யாயநீளமுமகலமுங்கொண்டுள்ளது
தோய்பவர்க்கின்பஞ்செய்சோமதீர்த்தமே. (௬)

அகமிலத்தீர்த்தத்திற்பருவமாதிரை
பகருமட்டமிவிதிபாதஞாயிறு
தகுநல்வாரஞ்சதுர்த்தசியிந்நாள்களிற்
புகுவிருப்புளத்தொடும்புக்குமூழ்கியே. (௭)

புண்ணியநீறுடற்பூசிநல்லவ
ரெண்ணியதானமுமியலுமாகொடுத்
தண்ணினர்க்காரமுதாயவண்ணலைப்
பெண்ணியல்பாகனைப்பெற்றமூர்திஜைய. (௮)

துங்கமார்தருதிருச்சோமநாதனை
யங்கமாறெட்டொடுமடிபணிந்திடிற்
பங்கமார்பாதகமனைத்தும்பாறிடும்
பொங்குமாமுத்தியும்பொருந்துமென்பவே. (௯)

காசியிற்றிருமணிகர்ணிகைக்கணே
மூசியவன்பொடுமூழ்கிநீறணிந்
தாசினன்மறையவர்க்கன்னதானமுந்
தேசினிற்செய்தபின்றேவதேவனை. (௧0)

மறையினதந்தமும்வகுக்கொணான்றனை
நிறைபுகழ்விச்சுவநாதநின்மல
விறைவனைமால்விடையேறுமாதியை
முறைமையிற்பணிபவர்முத்தராவரே. (௧௧)

மெய்த்தவர்புகழ்பிரயாகைமேவுபு
சைத்திரமாமதிதாசியாரலே
யுத்தமவுருளிந்நாண்மூழ்கியோகியர்க்
கொத்ததானமுஞ்செயினுறுவர்முத்தியே. (௧௨)

வேகவல்வினைகெடவீட்டுமோகங்கா
சாகரசங்கமர்தன்னின்மான்றலை

மாகமாராதிரைவருதினத்துமை
பாகர்தாணிவேந்தூநண் பகலின்மூழ்கியே. (௧௫)

புண்ணியநீறணிபுனிதர்செங்கையி
னண்ணியபொருளுவந்தளிப்பினூடொரு
மெண்ணியவெண்ணியாங்கெய்துவார்பவ
மண்ணியின்பார்மூத்திமருவிவாழ்வரால். (௧௪)

இடர்கெடநருமதையெய்திமூழ்குபு
தொடர்தருதானமுந்துணிந்துசெய்பவர்
படர்நரகுறுவழிபாற்றியேற்றமிக்
கடர்விதியவனுலகமர்தலுண்மையே. (௧௫)

அந்தகன்பணிதரவமைந்ததாய்மணி
சந்தனக்குறடகிற்றுனியுந்தாந்திரை
யுந்தியேயொழுகுவதொப்பிலாதது
சுந்தரயமுனையென்றுரைக்குந்தூநதி. (௧௬)

மற்றதிலிடபமாமதிவிசாகநாள்
சொற்றசெங்கதிரவன்வாரந்தோய்ந்துநூல்
கற்றவந்தணர்க்கனங்களிவினாட்டுவோர்
பற்றுவர்சிவகதிபடரொன்றின்றியே. (௧௭)

அவிர்சரச்சுவதியென்றவள்சொரூபமாய்ப்
புவிவியப்புறச்செலும்பொருவிலாற்றிற்கட்
செவிகரத்தணிந்தவன்செய்யதாணினைந்
தவிகையிலன்பினூதிரையின்மூழ்கியே. (௧௮)

மிளிர்சிவயோகியர்மென்கரத்தினி
லொளிர்பொருட்டானமுமுவந்தளித்தவ
ரளிமிகுமைந்தரோடவனிவாழ்ந்துபின்
னெளிதின்வானுலகடைந்தின்பமெய்துவார். (௧௯)

தழைமுகிறவழ்முடிச்சையமால்வரை
யுழையினின்றிழிவதொள்ளொழுக்கஞ்சான்றது
குழைவுறீஇயமரருங்குடையுநீரது
பிழையில்கோதாவரியென்னும்பேரது. (௨௦)

(மேற்படிவேறு).

ஆயவுந்தியிலாவணித்திங்கள்பொன்
னேயசிங்கத்திருக்கின்றநாட்செலீஇப்
பாயவன்பிற்படிந்துநல்லோர்கொளத்
தூயதானமுநல்குந்துணிவினோர். (௨௧)

6

பரவுங்கங்கையிற்பன்னிரண்டாண்டுக
ணூரவின்மூழ்கியுறும்பயனெய்தவா
ரரவுசேர்சடையண்ணறிருவருள்
விரவுவாரவர்மேன்மைசொல்வாரெவர். (௨௨)

விண்ணவாஞ்சிகரம்பலமேவிய
வண்ணவான்சையநின்றும்வருவது
தண்ணமார்ந்துதரணிநடப்பது
கண்ணவேணியெனுமோர்கவினதி. (௨௩)

புகரிலிந்நதிப்பூம்புனல்கொண்டய
னிகல்வளைக்கரனுதிபரின்னமு
நிகரிலிந்திரநீலப்பருப்பதத்
தகமிலங்கணற்காட்டுபூசிப்பார். (௨௪)

பருவமந்நதிமூழ்கிப்பயன்மிக
மருவநேருபவாசமுஞ்செய்தன்பிற்
பொருவிலார்க்கொளிர்பொன்னுங்கொடுப்பவ
ரொருவுபாசத்தராயின்புறுவரால். (௨௫)

(கோச்சகக்கலிப்பா.)

திங்களுடனூரினுமுடித்தென்கயிலைவீற்றிருக்கு
மங்கணனெவ்வுயிருமெளிதரும்போகங்கதியடையத்
தங்குமருளான்மாசிமகத்தமைத்ததடந்தீர்த்தம்
பொங்குசுவணங்கொழிக்கும்பொன்முகரியெனுங்குடினை. (௨௬)

ஆபதிருநதியின்கணம்மாசிமகநாளின்
மாயிருஞாலத்துளபல்வகைத்தீர்த்தமெலாந்தம்பாற்
றோய்பவர்கள்கழித்தடைத்ததொகுபாவந்தொலைத்திடுவான்
பாய்தருமன்பொடுவந்துபடிந்துகளித்தேகுமால். (௨௭)

யாரேனுமந்நதியிலந்நாளிற்படிந்திதழித்
தாரேறுமுடியானைத்தவளநிறப்பொடியானைக்
காரேறுகளத்தானைக்கண்ணேறுகுளத்தானை
யேரேறுமொருமானையேந்தியவெமபெருமானை. (௨௮)

புனிதருளம்புகுஞானப்பூங்கோதைநாயகனைக்
கனிதருமம்பொழில்சூழ்சீகாளத்திமாமணியை
யினிதகவன்பினிற்றாழ்வார்க்கெவ்வகைப்போகமுமுண்டா
முனிதரவில்பேரின்பமுத்தியுமெண்மையினுறுமால். (௨௯)

காராருங்கந்தரத்தான்கடைக்கணருள்பெற்றுநெடும்
பாராரப்படைப்பவன்செய்பண்புறுபம்பாநதியி

லேராரங்கான்முகனுமிலக்குமிவாழ்மார்பினனு
மாராவன்பினின்மூழ்கியாங்கரனைப்பூசித்தார். (௩௦)

திகழ்தருமத்தீர்த்தத்திற்செறிபருவங்கதிர்வார
மிகழ்வருமத்தம்பூரமித்தகுநாள்களின்மூழ்கிப்
புகழ்மறையோர்க்கன்னம்விலாப்புடைவீங்கவூட்டிடுவா
ரகழ்தருபாவத்தினராயலங்குசுவர்க்கம்புகுவார். (௩௧)

பையரவிற்கிடப்பானும்பங்கயத்திலிருப்பானும்
கையமர்வச்சிரத்தானுங்கருதுறுமற்றமரர்களும்
வையகமுமெந்நாளும்வணங்கிவழிபடுநகரந்
தையலொருபங்குடையதம்பிரான்றிருவதிகை. (௩௨)

அணிமருவுமந்நகரத்தருகுவிரையகிலுருட்டி
மணிகொழித்துமலர்பரப்பிவருங்குடிலநதியொன்றும்
பிணிதவிரந்நதிக்குலையிற்பெயர்வீரையெனுங்காளி
திணிதருமன்பாற்பரனைச்சிங்கமதிப்பூரணையில். (௩௩)

பாங்காகப்பதிட்டைசெய்துபன்னாளும்பூசித்தா
ணீங்காமலுயிர்க்குயிராய்நின்றருளுநம்பெருமா
னாங்கார்வத்தவட்கெதிர்தன்னருளுருவந்தோற்றினான்
பூங்கானக்குழல்வீரைபொங்குமகிழ்ச்சியிற்பணிந்து. (௩௪)

ஐயனேநினைப்பதிட்டையான்புரியாவணித்திங்கட்
செய்யபூரணைநாளிச்செழுந்தீர்த்தப்புனல்படிந்துன்
மொய்யொளித்தாள்பணிவோர்கண்மூழ்ப்போகநுகர்ந்தீற்றி
லெய்தருமுத்தியுமடையவினிதருள்கவரமென்றாள். (௩௫)

ஆதிநாயகனளித்தானத்தீர்த்தத்தந்நாளி
னீதியின்மூழ்குபுதானநேர்ந்துநிமலற்பணிவோர்
மேதகுபோகங்களெலாமிகநுகர்ந்துவீடுறுவா
ரேதமிலந்நாண்முடியாதேற்கதிர்வாரமுங்கூடில். (௩௬)

மாதேவனமைத்ததிருமணிமுத்தாநதிப்புனலிற்
றாதேயுமலர்க்கிழவன்சக்கராயுதக்குரிசில்
போதேயுங்கற்பகக்கோன்பொலியழல்கான்மதிகதிரோன்
றீதேயிலாவிசுவதேவர்வசுக்கண்முதலோர். (௩௭)

சிலைமதியாதிரைநாளிற்றிகழும்விதிப்படிமூழ்கி
மிலைமதியச்சடையானைவிருத்தகிரியுடையானைக்
கொலைமலிசூற்படையானைக்குளிர்தருமவிடையானைக்
கலையதள்கொளிடையானைக்கழல்பணிந்துகரைந்துருகி. (௩௮)

மறைமுடிக்குமெட்டாதமலரடிக்கெம்விண்ணப்ப
முறைதிகழித்தலத்தின்மணிமுத்தாற்றிலிங்காளிற்
பறையுமுயர்வினர்தாழ்ந்தோர்பாதகர்சண்டாளர்முத
னிறையுமெவராயினுநன்னீராடிநீறணிந்து. (௩௯)

அடியவருக்குதவியபொன்னுதியளித்துபவாசம்
படியறச்செய்துன்செழும்பொற்பாததாமரைதொழுவோர்
முடிவறமுன்னியபோகமுனனியாங்கனுபவித்தின்
பொடிவறுமேலாங்கதியுமுறவருள்வாயென்றிரந்தார். (௪0)

அறிவுருவப்பெருமானுமவ்வாறேயருள்புரிந்தா
னறியபுனலங்கதியங்காட்படிந்தவ்வாறியற்றிற்
செறிதருபோகங்களெலாந்தேவர்களுநறுமொறுத்தியாம்
வறியமெனநுகர்ந்தீற்றின்மாண்கதிசார்வதுதெளிவே. (௪௧)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பாட்டிசையளிகண்மூசும்பைந்துழாய்ப்படலைமார்பன்
நீட்டயிலனையவுண்கட்செய்யமாமனைவியோடுங்
கூட்டமற்றையர்களோடுங்குடியிருந்தென்றும்போற்றுஞ்
சேட்டொளிசிறந்ததெய்வச்சிதம்பரதலத்தின்மாதோ. (௪௨)

வடவரைவளைந்தாலன்னமாமதிலுடுத்துமஞ்சு
தடவருமுடிசேர்செம்பொற்றயங்குகோபுரங்கண்மல்கச்
சுடர்விடுமணிகால்யாத்ததூத்தசும்பனேகந்தாங்கி
யிடர்தவிர்ந்துலகமுய்யவிலங்குமாலயத்துள்ளாக. (௪௩)

பொலிதருமலர்க்கொம்பன்னபுகழ்ச்சிவகாமித்தாய்க
ணுலிதருகளிப்பின்மூழ்கவுத்தமனடஞ்செய்செம்பொன்
மலிதருசிற்சபைக்குவடபாலுள்ளதுகண்டோர்க்கு
நலிதருபாவம்போக்குநாமவான்றீர்த்தமொன்று. (௪௪)

சிறக்குமத்தீர்த்தத்தின்பேர்சிவகங்கையென்பர்யாரு
மறக்குழவிடையான்றற்கொப்பதிகமின்றெனிருமாபோ
லுறக்குமத்தீர்த்தமுந்தற்கொப்புயர்வின்றியென்று
நறக்குருமலர்கண்மல்கநறுந்தடவடிவாய்மன்னும். (௪௫)

பங்கயத்திருக்கைவேண்டிற்பாம்பணைக்கிடக்கைவேண்டிற்
கொங்கலர்கற்பகப்பூங்கொழுநிழலமர்கைவேண்டிற்
பொங்குமற்றுள்ளபற்பல்போகமும்புணரவேண்டிற்
செங்கனகச்சோபானச்சிவகங்கைமூழ்கல்வேண்டும். (௪௬)

கலைதருங்கல்விவேண்டினெடும்பொருட்செல்வம்வேண்டின்
மனைவளஞ்சிறக்கவேண்டின்மாண்புடைப்புதல்வர்வேண்டிற்

கலைபுகழ்வீரம்வேண்டிற்காசினிபுரக்கவேண்டிற்
றலைநிகரிலாதசீரத்தடம்புனல்படிதல்வேண்டும். (௪௭)

படர்கொலைப்பழிகள்ளுண்டபாவம்பொற்களவிற்றீங்கு
தொடர்செய்பாதகங்கண்மற்றுந்தொலைந்திடுந்தொழுவேகுன்மங்
குடர்முடக்கிடுந்திச்சூலைகொடுமெகோதரமுன்னேய்க
ளிடர்புரிபவரோயோடுமிரியுமத்தடந்தோய்வார்க்கே. (௪௮)

விண்ணவரரம்பைமாதர்விஞ்சையரியக்கர்சித்தர்
தண்ணமைகருடரேகாந்தருவர்தைத்தியர்மற்றுள்ள
வண்ணலங்கணத்தினோர்களனைவருமன்பினென்று
மண்ணவரொடும்விராவிவயங்குநீராடலோவார். (௪௯)

மறவியிற்படிந்தோருக்கும்வயங்குபல்போகமீத்துப்
பெறலரும்பேரானந்தப்பேறுநன்குதவத்தீர்த்த
மிறவிலதாகியென்றுமிருக்கவுமென்னேபாவம்
பிறவியுமொழியார்செல்வப்பெருக்கமுமுறூர்சில்லோரே. (௫௦)

மலர்தலையுலகிற்றோற்றமன்னியமாந்தர்யாரு
மிலகவங்கெய்திமூழ்காரெனிற்பயனென்னேகாண்பர்
குலவுகாலிலர்தருக்கால்கூட்டிச்சென்றாடல்வேண்டும்
வலமிலபங்குள்ளார்நீசர்மனத்துறநினைத்தல்வேண்டும். (௫௧)

மன்னுசிற்றம்பலத்துமாணிக்கக்கூத்தனம்பொற்
சின்னகுமளகபாரச்சிவகாமிப்பிராட்டியோடும்
பொன்னவிர்நிறத்தன்வேதன்புத்தேளிர்மற்றோர்சூழப்
பன்னுமாகத்துமாகம்படிந்தருள்வானதீர்த்தம். (௫௨)

அத்தகுமாகவாய்க்காலத்தீர்த்தம்படிந்துதான
முத்தமர்க்குதவியையனுண்மையார்நடனம்போற்றி
முத்தர்சொன்மூலட்டாணமுன்னும்வந்தனைசெய்தேத்தும்
வித்தகர்பெறுபேறெம்மால்விளம்பலாந்தரத்ததன்றால். (௫௩)

## கொச்சகக்கலிப்பா.

எத்திசையும்புகழ்தில்லைக்கீசானப்பெருந்திசையிற்
கத்துமறிதிரைப்புணரிக்கரைக்கணோர்யோசனைநீள
மொத்தவகலமுமுடைத்தாயும்பர்தொழப்படுவதாய்ச்
சித்தமலமகற்றுகுய்யதீர்த்தமெனவொன்றுளதால். (௫௪)

பவமறுக்குமத்தீர்த்தப்பண்புரைப்பாரெவர்முன்னாட்
டவமறுக்குமடமையினாற்சலபதியாகியவருணன்
சிவமறுக்கிலாதமறைதேர்ந்தவொருவனைச்செகுத்தவ்
வவமறுக்கவவனியெலாமலைந்துமறுமையின்வருந்தி. (௫௫)

பத்தியுருவாயபுலிப்பாதமுனிசரணடையா
வுத்தமனேயென்பாவமொழியவருளென்றிரந்தான்
சித்தநலமுனிவனுமத்தீர்த்தமான்மியம்விளம்பி
நத்தமுறும்பழியகலநன்னூலின்விதிப்படியே. (௫௬)

மாகம்வருகொடுநுகநாள்வளர்குய்யதீர்த்தந்தோய்க்
தேகநாயகற்றொழுதியிரிதருநின்பழியென்று
ஞானைமிகவருணனுஞ்சென்றுரைத்தபடியந்நாளிற்
போகியசீரத்தீர்த்தப்புனல்படிந்துநீறணிந்து. (௫௭)

வம்பலருநறுங்கடுக்கைமாலைதுயற்றுளானை
யும்பலதள்போர்த்தானையுமையொருகூறுடையானைச்
செம்பவளமுண்டகத்தான்றிருமாலுமறிவரிய
வம்பலத்தெம்பெருமானையடிவணங்கித்துதித்தனனால். (௫௮)

பற்றியபாதகத்தோடுபவநோயுமொழிந்துய்ந்தான்
செற்றவிடைப்பெருமானுந்திருக்காட்சிகொடுத்தருளப்
பெற்றமகிழ்வினிற்பணிந்துபிறங்குமிருகைகூப்பி
யுற்றடியேன்மூழ்கியநாளொண்குய்யதீர்த்தத்தில். (௫௯)

படிந்துநினைப்பணிபவர்கள்பவந்தொறுஞ்செய்வினையாவுங்
கடிந்தமலராகிநினகழல்களுறவருளென்றான்
பொடிந்துகமுப்புரமெரித்தான்புரிந்தருளினன்சன்மந்
தடிந்துயர்ந்தாரந்நாளத்தடந்தீர்த்தந்தோய்ந்துபலர். (௬௦)

பெரும்புகழாற்றிசைபோயபிரமபுரமெனுந்தலத்தி
லரும்புமரைமலர்க்கிழவனமைத்தருளுமொருதீர்த்த
மிரும்புவியேத்திடும்பிரமதீர்த்தமெனவிலகுமதில்
விரும்பியுரோமசன்மூழ்கிமெய்த்தவஞ்செய்கின்றனனால். (௬௧)

வண்டிசைக்குநறுங்கமலமாலைதுயற்றுட்பிரமன்
பண்டொருகற்பாதியிற்பகரருந்தீர்த்தம்படிந்து
விண்டவர்தம்புரமெரித்தவிமலனடிப்பூசைபுரிந்
தண்டமனைத்தையும்படைக்குமதிகாரம்பெற்றனனால். (௬௨)

மதிகதிரையராவிழுங்கவருகாலங்கதிர்வாரம்
பொதிதருபுண்ணியவிடுவகாலமிந்நாள்களிற்பொலிமற்
றதின்முழுகிப்பிரமபுரத்தமர்ந்தபிரானடிபோற்றிற்
கதியடைவாரென்பதற்கோர்கட்டுரையும்வேண்டுமோ. (௬௩)

இயல்பிரமணுதியர்தம்மிடங்களழிகாலுநிலை
பெயருதல்சற்றறியாவப்பிரமபுரமேல்பாங்கர்த்
துயர்தவிர்த்தெவ்வுயிர்க்குமருள்சூரியபுட்கரணியென
வுயர்வுபெறுபெருந்தீர்த்தமொன்றுளததிப்பியமாய். (௬௪)

அத்தகுதீர்த்தத்தின்முனமறைந்தநாள்களின்மூழ்கி
முத்தழலுக்குடையபிரான்முக்கணனென்றறிந்துமல
சித்தமிகையாற்றக்கன்செய்தமகத்திழந்தவெண்பற்
கொத்துமுளைத்திடப்பெற்றான்குணக்குதயமெழுங்கதிரோன். (௬௫)

இலங்கையிராவணன்மைந்தனிந்திரசித்தெனும்பெயரான்
வலங்கைவடிவாள்வலியான்மருவுலகசயங்கொண்டே
யலங்குமணிச்செழும்பொற்றேராகாயவழிகடவி
விலங்கியமரர்கணடுங்கவிரைந்துசெலுமக்காலை. (௬௬)

புவிபுகழுஞ்செங்கதிரோன்புட்கரணித்தென்கூலநேர்
கவின்மிகுசெம்மணிப்பொற்றேர்காலூன்றிநின்றதா
லவனுடையதந்தைவிடுமெவிரொளிவிமானந்தா
னவவடிவன்கயிலைமேனடவாதுநின்றதுபோல். (௬௭)

இந்திரசித்ததுகண்டானென்னோமற்றிதுவென்றே
மந்திரத்துந்தந்திரத்தும்வலிந்நடத்தவுநடவா
தந்தரத்துநிற்பதுணர்ந்தகமெலிந்துமண்ணிழிந்து
சுந்தரத்தாங்குறக்கண்டான்சூரியபுட்கரணியையே. (௬௮)

செம்மலர்செயித்தீர்த்தந்திப்பியமாயிருப்பதனா
னம்மிரதமிதன்மேனேர்நடவாதுநின்றதென
விம்மிதமிக்குறவுணர்ந்துவிரும்பியதிற்படிந்தெழுந்து
பொம்மன்முலையொருபாகபுண்ணியனைப்புராதனனை. (௬௯)

பேராரும்பிரமபுரப்பெருந்தகையையடிவணங்கி
யோராருமிரதமொதுக்குபுநடத்தியேகினனா
லாராதகாதலினத்தடம்படிந்துபொன்னளிப்போர்
தீராதபாவமெலாந்தீர்ந்துசிவகதிசேர்வார். (௭0)

கிடந்தவரைகளைப்புரட்டிக்கிளரகில்குங்குமந்திமில்சந்
திடந்துவயிரமுமணியுமிருகரையும்வீசிவருந்
தடந்திரைநீர்க்காவேரிசாகரசங்கமம்படிவோர்
கடந்துவினையனைத்துமுயர்கதிக்கரையராயுயர்வார். (௭௧)

கண்காட்டுநுதலாளர்கங்காளகாபாலர்
புண்காட்டுந்திரிசூலப்புண்ணியனாரினிதமரும்
வெண்காட்டுமுக்குளநீர்விழைந்துபடிந்தவர்பெறும்பே
றெண்காட்டியுரைப்பவர்யாரிங்கிலத்துமெங்கிலத்தும். (௭௨)

இடைமருதாமிரதீர்த்தமியைதிருநித்தானமறக்
கடையறுமங்களவமிசகந்திரிகோடிக்காவிந்
நடையுயர்தானங்களினற்காவிரியிற்கதிர்வார
மடைபருவமூழ்கியரனடிப்பூசையாற்றுனர்கள். (௭௩)

பவந்தொறுமீட்டியகொடுமாபாதகங்கள்பறந்தொழியத்
தவந்தழைந்துகதியடைவார்சாற்றியவித்தானங்க
ணிவந்தவறமிலரேனுநெட்டுடறம்பால்விடுத்தோர்
சிவந்தழையுஞ்சிறந்தகதிச்செலவுய்க்குமுய்க்குமே. (எச)

விட்ழுக்கஞ்சிதைந்தொழியமிளிர்கண்டத்தமைத்தபிரான்
குடமூக்கின்மாமகநீர்குடைந்தோருங்கூற்றைவெலத்
திடமூக்கஞ்செயும்பொன்னித்திருத்துறையிற்படிந்தோரு
கடமூக்கமுறச்செயுமந்நாதனருட்கிலக்காவார். (எரு)

மலர்தலையெவ்வுலகமுஞ்சொல்வன்மீககேத்திரத்துக்
குலவுபுகழ்பெறுங்கீரகுண்டமெனவொருதீர்த்தம்
வலனுயர்மாலயனுதிவானவருந்தொழப்பட்டு
நிலவுபெருஞ்சுவர்க்கத்தினின்றுமவண்வந்ததால். (எசு)

மீனமதியுத்திரநாள்விதிபாதநாள்விழைந்து
நானம்விதிப்படிசெய்துநல்லோர்கொண்மாரியல்பொற்
றானமுமீந்தொளிராழித்தடந்தேர்வித்தகற்போற்றி
வீனமறுபெருமுத்தியெளிதினடைகுவர்மன்னோ. (எஎ)

வேணருமத்தீர்த்தமேல்பாலுண்டொருதீர்த்தஞ்
சேணார்கொடொழுந்தேவதீர்த்தமெனச்சிறந்தததி
னேணாருமொருமகவானேந்தெழினல்லயிராணி
பூணாரந்தாங்குமுலைப்போகமுதலியவெறுத்து. (எஅ)

பருவங்கடோறும்விதிப்படிமூழ்கிவன்மீக
மருவங்கணனைநிதமும்வலஞ்செய்துவழிபட்டன்
புருவங்கொடகையோனுமோராண்டுகழிந்ததற்பின்
றிருவங்கொள்பேரின்பச்சிவகதிசென்றடைந்தனளே. (எகூ)

மிக்ககதிர்வாரமேவிளங்கிடும்யாழேகண்ண
பக்கமேயட்டமியேபங்குனியுத்திரநாளே
தக்கவிந்நாள்களினந்தத்தடந்தீர்த்தம்படிந்தாடி
யெக்கலையுமுணர்ந்தோருக்கினியதானமுமீந்து. (அ0)

பூங்கோயிற்கற்பகத்தைப்புற்றிடங்கொண்மாமணியைப்
பாங்காகநினைபவருட்பரந்தொளிர்தூண்டாவிளக்கை
நீங்காமலுயிர்க்குயிராய்நின்றருளும்பரம்பொருளை
யாங்கார்வத்தொடும்பணிவோரடைவாருங்கதியெளிதின். (அக)

(கலிநிலைத்துறை.)

சீலர்போற்றிடுஞ்சேதுவின்னொருமகாதீர்த்தஞ்
சாலமற்றதன்பெருமையார்சாற்றிடுந்தரத்தார்
மாலைதாழ்முடிமன்னவன்றசரதன்மைந்தன்
வேலைநீர்ப்புவியேத்துமேதகும்புகழிராமன். (அஉ)

இராவணாதியர்தமைச்செகுத்திட்டவெம்பாவம்
விராவலான்மதிமயங்கினன்முனிவரைவினவிக்
குராநறுங்குழற்கொடுநுதற்கொடியிடைச்சனகி
மராமரம்புரைதோள்வலியிலக்குவன்மற்றை. (அந)

அடர்க்கும்வானரப்படையொடுஞ்சேதுவையடைந்தான்
சுடர்த்தொடித்திருவொடுமன்பிற்றீர்த்தநீர்தோய்ந்தான்
மடற்கருங்குழலுமையொடும்வரதர்வீற்றிருக்கு
மிடத்தடைந்துறுப்பெட்டினுமாறினும்பணிந்தான். (அச)

தெய்வநாயகன்முடிமிசைச்செழும்புனலாட்டி
மைவிராவியமலர்முதல்கொண்டருச்சித்தான்
மொய்விராவுபாதகமொழிதரவருண்முகந்தான்
சைவனாகியவெறுழ்வலித்தடஞ்சிலையிராமன். (அடு)

மாயனான்முகன்வருந்தியுங்காணருமணியே
பாயநான்மறையந்தத்துவிளங்குபொற்பதத்தாய்
சேயனாமெளியேனுநின்றிருவடிக்கன்பு
தோயநின்னருட்குறியருச்சித்தனன்றுணிந்து. (அசு)

அடியர்வேண்டியவேண்டியாங்களிக்குமாரமுதே
படியில்யானருச்சித்தவிவ்விலிங்கமும்பைம்பொற்
கொடிகொள்கோயிலுநகரமுமென்பெயர்கொண்டே
கடிதவின்றிநாடொறும்விளங்கிடக்கடைக்கணிப்பை. (அஎ)

அரியநின்றிருவடிக்கென்றுமன்புறவருள்வை
பெரியவாவெனவிரந்தனனளித்தனன்பெருமான்
றுரிசில்சேனையுந்தம்பியுஞ்சீதையுந்தொடரத்
தரியலார்முரணவிமதிலயோத்தியைச்சார்ந்தான். (அஅ)

பகருமேன்மையத்தீர்த்தமாதிரைவிதிபாதந்
திகழுமாதிவாரங்கதிர்மதியராத்தீண்டும்
புகரினுள்புகர்வாரமிந்திரவியிற்புகுநா
ளெளில்பூரணைமுதன்மற்றைவிசேடநாட்டோய்ந்து. (அகூ)

நலம்விராவுவேதியர்க்கொளிர்பொன்முதனல்கித்
திலகவாணுதன்மலைவளர்காதலித்தேவை
நிலவுலாஞ்சடைநின்மலக்கொழுந்தினைநினைவோர்
மலமகற்றிராமீசனைவழிபடுவார்க்கு. (கூ0)

தீர்விலாதபாதகமெலாந்தீர்ந்திடுஞ்சிறக்கு
மார்வமாமகப்பேறுமுற்பேறெலாமடைவார்
கார்விராவியகந்தரக்கடவுடன்கழல்சேர்
சோர்வுலாதபேரானந்தவின்பத்துந்தோய்வார். (கூக)

இன்னுமோர்மதியப்புனன்மூழ்கியின்ருன
மன்னுமாகொடுத்திராமலிங்கத்தையும்வணங்கி
லுன்னுமாறறிந்தியற்றுபொற்களவுகள்ருண்ட
றுன்னுவெங்கொலைப்பழிமுதற்பாவமுந்தொலையும். (கூ௨)

ஆபதீர்த்தநானத்தினுன்முத்தியையடைந்தோர்
ஆயவேண்டிடினளவிலர்வகுப்பவர்யாரே
காயமும்புகழ்தீர்த்தமின்னமுங்கணக்கின்ருற்
காயம்வாட்டியதவத்தினீர்சொலிற்கடையுருதால். (கூ௩)

உரைசெயித்தருதீர்த்தமான்மியமுவப்பூறப்
புரையிலாதவேதாகமம்புகலுமற்றிதனை
நரைவெள்ளேற்றுவண்கொடியுயர்த்தருளியநம்மான்
விரைநறுங்குழலுமைக்கினிதுறவிரித்துரைத்தான். (கூ௪)

அண்டம்யாவையுமீன்றசிற்றுதரத்தெம்மனை
விண்டசூர்முதறடிந்தவேல்வித்தகற்குரைத்தாள்
வண்டலம்புபூங்கடம்பணிவலிமலிதோளான்
ளெண்டனைய்த்தொழுதேத்துநான்முகனுக்குச்சொன்னுன். (கூ௫)

எரியவிழ்ந்ததொத்திலங்குசெந்தாமரையிருப்போன்
கரிசிலாத்தவவாதராயணனுக்குக்கரைந்தான்
விரியுமெய்வழிபாடுகேண்டெனக்கவன்விளம்பப்
பெரியமாதவத்தீர்நுமக்கின்றுபேசினன்யான். (கூ௬)

நீவிருங்கண்மாணுக்கருக்கினிநிகழ்த்திடுமின்
ருவிலாதவித்தீர்த்தமான்மியமெவன்றமுவி
யோவிலாதுறப்படிப்பவனவன்முத்தியுறுவான்
மேவிரும்புனற்சிராத்தஞ்செய்காலத்துவிரும்பி. (கூஎ)

பளகிலாதுபாராயணஞ்செய்பவன்படரும்
வளகிலாவியபோகமெலாம்பெற்றுவாழ்வா
னளவிலன்பினிற்சிரவணஞ்செய்துகொண்டமலன்
கிளரும்பொன்னடியருச்சிக்குங்கீர்த்தியினுர்க்கு. (கூஅ)

பொருந்துமுத்தொழின்மூவரும்போருள்புரிவார்
திருந்துநம்பிரான்றிருவருட்பேறுசிந்தித்துக்
கருந்தடங்கட்டேவகிமைந்தனுகியகண்ணன்
வருந்திலாதினும்பராயணஞ்செய்வன்மற்றிதையே. (கூகூ)

சினமறக்கடிந்துயர்ந்தமாதவத்தினீர்தேர்மி
னெனவுரைத்தனனாங்குநின்றெழுந்தனனிமையோர்
கனவிடத்துங்காணரியவன்பெரியவன்கங்கைப்
புனன்முடிப்பரன்கயிலையுற்றான்புகழ்ச்சூதன். (௧00)

கஉ-வது தீர்த்தமான்மியமுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.



ஆக அத்தியாயம் கஉ-க்குத் திருவிருத்தம் சகூச.
பாயிரமும் விநாயகர் துதியு முட்படத் திருவிருத்தம் ருசரு.



முதலாவது சிவமான்மியகாண்டம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் ருசரு.



உ

சிவமயம்.

# இரண்டாவது

# ஞானயோககாண்டம்.

## முதலாவது

## ஞானயோகத்தை யுணர்ந்தவாறுரைத்த வத்தியாயம்.

### விநாயகர்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்).

பொருள்படுபிரணவத்தின்பொருளொருதானேயென்று
மருள்செறிமனத்திருளும்வயங்குறவுணர்பாக்கம்பொற்
சுருள்விரிகடுக்கைவாசத்தொங்கல்செஞ்சடையிற்சூடு
மருள்பொழிமுக்கணால்வாயைங்கரக்களிற்றையுள்வாம். (க)

(மேற்படிவேறு.)

### பரன்.

மேலாயவறுசமையர்விளம்புபொருள்களுமாகிவேறுமாகி,நாலாயவாரணமாகமஙவிலுங்குறிகடந்தஙலத்ததாகிச், சேலாயதிருநெடுங்கணன்னையுமத்தனுமாகிச்செறிவோவாது, பாலாயவெவற்றுநிறைந்தொளிருமொருபரம்பொருளைப்பற்றிவாழ்வாம். (உ)

### பரை.

ஓங்குபராபரையாதிவிருப்பறிவுதொழிலாகியொப்பிலின்பம்,வீங்குபரபோகமுதவுங்கருணையுருவாகிவிசுத்தாசுத்தத், தேங்குதனுமுதலொருகான்குஞ்சுமப்பவுபாதானத்திரையமேவிப், பாங்குபெறுமொருமுதலாய்நின்றருணின்மலசிவையைப்பாடியுய்வாம். (ங)

### விநாயகர்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

அண்டர்தம்பெருமான்சடைமுடிப்பிறையோடம்மை தன்குழன்மணிப்பிறையைத், தண்டையங்குறுத்தாள்பெயர்த்தருகணைந்து தடங்கரத்தெடுத்துறச்சேர்த்துக், கண்டவர்முழுமாமதியெனவியப்பக்கனிவினன்காடல்செய்தீற்றுப், புண்டரநுதற்குஞ்சரமழக்கன்று பொலிந்தெனதுளங்குடிகொளுமே. (ச)

## முருகர்.

தெண்டிரையுததிபுடையுடுத்தோங்குஞ்சீர்வளருலகநன்கேத்து மண்டர்தம்பிரானுமிடத்தில்வாழ்ந்திலகு மம்மையுஞ்செவ்விழிகளிப்பத், தண்டையுஞ்சிலம்புமிணையடி யொலிப்பச்சார்ந்துமற்றவர்நடு வமரு, மண்டழல்கதுவுஞ்செய்ய வேற்கரத்துவரதனைநிரதமேத்தெடுப்பாம். (௫)

(கலிநிலைத்துறை.)

தாமரைக்கிழவன்றுளவணிதடம்புயத்தா
னுமவச்சிரப்படையினான்மற்றைவிண்ணவர்க்கு
மேமமிக்கபல்வரமெலாமினிதுவந்தளித்துக்
காமர்முக்கணானிருப்பதுவெள்ளிவெண்கயிலை. (௬)

பாழிமாமலர்ப்பண்ணவனுறைதருபதமு
மாழியேந்தியகுடங்கையானமர்பெரும்பதமும்
வாழிமற்றைவானவர்பதங்களுமிறமருவு
மூழிதோறுமிக்கோக்கமுற்றொளிர்வதவ்வோங்கல். (௭)

ஆழிவண்குளப்புனன்முகிலுழவர்கால்யாப்ப
வாழிமன்னுயிர்ப்பயிர்தழைநிலச்செறுமலர்ந்த
பாழிவெண்மரைமலர்திருக்கயிலைநம்பரன்றேன்
வீழும்வண்டினமான்முதல்விண்ணவர்முனிவர். (௮)

ஆசில்பொன்வரைமுதலனவிலவிருக்கவும்வெண்
டேசிம்மால்வரையிடைப்பரன்விருப்புறச்செய்தல்
பூசுநீறணிமதிநதிபொலிவிடைக்கேற்ப
வீசநன்னிறமிகவிளங்குதல்பற்றிப்போலும். (௯)

பற்பனுயில்கொளப்புரியுதவிபாரான்மால்
வெற்பினாற்பலரொடுங்கலக்கினனிவன்விரும்பி
யெற்பணிந்திடவாவனென்றிரும்பயப்புணரி
பொற்புறத்திரண்டுயர்ந்துநிற்பதுபொருஉமதுவே. (௧௦)

கடல்சூழ்ந்திடப்புவனமுண்டெழுசெழுங்கருங்கார்ப்
படலமீமிசைப்படிதரப்பொலிந்தொளிர்பான்மை
யடல்கொடன்னிடத்தமர்தருமண்ணல்போற்றானு
முடலும்வெங்களிற்றுரியதன்போர்த்ததையொக்கும். (௧௧)

உவந்துவானவர்மங்கையரடியொழுகருவிக்
கவந்தமாடவந்நீமுலைக்குங்குமங்கலந்து
சிவந்துகாட்டன்முன்னரக்கன்மெய்நெரித்தலாம்செந்நீர்
நிவந்துமேலெழீஇச்சூழ்ந்தினுநிற்பதுநிகரும். (௧௨)

இயலுமெந்நிறமுந்தொழுமுதனிறவியல்புற்
றுயர்வுமொப்புமிலாதவனுமையொடுமுறையு
நயமுமோர்ந்துமெய்மகிழ்வினன்கானந்தக்கண்ணீர்
வியமுறப்பொழிவதுபொரூஉமருவியின்வீக்கம். (௧௩)

அடியினன்பொடுசூழ்ந்திடுமமரர்களம்பொன்
முடியின்மாலைகள்சிந்திச்சூழ்முடங்குபுகிடப்பப்
படியிலெண்டிசைப்பணிகளும்பரன்புயப்பணியாங்
கடியியைந்திடச்சூழ்ந்தருந்தவஞ்செயல்கடுக்கும். (௧௪)

என்னமாதவஞ்செய்வவிப்பணிகளென்றுணர்வான்
பொன்னவாந்திருமேனியான்சடைப்புயங்கங்கண்
மன்னுபல்வழிக்கொடுவிரைந்திரங்குபுவரல்போற்
பன்னுமாமுடிநின்றருவிகள்பலவிறங்கும். (௧௫)

நலந்தவாவடிவரைப்புனலாடிவிண்ணாட்டுப்
பொலந்தவாதமெய்நங்கைமார்வரங்கொளும்பொருட்டுக்
கலந்தவன்பொடுவிரித்தசெங்கரங்களுங்கவின
வலர்ந்தகாந்தளும்வேற்றுமைதோற்றிடாவாங்கண். (௧௬)

அடிவணங்கியநெருங்கியவமரர்மோலிகளிற்
பொடிவயங்குசாதனச்சயிலாதிதன்பொற்கைப்
படியில்வேத்திரந்தாக்கலிற்சிதர்மணிபரந்து
கடிகுலாநவமணிவரையென்னவுங்கதிர்க்கும். (௧௭)

பருவமாமதிமுடிமிசைத்தவழ்தொறும்பணிக்கு
வெருவுறானுருவேற்றுமையுணர்கிலாதென்றே
கருணையாளியச்சிலம்பினுமங்கரைவார்க்கு
மொருவிலாதவெப்பகையும்விட்டொருவுதலுணரான். (௧௮)

புனிதனாரொடுசேவிக்கவந்தவான்பொழிந்த
வினியபால்சுனைபாய்ந்திடப்பிரமனாரெகினங்
கனிவினீர்பிரித்துண்டுவக்குங்கருதுயிரு
மனியநீள்பெரும்போகத்திற்களித்திடன்மறந்து. (௧௯)

பொறியடக்கமும்போகுகாலின்மையும்பொருந்தி
நெறியின்வந்ததேயுண்டுகந்தரந்தொறுநிலவுங்
குறிகொள்யோகியர்தந்நிகர்த்தாரெனக்குறித்துச்
செறியுமாமணிப்புறவிளக்கிடுஞ்செழும்பணிகள். (௨0)

சித்தர்கின்னரர்கருடர்காந்தருவர்கடேவர்
முத்தர்யோகியர்பன்னகர்சுருதிமாமுனிவர்

பத்தர்தானவர்பாரிடரின்னுமற்றுள்ள
சுத்தர்வாழ்த்திடுபேரொலிதூங்குறுதென்றும். (உக)

வினையமுற்றபன்னூலுணர்ந்துணர்வின்மிக்குரையாற்
புனையவல்லவரும்புறங்கொடுத்திடப்பொலியு
மினையபேரெழிற்கயிலையினிலங்குமோர்கோட்டி
னனையவார்பொழிலொன்றுநன்றுள்ளதுமாதோ. (உஉ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இனிதுறமணந்துதண்ணென்றிரித்துவெப்படைந்துளார்க்குக்
கனிமகிழ்சிறப்பநல்கிக்கலப்பினின்றகலவொண்ணுப்
புனிதவின்பமுமளித்துப்புகழுறப்பொலியும்பொங்கர்
பனிமதிமுடித்தவேணிப்பகவனாருளேமானும். (உங)

சுடர்செய்தண்மலர்கள்செற்றிச்சுவைமதுப்பிலிற்றியென்று
மிடரகல்குளிர்ச்சிகாலுமிப்பொழிலின்றேயாகிற்
படர்சடைப்பெருமானன்றுபாற்கடலுதித்ததீமை
யடர்விடமுண்டவெப்பமாற்றுதலரிதுபோலும். (உச)

நூக்குறுமானம்பொங்கநோண்டுநெய்வாக்கிமேன்மே
லாக்குபுமுனிவர்விட்டவடுமெகத்தழலையண்ண
னீக்கிலான்குடங்கையேற்றுனினைத்திடுவார்க்கும்வெப்பம்
போக்கிடப்பொங்கராற்றும்பூங்குளிருணர்ந்துபோலும். (உ௫)

சவியுறத்தளிர்த்துப்பூத்ததடப்பெருங்கனிகளெல்லாம்
புவிபுகழ்வள்ளிக்குன்றப்புனத்திறவுளர்கோனீன்ற
குவிமுலைக்கொவ்வைச்செவ்வாய்க்கோற்றொடியுவகைபூப்பக்
கவினுறமுளைத்ததெய்வக்கனியையேநிகர்க்குமாதோ. (உசா)

பற்பலவண்டமுற்றும்படிவத்தின்மருவாநிற்பப்
பொற்புறநிற்குமேலாம்புருடனேபுரையவெங்கும்
வற்புறுபைங்காய்மல்கவானமுங்கீண்டுமேல்போ
யற்புதம்பயப்பயார்க்குமதவுகனிற்குமன்றே. (உஎ)

கற்பினிற்சிறந்ததெய்வக்காரைக்காலம்மையார்தஞ்
சொற்பழுதுறுமன்முன்னர்ச்சுடர்மதிவேணியண்ணல்
வற்புறக்கொடுத்தநற்றேமாங்கனிபாதவங்கள்
பற்பலசெறியச்சோலைப்பழுத்தமாங்கனியேபோலும். (உஅ)

தகுமரத்துறையிற்பட்டீச்சரத்திற்சம்பந்தர்க்கைய
னகுமணிச்சிவிகைகாளநற்குடைபந்தர்நல்கத்
தொகுகதிர்மணியச்சோலைசூழ்வேயீன்றனவேயுண்மை
மிகுதியப்பரமன்பாற்போய்வினையுணர்ந்திடுதலம்மா. (உகு)

தந்திமாமுகத் துவள்ளறடவரைகிண்டவேற்சேய்
வந்தியாநின் றுதந்தைமாண்மரக்கனியைக்கொள்வான்
முந்தியாதரவின்மேன்மேன்முயன் றனர்வலஞ்சூழ்ந்தார்வா
னுந்தியார்சினையப்பொங்கருட்புகுந்தறியார்போலும். (௩0)

வெண்மலர் துவன் றிவண்டுவிரிசினைதோறுமொய்ப்ப
வுண்மலர்தேனுறைப்பவூங்குநின் றிடுமெராக்க
டண்மலர்நீறுபூசித்தயங்குகண்மணிகள்பூண்டு
கண்மலருறைப்பநிற்குங்கரிசின்மெய்யுன்பர்போன்ற. (௩க)

தலைவிரிதாழைமீப்போய்த்தயங்கிடுங்காட்சிமற்றை
நிலையுடைத்தருக்கட்பாராநிகர்த்திடரெம்மைநீயிர்
மலைமகள்கொழுநன்மூக்கண்வாய்த்தவெஞ்சினையாங்காய்க
ளிலைநுமக்கதனல்யாமேயேற்றமென் றுவத்தல்போன்ற. (௩உ)

வளர்ச்சியொன்றன் றிச்சில்லோர்மருவினுநீழலீயாத்
தளர்ச்சியிரெங்குங்காயாத்தரத்திரென்ஞெளிர்தல்போலக்
கிளர்ச்சிகொடென்னைப்பாங்கர்க்கெழுநிழல்பலர்க்குமீத்து
விளர்ச்சியில்கனிவேர்முன்னுமிகக்கொடாசினிவிளங்கும். (௩௩)

இன்சுவைக்கனியாலொத்தீரெனினுமுட்குற்றமுண்டு
மின்செய்மங்கலத்தினம்போன்மிகுமுபகாரஞ்செய்யீ
ரென்செயனுமக்கென்றீரப்பலாக்களோடெதிர்ப்பவேபோல்
நன்குலைக்கதலிபல்லநலந்தழைந்துயர்ந்துநிற்கும். (௩௪)

கருவுயிர்த்தொடுங்கிமாயுங்கழிசிறப்பறியார்யாரே
பருவமென்கதலிகாண்மென்பழக்குலைபலவுயிர்த்து
மருவிலேமொடுக்கநாளும்வயங்குவமெனக்கர்ச்சூரம்
பொருவிறம்முயர்ச்சிகாட்டல்போற்பொலிந்தோங்கும்பல்ல. (௩௫)

அறந்தழையுமைபாகன் கையணிகனியருளும்யாமே
சிறந்தனமென் றுள்ளோகைதேக்குதேந்தாடிமங்க
ணிறந்தழைந்தினிமையார்ந்துநிழல்படப்பொதுளிநிற்கு
முறந்தபல்சமயத்துள்ளுமுத்தமசைவமேபோல். (௩௬)

இருள்படமலர்ந்தகாயாவினங்களாங்காங்குநிற்றன்
மருள்படுமெனத்தோர்க்கெட்டாவளம்பொழிற்செல்வநோக்க
வருள்படுமாயரெண்ணிலாதவராங்குவந்து
தெருள்படநோக்கிச்சிந்தைதிகைத்துநிற்பதனையெய்க்கும். (௩எ)

பொன்னிறம்புறங்கொடுப்பப்பூத்தணிநீழல்வாய்ந்து
நன்னர்மாமன் றல்வீசிநலங்கெழுகடுக்கைநிற்ற
லுன்னுசெந்நிறம்விளங்கவுயிர்க்கடிநீழல்செய்து
தென்னருண் மணப்பநிற்குஞ்சிவபிரான்பொருவுமாலோ. (௩அ)

பூத்தகிஞ்சுகத்தின் மூழ்கிப்பொற்றளிரசோகுநிற்றன்
மாத்தலைபறிக்குமூத்தைதவாயருகந்தர்கூடி
யேத்துரையொழித்திடும்பாக்கிருஞ்சிகைத்தழலுண்மூழ்கித்
தூத்தவம்புரியாநிற்குந்தோற்றமேயொத்ததம்மா. (கக)

கொடியிடையருப்புக்கொங்கைக்குலமலர்முகம்வாயங்கை
யடிநறுந்தளிர்மாமேனியமைப்புயப்பொங்கர்மங்கை
படியில்செம்பட்டுடுத்தபான்மைபோல்வேலிமுற்று
மடிவிலொண்செவ்வரத்தமலர்கள்பூத்தொளிருமாதோ. (சo)

இசைகொளவ்விடஞ்சார்ந்தின்பமெவ்வகையுயிருந்துய்த்து
வசையுறுமீறிலாமைவயங்குதலுணர்ந்துமென்றே
திசையெலாங்கமழப்பூத்தசெண்பகமூசாவண்ட
ரசைவிலாற்கன்பர்சாத்துமலரெனவறிந்துபோலும். (சக)

மருத்தருகூந்தற்செவ்வாய்வாணுதற்பிராட்டியோடு
கருத்தபுமேனியண்ணல்களிப்பின்வந்துலவுங்காலைப்
பெருத்திடுமகிழ்ச்சிபூப்பப்பெரும்பொழினிலைத்தேர்பல்ல
திருத்தகவணிந்தாலென்னச்செருந்திகளலர்ந்துநிற்கும். (சஉ)

பழியறுபொழிலெலாந்தன்படைக்கலச்சாலையாகக்
கழிமகிழ்சிறப்பக்கொள்ளுங்கருப்புவிற்சுருப்புநாணு
னெழில்செயப்பொழில்புக்குள்ளவிறும்பூதுநோக்கித்தாழ்ந்தாங்
கொழிவறமலர்ந்தகாஞ்சியொண்மையிற்குரங்குமோர்பால். (சங)

அடும்பழிபாவம்போக்கியறத்தாற்றிற்பொருளையீட்டிக்
கடும்புமுனைவர்க்கும்பாத்துக்களிப்பினுண்டுவக்குஞ்செய்யோன்
மடங்கலில்வழியேபோலமண்டிப்பற்பலகிளைத்துத்
தடங்கவிலாதுபைத்துத்தழையுமாதவிகளோர்சார். (சச)

கொவ்வைவாயெம்பிராட்டிகொங்கைபோலரும்புதோற்றிச்
செவ்வியபெருமான்மேனித்திருநிறமலர்ந்துபின்ன
ரவ்விருவரும்வைகற்காமணையுறக்காய்க்குமென்று
லொவ்வுமோகோங்குசெய்தவுத்தமதவத்திற்கொன்று. (சரு)

ஆயிடைத்தவஞ்செய்வோர்களடிக்கடிமூழ்கவைகும்
பாய்புகழ்த்தடப்புனற்குப்படர்மணமுண்டேயென்னக்
காய்கதிர்மணியெறிக்குங்கரைவளர்பாடலங்கள்
சாய்கிளைததையப்பூத்ததண்மலருகுக்குமன்றே. (சசா)

வளம்படுகயத்துப்பூக்கண்மலர்ந்துபிற்கூம்புமென்று
விளம்புவர்வரையின்சால்பால்விளங்குமத்தடத்துள்வைகுந்
தளம்படுபதுமமாம்பறழையுமுற்பலங்கண்மற்றுங்
களம்படக்குவிதலின்றியலர்ச்சியேகாட்டுமென்றும். (சஎ)

மேவரக்குவிதல்பின்னர்விரிதலற்றொளிரப்பூக்கள்
கேவலசகலநீத்தகிளர்ச்சியோர்தன்மைதேற்று
மாவயிற்பயிலனங்களளவிலாப்பிரமரூர்பொற்
றூவிபவனங்களெல்லாந்தொழுதெழக்களித்துவாழும். (சஅ)

பூமருவியகார்க்கூந்தற்புனையிழையெம்பிராட்டி
காமருசாயலேய்க்குங்கலவமாமயில்களோர்சார்
தேமருமொழிபோற்பேசுஞ்சிறைப்பசுங்கிளிகளோர்சார்
யாமருவுண்கணொத்துவாழுமான்களோர்சார். (சகூ)

அளந்திடற்கரியபெம்மானவிர்முடிக்குரிமைமிக்க
வளந்தவத்தெரிக்குமாபோன்மற்றவனயனம்போலுந்
தளர்ந்திடாச்சூலம்போலுந்தண்டளிர்பொதுளிநிற்குங்
கிளர்ந்திடுமிச்சாஞானக்கிரியையாய்க்கெழுமுவில்வம். (ரு0)

தரைபுகழ்மலயக்குன்றச்சந்தனுடவிசாலன்பி
னுரைபெறுகயிலைக்குன்றத்தொளிருமப்பொழிற்குநாளும்
வரையறைசெய்தனுப்புமாணிறையென்னமென்பூ
விரைகமழ்குழவித்தென்றல்விருப்பின்வந்துலாவுமாலோ. (ருக)

மூவரும்வழுத்தவைகுமுதல்வனூர்கயிலாயத்திற்
றேவருமணுகொணாதசெழும்பொழில்வளப்பம்வல்லோர்
யாவருமுடிவுபோகவியம்பிடமாட்டாரென்னிற்
றூவருமடமையேனோசாற்றிடுந்தகுதியுள்ளேன். (ருஉ)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

இனையவார்பொழிலை யெய்தியோரிடத்திலின்பமார்தரு சுகாச
னத்தில், வினையெல்லாங்கடியும்வெள்ளியநீறு மிளிருங்கண்மணியு
மெய்விளங்கத், தனையொவ்வாப்பரன்றானுன்னிநன் கிருந்தான்றவ
மலிசூதனக்காலை, நனையநாண்மல ரொண்டளிர் கனிதுவன்றுநை
மிசாரணியத்திலிருந்த. (ருந)

விட்டுணுவிருத்தனல்விசாலாக்கன்விளங்கிடுவச்சகுண்டினனே
முட்டிலன்புடைச்சாபாலனாருணியேமுயல்சமதக்கினிசடரன்
மட்டிலாத்தவச்சங்கமன்செயன்பக்கன்மகாக்கிரீபன்மகாகாயன்
கட்டுரைப்பாசதரன்மகோதரனேகருணன்பாரகன்மகாவாகு. (ருச)

சாலனுத்தாலகன்மகாசேனன்காணனுமலகப்பிரியனே
சீலமாசார்த்திரன்றிரிபாதன்றிகழ்தருமுக்கிரவீரன்
ஞாலமேத்தேகபாதனேபதுமநாபனேநற்றுவிபாதன்
கோலவுத்தமானுத்தமன்மகாவீரன்கோதில்கைவல்லியன்மாதோ. ()

கங்கணன் காலாக்கினியுருத்திரன் கல்லாரனேகளாதரமுனி வன், மங்கலில்சுவேதாச் சுவதரன்சுவேத வாகுமா முனிவன் மற் றோரும், பங்கமிலிவர்மாணுக்கருங்கூடிப் பாசத்தைநாசஞ் செய் பாக்குத், துங்கமார்கயிலை யடைந்தனர் தொழுதார் சோலையுட்புகுந் தனர்மாதோ. (ருசு)

செஞ்சடாடவியும் வெள்ளியநீறுந் திகழுருத்திராக்கமுந் தரி த்து, விஞ்சுமாமறையாகம புராணங்கள் விளங்குறு மருத்தமோரு ருக்கொண், டெஞ்சலின் றிருந்தாலனைய தூயவனை யிருந்தவத்தலை வனைக்கமையே, துஞ்சியமனத்தினருள் சுரப்பானைச் சூதமாமு னிவனைக் கண்டார். (ருஎ)

தண்டெனவீழ்ந்தா ரஞ்சலிகுவித்தார் தண்ணரு ணிறைதரவு ண்ட, வண்டெனக்களித்தார் தோத்திரநவின்றார் வாருதிபருகிய மங்குல், விண்டெனக் கண்ணீர் பொழிந்தனர்சூத மெய்த்தவதிருவு ளத்தன்பு, கொண்டெமக்கினிய ஞானயோகமுநீ கூறிடவேண்டு மென்றிரந்தார். (ருஅ)

சூதமாமுனிவன் றிருவுளமிரங்கிச் சுடர்முகமலர்ந்து முன்னி ன்ற, மாதவர்ப்பாரா விருக்கெனப்பணித்து மலைமகள் பாகத்தெம் மானை, வாதராயணனை யிதயதாமரையில் வைத்தனன் றியானித்த பின்னர்ப், போதமா முனிவீர் விருப்பொடு கேண்மின் புகலுவலெ ன்று வாய்மலர்ந்தான். (ருகூ)

மந்தணமான ஞானயோகத்தை வழிபடுமொண்டளப் பானுக், கந்தணன்கயிலை யண்ணன்முன்னுரைத்தா னயவேலையி னுமையம் மை, சந்தமென்குறங்கினிருந்து மெய்ஞ்ஞானச் சண்முகவேளினி துணர்ந்து, பந்தமுற்றகலத்தனைவழிபடு பண்புடை வசிட்டனுக்கி னிதுரைத்தான். (சுO)

அன்னவன்சத்தி முனிவனுக் குரைத்தானவன் பராசரற்கினி துரைத்தான், மன்னமற்றவன்பால் வழிபடஇக்கேட்டு வாதராய ணனுணர்ந்தனனம், முன்னவன்பால்யானன்கு கேட்டுணர்ந்தேன் மூதறிவுடைமையும் பெருமான், பொன்னடிக் கமலத்தன்புமிக்கு டைய புண்ணியம்பொலி பெருந்தவத்தீர். (சுக)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

எனக்கவனுரைத்தவாறே யியம்புவனுங்கட் கென்றுன்
கனக்கயிலாயமேயகண்ணுதற்சாமியன்பன்
மனக்கினிதாகக்கேட்டமாண்புடைமுனிவரெங்கள்
சினக்கடுவினைகள்யாவுந்தீர்ந்தவென் றுவகைபூத்தார். (சுஉ)

முதலாவது

ஞானயோகத்தை யுணர்ந்தவாறுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - சுஉ.

௨

இரண்டாவது

# வருணாச்சிரமநிலையோர் மேன்மையுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

முப்புரம்பொடித்தமுன்னோன்முண்டகப்பதமுள்வைத்த
வொப்பின்மாதவத்தீர்ஞானயோகத்தையுணர்ந்தவாறு
செப்பினேமினித்தந்தம்மாச்சிரமத்தில்வழாதுநிற்குந்
திப்பியகுணத்தார்மேன்மைத்திறமுநன்குரைப்பாங்கேண்மின். (க)

முன்னமோர்பிரளயத்துமுடிவினிற்பரம்பொருட்குப்
பின்னமாமுலகமூழ்கப்பெற்றதுதமோமயத்தி
லன்னதன்பின்புராதனருளிற்சத்துவத்தினின்றும்
பன்னரிதாயமூலப்பகுதியுண்டாயிற்றன்றோ. (௨)

எக்குணங்களுமில்லாதானிறப்பொடுபிறப்புமில்லா
னக்குணத்தவர்கொண்டாடுநம்பிரான்கூற்றினின்று
முக்குணத்தினிலுண்டானார்முத்தொழினடத்தமூவ
ரக்குணத்தவர்தம்மூர்த்திபேதங்களனேகமாமால். (௩)

புண்ணியனருளாற்பஞ்சபூதஞ்சத்தாதியைந்து
கண்ணியஞானகன்மேந்திரியங்கள்பஞ்சவாயு
வண்ணியகரணமின்னுமனேகவவ்வியத்தபேதம்
பண்ணியயாவுங்காலபாகத்தினுதித்தவம்மா. (௪)

அலரணைக்கிழவனம்மானருளினாற்படைத்தானண்ட
மலருமவ்வண்டமெல்லாவுலகமும்வானநாடர்
பலருமானிடருமற்றைப்பயில்சராசரமுநாளும்
புலர்தராதுறையத்தன்னுட்பொருந்திடங்கொடுத்துவைகும். (௫)

உரைசெயிவ்வண்டத்துண்மண்ணுலகினருய்யநாதன்
வரைசெயாச்சிரமநான்குவகுத்தனனதனுற்றத்தம்
விரைசெயாச்சிரமநின்றும்விலகுறாவொழுக்கம்பூண்டு
புரைசெய்புன்பவத்தினீங்கிப்பொருட்கதியடைவானெண்ணி. (௬)

நித்தனைநிமலன்றன்னைநிருவிகாரனையநாதி
முத்தனைமூவருக்குமுதல்வனையெவ்வுயிர்க்கு
மத்தனையமலைபாகத்தற்புதப்பிரானையென்றுஞ்
சுத்தனைஞானானந்தசோதியைப்பூசையாற்றி. (௭)

காரணமுலகிற்காகிக்காரணங்கடந்ததாகி
யாரணமுடிக்குமெட்டாவானந்தரூபமாகி
நாரணன்பிரமன்றேடிநணுகொணாப்பொருளுமாகிப்
பூரணமாகிநிற்கும்புண்ணியபுராணபோற்றி. (அ)

தத்துவாதீதனாகித்தத்துவசொரூபனாயா
றத்துவாமூர்த்தியாகியாக்கல்காத்திடலழித்தல்
பொத்துவாதனையுயிர்க்குப்புரிந்தருள்சுரப்போனாகி
முத்துவாணகையோர்பாகமுதல்வனாய்நின்றாய்போற்றி. (கூ)

பன்னிராசதசருக்கம்படவிராசதவுருபந்
துன்னுவேதாவாயாக்கந்தொக்கசத்துவத்திதிக்கு
மன்னுதாமதவுருபமாலாய்த்தாமதவழிப்புக்
குன்னுசத்துவவுருபவுருத்திரனானாய்போற்றி. (கம)

திடமுறுதவர்தியானஞ்செயப்படுமுதலேபோற்றி
யுடன்முதனின்றுநல்கியுயிர்க்குயிரானாய்போற்றி
படர்தமையிழந்தோரெய்தப்படுமொருபொருளேபோற்றி
நடலையிப்பவஞ்சவாழ்க்கைநசித்திடவருள்வாய்போற்றி. (கக)

வம்பலர்கடுக்கைமாலைவயங்குசெஞ்சடையாய்போற்றி
யும்பலினுரியாய்போற்றியோதநஞ்சுண்டாய்போற்றி
செம்பலமடியார்க்காக்குந்தீர்விலாச்செல்வபோற்றி
யம்பலத்தாடிபோற்றியருட்டிருவுருவபோற்றி. (கஉ)

எனத்துதியியம்புவாருக்கெம்பிரானருளினாலே
தனக்கிணையிலாதமேன்மைத்தத்துவஞானமுண்டா
மூனற்கருமந்தஞானமுதிக்கவஞ்ஞானநீங்கு
மினக்கருமத்தானீங்காதிருண்ஞானம்போகமுண்டாம். (கங)

மயல்செயஞ்ஞானநீங்கமறிந்திடும்பாசமும்பின்
னியல்பெறுமுத்தியெய்துமித்தகுதொழினின்றோரே
நயல்வளர்மேனியானைத்தண்ணருவிதழியானைப்
புயல்வளர்வேணியானைப்போற்றுதற்குரியராவார். (கச)

தருணமாமதிமுடிந்ததம்பிரானடிப்பூசைக்கு
வருணமாமொழுக்கினின்றும்வழுக்கினோருரியராகா
ரிருணமாக்கொண்டியாருமிந்நிலையொழுகல்வேண்டு
மருணமாச்சடையீர்வேதமறைவதுமிதுவேயாமால். (கரு)

இரண்டாவது வருணாச்சிரம நிலையோர்மேன்மையுரைத்த
வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் உ-க்குத் திருவிருத்தம் - எஎ.

உ

# மூன்றாவது

# பிரமசரியவிதியுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பரமன்மலர்த்தாளுளத்திருத்திப்பாசவருக்கமோரைந்துஞ்
சரமமுறவென்றிடுந்தவத்தீர்சூக்கவருணாச்சிரமநிலைக்
கிரமமுடையாருயர்வுரைத்தாங்கிளராச்சிரமங்களுண்முதலாம்
பிரமசரியவாச்சிரமம்பேணும்விதியும்பேசுவாம். (க)

தேற்றமுறுநல்லுபநயனஞ்செய்துகொண்டமறைச்சிறுவ
ளூற்றன்மிகவுந்தரும்வேதவத்தியயனமொருவானைப்
போற்றும்பலாசகூவிளமேபோதியேயிம்மூவகையுட்
சாற்றுங்கேசாந்தத்தளவோர்தண்டுதாங்கல்விதியாமால். (உ)

துகடீர்முஞ்சிமேகலைமான்றோறங்குபவீதந்தரித்துத்
தகவார்மனையிலனம்பிச்சைதானேற்றுண்டுசந்ததமு
மிகவாணுகியாசிரியற்கியலும்பணியோகையிற்புரிந்து
சகமாதரிக்குந்திரிகாலசந்திக்கடனுஞ்செயல்வேண்டும். (ந)

காமங்குரோதமுதற்குற்றங்கடிந்துகாலைமாலையினுஞ்
சேமம்பெருகுமக்கினிகாரியமுஞ்சிறப்பச்செய்வானைத்
தோமங்கறவானவர்முனிவர்தொக்கபிதிரர் தருப்பணமு
மாமந்திரத்திற்புரிந்திடுவானுவான்பிரமசாரியே. (ச)

ஓங்குமோமாக்கினியேனுமொளிரும்விரசாக்கினியேனும்
பாங்கினுதவுதிருநீற்றைப்பகரும்வேதமந்திரத்தாற்
றூங்கியபிமந்திரித்தன்பிற்சருவாங்கமுமுத்தூளனஞ்செய்
தாங்கத்திரிபுண்டரநெற்றியகலம்புயங்கள்களந்தரித்து. (ரு)

குற்றமகன்றமனத்தினனுய்க்கூடாரரணநீறாகச்
செற்றபரனையுமையோடுதியானம்புரிந்துசூவாதி
மற்றவுபகரணங்களெலாம்வாய்ப்பத்தேடியப்பரமன்
பொற்றபாதமருச்சித்துப்போற்றிவணங்கவேண்டுமால். (சு)

தந்தைதாய்முன்னவர்விருத்தர்சாற்றுங்குரவர்ஞானியர்க
ளிந்தநலமுள்ளோர்க்காணிலெழுந்துநாமகோத்திரமு
முந்தவுரைத்துவணங்கிடுகமுன்னுமவர்வாழ்நாணீடி
யந்தமடையாச்சவுமியனேயாகென்றுசிசெயல்வேண்டும். (எ)

ஆசாரியனை வணங்கிடுங்கால் னுன்வலத்தாளிடத்தாளிற்
றேசார்வலக்கையிடக்கையுறச்சிறப்பின்மாறிவணங்கிடுக
வேசாராவிலவுகிகநூலியல்வைதிகநூன்ஞானநூல்
பேசாரம்பத்தினுமுன்னர்ப்பேணுகுரவற்றொழல்வேண்டும். (அ)

தன்றாய்தந்தைகுருவங்கிசத்தார்க்குளம்வாய்மெய்யடக்க
நன்றாசிரியன்சந்நிதியினயர்ந்துதொழுதஞ்சலிசெய்து
நின்றாரருளீதரப்பெற்றுமேரலாதவிட்டிருத்தல்
பின்றாவொழுக்கமெனக்கொண்டோன்பிரமசரியசிகாமணியே. (கூ)

உண்மைமொழிந்துவரல்கற்றவோத்தைமறவாதுறலன்பின்
வண்மையுறுநித்தியகருமம்வளருநைமித்தியகருமந்
திண்மைசிறக்குங்கதிநிமித்தஞ்செய்துவருதல்பிச்சையன
மண்மைமறையோரகத்தேற்கவகப்படாதபக்கத்தில். (க0)

வேறுவருணத்தாரகங்கண்மேவித்தகுதண்டுலமேற்று
மாறுகடியாசிரியனுக்கும்வழங்கிப்புனிதமொடுபதஞ்செய்
தூறுபுனலீராசமனமுயர்பிராணாகுதிசெய்துமுன்
னேறுகிழக்குமுகநோக்கியிருந்துபுசித்தல்கடனாமால். (கக)

சீரார்மறையோன்பவதிபிட்சாந்தேகியென்றுஞ்செகம்புரக்கும்
பேராரரசர்குலத்துதித்தோன்பிட்சாம்பவதிதேகியென்று
மேரார்தருவைசியன்பிட்சாந்தேகிபவதியென்றுமுரைத்
தூராரகஞ்சென்றியாசகித்தலொத்தவிதியென்றுரைப்பாரால். (கஉ)

அறையும்பெருமைமிகுவேதவத்தியயனமல்லாம
னிறையுமற்றைமனுச்செபித்தனீக்கவேண்டுநீள்கதிரோ
னுறையுந்திசைநோக்கியும்புசித்தலொக்குமிவைமுன்விதியனைத்தும்
பொறையுந்தவமுமிகவளரப்போற்றுவோனேபுலமிகுத்தோன் (கங)

அரையினுடுக்குமொண்டானையடுபுல்லதளாக்கொண்டானைக்
கரையிலுலகங்கண்டானைக்காமமாதிவிண்டானைத்
திரையில்வருநஞ்சுண்டானைச்சிரஞ்சேர்மதியத்துண்டானைப்
புரையில்சுரர்செய்தொண்டானைப்போற்றியொழுகவெப்போதும்.()

இன்னபிரமசரியவிதியியற்றுங்காலைவிராகமிகிற்
பன்னவருமுத்தியினிமித்தம்பரமவஞ்சவாச்சிரமந்
தன்னதாகும்வணம்விரைந்துசந்நியாசஞ்செயக்கடவன்
மன்னவுளதேற்காமமனைவாழ்க்கைமருவன்மரபாமால். (கரு)

மூன்றாவது பிரமசரியவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம்ங-க்குத் திருவிருத்தம்-கூஉ.

உ

## நான்காவது

# கிரகாச்சிரமவிதியுரைத்த வத்தியாயம்.

(கலிநிலைத்துறை.)

ஆறுசூடிதன்னருளினாற்சஞ்சிதமழிய
வேறும்வல்வினையின்றிநன்றிருந்தவமியைந்தீர்
வீறுசேர்முதலாச்சிரமத்தியல்விரித்தாங்
கூறுதுங்கிரகாச்சிரமத்தர்கோட்பாடும். (௧)

பிரியமாகிமுன்சொல்லியவிதிப்படிபிரம
சரியநன்கனுட்டித்தபின்றக்கநூலொழுக்க
முரியதேசிகனனுஞ்ஞையாலொத்தநன்னாளிற்
றெரியவாஞ்சமாவர்த்தனஞ்செய்துகொண்டதற்பின். (௨)

மனையறத்தினுக்குதவியாகிமித்தம்வண்குலத்து
ணினைதனக்கனுகூலமாய்நிகர்த்தகோத்திரத்திற்
புனையுங்கற்பினுக்குரியபல்சின்னங்கள்பொருந்த
வனையும்பேரெழிலொடுமுதித்திட்டவோர்மாதை. (௩)

தனதுசூத்திரவிதிப்படிமணஞ்செயத்தகுமாற்
புனல்விராவியகுடிஞைதாரகைதமைப்பொதியு
மினவிருக்காமம்பெறுமாதர்களேலார்
தினமும்பன்னியோடறத்தையாசரித்திடல்சிறப்பே. (௪)

பாரியோடவுபாசனஞ்செயல்விடிற்பதித
னாருமற்றவள்பூத்துநீராடுபின்பதினா
றொருநாளிற்சந்ததிபெறப்புணர்ச்சியையுறுத
னாரின்வானவர்நல்லழலதிதியர்நிமித்தம். (௫)

பாகஞ்செய்திடலறநிமித்தந்தொழில்பண்ணல்
யாகஞ்செய்திடல்யாத்திரைசெய்திடனிமித்தம்
போகநல்குமிட்டிகள்செய்விப்பார்மறைபுரைவிண்
டேகவத்தியயனஞ்செய்விப்பாரிடத்தேற்றல். (௬)

இன்னநான்குமிவ்வாறுசெய்பவன்மனையிருந்து
நன்னர்முத்தியையடைபவனொடுமிவைக்குப்
பின்னமாகினைத்தியற்றிடுவோன்பெருநாளும்
பன்னருங்கொடுநரகிடைவீழ்ந்துழைபவனே. (௭)

விடியுமுன்னரேசனமிகாத்தகுமிடமேவிப்
படிவிதிப்படிசலமலம்விசற்சனம்பண்ணி
யடிகரங்குதங்குய்யமண்ணறலிட்டுக்கழுவிச்
செடியிலாசமனம்புனலுதபுறச்செய்து. (௮)

சுத்திசெய்துபன்னிருதரம்புனன்முகத்துமிழா
வொத்தகாட்டமென்றுமிழ்ந்துவாய்கொப்புளித்தொளிர்நீ
ரத்தமேந்தியாசமனஞ்செய்தமையநாணமுஞ்செய்
துத்தமர்தருசந்தியாவந்தனமுஞற்றி. (௯)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

முத்தரம்பிராணாயாமமுறையுளிசெய்துபின்னர்ச்
சித்தமாசின்றிக்காயத்திரியினைச்செபித்துச்செங்கே
ழுத்தமப்பரிதிதன்னையுறுமனுவாற்றியாணித்
தத்தனதடிநினைப்பானவன்மனையொழுக்கம்பூண்டோன். (௧௦)

கதிரவனுச்சிமேவுங்காலுமிவ்வாறுசெய்து
விதிவழிபிரமயாகம்வேதபாராயணஞ்சீர்
பதியழற்கருமம்பூதபலியேயதித்திபசிரார்த்த
மதிமிகுமதிதிபூசைமாண்புறச்செய்யவேண்டும். (௧௧)

பாப்புகழ்ச்சந்நியாசிபகர்தரும்பிரமசாரி
யாய்தருமில்லத்தட்டவடிசிலுக்குரியோராவார்
நேயமோடவருக்கோர்நாணோர்ந்திடாதனம்புசிக்கிற்
றுபவப்பாவம்போகச்சாந்திராயணமேசெய்க. (௧௨)

அவரைநாடோறும்போற்றலருளும்பிரிடத்துவைத்த
றவறிலாறுதல்வேண்டுஞ்சந்நியாசிகடங்கையி
லிவரவோரவிழோர்துள்ளியின்புனலீத்திட்டாலுந்
தவநெடுமேருவென்னச்சமுத்திரமென்னவோங்கும். (௧௩)

ஒருதரமில்லறத்தினுறைபவன்புசித்தல்வேண்டும்
பெருகியவசத்தனாகிற்பின்னுமோர்தரம்புசித்தன்
மருவியகவளநாலெண்வயங்குருக்குடவண்டந்தான்
பொருவியவளவைத்தாகும்புசிக்குமோர்கவளமாதோ. (௧௪)

போனகம்புசித்தலோமம்புரிந்திடல்செபித்தன்மேன்மை
யானவர்ப்பணிதலாசமனஞ்செய்தலாதியாய
வூனமிலிக்காலங்களுடவீதியாகனன்று
மென்மையிற்புசித்தல்வேண்டும்விசனமுள்ளின்றிமாதோ. (௧௫)

உசகபாத்திரம்வெதிர்ங்கோலொண்கரந்தரித்தல்வேண்டுஞ்
சிதமிகுதெய்வநீறுதிருமறைவிதிவழாம

விதமுறவங்கமெல்லாமியலவுத்தூளனஞ்செய்
ததமிலாமனுவென்றியாருமறைதிரியம்பகத்தால். (கசு)

பிரணவசகிதமாகப்பிறங்குபஞ்சாக்கரத்தான்
மூரணவித்துயர்த்துஞ்சீர்முப்புண்டரந்தரித்தல்வேண்டுங்
கரணமொற்றுமையினிற்பக்கனிவொடுமெவனெஞ்ஞான்று
மரணமுப்புண்டரந்நீற்றணிநுதறரிக்கவல்லன். (கஎ)

அன்னவன்வேதவத்தியயனஞ்செய்பயனுமற்றைப்
பன்னருமவிரதமெல்லாமனுட்டித்தபயனுமுள்ளா
னின்னமுப்புண்டரத்தையேமறைவிரிக்குநீராற்
றன்னம்விண்டோனும்பாவத்தழற்குழிநிரையம்வீழ்வான். (கஅ)

கண்டமணிநிறையப்பூண்டுகருதிலிங்கத்திற்காமர்
விண்மணிக்கதிர்சமழ்ப்பவிரிசடைப்பிரானைவெற்புப்
பெண்மணியொருபாலானைப்பிறங்கவாவாகனஞ்செய்
தொண்மணிப்புனல்பூமுன்னுவுறுபொருள்யாவுங்கொண்டு. (கசு)

(மேற்படிவேறு.)

பகர்பூசைசெயவேண்டும்யோகிகளாற்றியானிக்கப்படுதலானு
மிகவாதபெரும்பிரளயத்துறுபூதங்களெலாமிலீனமாகித்
தகவாரும்வண்ணமீட்டுற்பத்தியாகிவருந்தன்மையானு [மா•()
மிகவார்வமொடுமிலிங்கமென்றுரைப்பர்முழுதுணர்ந்தமேலோரம்

அவியாதுமுத்தழலும்வளர்த்துவரிற் பாவம்போமாகுஞ் சுத்தி, சவியாருங்கரணங்க ளதனாற் றத்துவஞானந்தானே யுண்டாம், புவியாருமகஞ்சுவர்க்கநிமித்த மியற்றிடி னதுவே பொருந்தும் வள்ளைச், செவியார்தன்மனைவியிடைத் தென்புலத்தார்க் குரியகடன் றீர்க்க வேண்டி. (உக)

புத்திரவுற்பத்திசெய்து கொளல்வேண்டு மெய்மொழி யெப்போதும்வேண்டு, மெத்தியபல்லுயிர்க் குமினிதறநடத்தல் வேண்டு மிந்தவிதிவழாது, பத்தியினில் லறநடத்திவருகாலை விரத்தியுறிற் பகருமேன்மை, வைத்தசந்நியாசியாய் வேதாந்தப் பொருளுணர் தன் மரபுமாதோ. (உஉ)

விரத்திமிகக்கதிவேட்கை மென்மேலுங் கிளைத்தெழின் மெய்ச் சந்நியாசம், பரத்தியலுமஞ்சவாச் சிரமத்திற்செய்தன்மிகப் பாங்கேயாகு, முரத்திலெளியவன் பகூதகங் குடீசகமிரண்டு மொன்றிலுள்ளச், சிரத்தையொடு சந்நியாசஞ் செய்தன் மரபென்று தெரிக்கும் வேதம். (உ௩)

அவ்வளவுவிரத்தியிலாமெனினில்வானப்பிரத்தமனுகியந்தச்
செவ்வியவாச்சிரமமனுட்டிக்கலாமதற்கும்வலிசேரானெனி

லொவ்வியவாழ்நாளளவுமில்லறத்தேயிருந்திடலுத்தமமாமின்பங்
கவ்வியவவ்வறமெவர்க்குமாதாரமாதலினுற்கடைப்படாதே. (உச)

(கலிவிருத்தம்.)

பல்லறங்களினுநற்பண்புசான்றவி
ரில்லறப்பெருஞ்சிறப்பியம்புவாரெவர்
நல்லறம்வழாவகைநடத்துவானெனி
னல்லறவெழுஞ்சுடரனையதேசினீர். (உரு)

நான்காவது கிரகாச்சிரமவிதியுரைத்த வத்தியாயம்

முற்றிற்று.

ஆக அத்தியாயம் ச-க்குத் திருவிருத்தம் ககஎ.

உ

ஐந்தாவது

# வானப்பிரத்தவிதியுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மலக்கோடுடைத்தைம்பொறிவாய்கண்மாறவடைத்துமனக்குடிலை
நிலக்கோடணிந்தானடிக்கடலுணீளப்பாய்த்துநிறைதவத்தீர்
விலக்கோதாதகிரகநிலைவிரித்தாமனுட்டிப்பாருளத்த
வலக்கோதனுக்குந்தகைசான்றவானப்பிரத்தவிதியுரைப்பாம். (க)

உரியமனைவிமைந்தன்பாலுறவைத்தாவதுடன்கூடித்
தெரியவரக்கொண்டாவதுநற்சிறப்பாருத்தராயணத்தில்
விரியவிளங்குநிறைபக்கமேவுஞ்சுபவாரஞ்சுபநா
ளரியசுபமுகூர்த்தத்திலடவிபுகுதல்வேண்டுமால். (உ)

ஒடிவிலியமாதிசம்பத்தியுள்ளோனுகித்தவஞ்செய்து
நெடியசாகமூலபலநிவேதித்தரற்குப்பின்னுகர்தல்
படியினகர்நின்றுங்கொணர்ந்தபகர்தானியஞ்செய்பாகத்திற்
கடிதலில்லாப்பதினுறுகவளங்கொளலுங்கடனுமால். (ந)

வேணிமுடித்தலுரோமமுகிர்வீழ்த்தும்வபனஞ்செய்யாமை
யாணமிகுப்பமறையாய்தலைந்துமகமோமம்புரிதல்
காணுமரநாருடுத்தறிரிகாலநானஞ்செயலுயிர்கள்
பேணுந்தயையுள்ளவனுதல்பிறழான்வானப்பிரத்தனே. (ச)

தானமேற்றல்புலான்மதுக்கொடன்மையிரண்டாந்தரம்புசித்த
லீனமென்றுகடிந்தானுயிரவிற்றியானம்புரிதலன்றி

யான துயில்கொண்டிடினிலம்பாயாகக்கோடல்பொறியடக்கல்
கானவிதழிமுடிப்பெருமான்கழல்சிந்தித்தல்கடனென்றும். (ரு)

காமம்வெகுளிமயக்கமறக்கடிதல்பிரசாபத்தியநன்
னுமம்புணருங்கிருச்சிரமேநயக்குஞ்சாந்திராயணமே
யமம்பயப்பமதிதோறுமியற்றல்வேண்டுநியதியாத்
தூமன்னிடுவெனிற்காலஞ்சுடரைந்தழற்குநடுநின்றும். (சு)

பரவைவறப்பமுகின்மேய்ந்துபயம்பெய்திடுகார்காலத்தி
னுரவுத்தருக்களடிமேவாதுறுவெள்ளிடையிற்போயிருந்தும்
விரவுபனிக்காலத்தறலின்மிகவுநனைத்தவுடையுடுத்துங்
கரவிலாததவம்புரிதல்கடனும்வானப்பிரத்தனுக்கே. (எ)

தேவர்பிதிரர்தருப்பணமுந்திரிகாலத்துஞ்செயவேண்டும்
பாவுதவஞ்செய்காலத்துப்படர்கானுகர்ந்தோர்கானிலையே
மேவல்வேண்டுமுன்பக்கமிகையில்பாலும்பின்பக்க
மாவினறுங்கோமயரசமுமாகாரங்கொண்டிடலுமாம். (அ)

இருந்துசருகுபக்கணமுஞ்செய்யலாகுமான்றோன்மெய்ப்
பொருந்துபோர்வையுடவீதம்புனிதமாகக்கொண்டிருத்த
லருந்துமமுதினுபநிடதவப்பியாசஞ்செய்திடுதல்
வருந்துன்பொருவியோகமுறல்வானப்பிரத்தற்கியல்பாமால். (கூ)

ஓமக்கருவியுதவாவேலொளிரக்கினியையான்மாவிற்
சேமத்துறவாரோபணமேசெய்தல்வேண்டுமில்லறத்தாற்
காமற்புரமந்திரவிதிகொண்டணிநீறுத்தூளனஞ்செய்த
னுமப்பவநோயறத்துணிக்குநன்மைத்திரிபுண்டீரந்தரித்து. (க0)

கற்றோர்விரும்புமாமணியேகாமற்காய்ந்தகண்ணுதலே
முற்றாவிளமென்முலைபாகாமூப்பிலாதமுழுமுதலே
நற்றாரணிபிரதமாகநடத்திக்குறவெண்ணகைதோற்றிப்
பற்றாரணம்பொடிபடுத்தபரனேயுன்னைத்தொழுதேனால். (கக)

கவளக்களிற்றினுரிபோர்த்தாய்கடவுளார்களுயிர்சாம்பித்
துவளப்படர்ந்தவிடமிடற்றுத்தாங்கவைத்தசுகரூபா
தவளப்பொடிபூசிடுமுதலேதண்ணம்பிறைவெண்ணிலவெறிக்கப்
பவளச்செழுஞ்செஞ்சடைமுடித்தபரனேயுன்னைத்தொழுதேனால். ()

நீடும்புவனமனைத்துமாய்நிரம்புமுயிருக்குயிருமாய்த்
தேடுமவர்க்குள்ளொளியுமாய்த்திகழ்வாய்தேவர்சிகாமணியே
கூடுஞ்சுரும்பருழுதுழக்கிக்கொழுந்தேன்மடுத்துக்குமட்டியிசை
பாடுங்கடுக்கைநறுந்தொடையற்பரனேயுன்னைத்தொழுதேனால். ()

விசும்புநிலனும்பாதலமும்விரும்பிமகிழ்வினைத்தெடுப்ப
வசும்புபடுபொற்கழலொலிப்பவங்குஞ்சிதத்தாளழகெறிப்பத்
தசும்புநிகரப்புடைத்தமுலைத்தாயார்திருக்கண்சாத்தியிடப்
பசும்பொனணியம்பலத்தாடும்பரனேயுன்னைத்தொழுதேனல். (௧௪)

என்றுதுதித்துஞ்சிந்தித்துமிருக்கவேண்டுமிவ்வாறே
யொன்றுமனுட்டிட்டுபுற்றவன்பினேனுங்கும்விராகத்தொடுமுடனே
சென்றுசந்நியாசத்திற்செப்பும்பேதங்களிலொன்றி
னின்றுவழுவாவகைநடத்தனீதியென்பார்நெறியுணர்ந்தோர். (௧௫)

ஐந்தாவது வானப்பிரத்தவிதியுரைத்த
வத்தியாயம் முற்றிற்று.

ஆ வத்தியாயம் ரு-க்குத் திருவிருத்தம்-௱௩௨.

உ

ஆறவது

## சந்நியாசவிதியுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

கரியமலவேர்கரியமாயையொடுகென்ம
மிரியவரனாருளையீட்டுமுனிவீர்காள்
பிரியமிகுவானப்பிரத்தவிதிசொற்று
மரியகதிபார்சந்நியாசவிதிசொல்வாம். (௧)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

குலவுறுசந்நியாசவாச்சிரமங்குடீசகம்பகூதகமஞ்ச
நலமிகுபரமவஞ்சமேயென்னநான்கதாங்குடீசகநிலையோ
னிலகுசந்நியாசஞ்செய்துகொண்டபின்றனில்லத்தினுவதுகடும்போ
ரலர்தருமில்லினுவதுமிதவையையமேற்றுண்டிடல்விதியால். (௨)

சிகையுபவீதஞ் செங்காருயாடை திரிதண்டங்கமண்டலந்தரித்த, நகைகெழுநீற்றுச்சூளணஞ்சுருவாங்கமுந்தகச்செய்திடல் விதியின், வகையொளிர் திரிபுண்டரந்தரித்திடுதல் வயங்குகாயத்திரிசெபித்தல், பகையரணெரித்தோனருட்குறிப்பூசை பத்தியிற்புரிந்திடன் மரபால். (௩)

மாற்றருமேன்மைப்பகூதகன் கடும்போர்மைந்தரா தியர்தமை யொருவிப், போற்றுமேழகத்திலனப்பலியேற்றுப் புசித்திடல்பொலிதிரிதண்டஞ், சாற்றிடுபுனிதகமண்டலமுழைத்தோல்சத்திரமுத்தரீயமே, யாற்றல்செயோகபட்டமே குளிர்தாங்காடையேதூயகோவணமே. (௪)

பன்னுபாதுகையே சிறுதுளைச்சூசி பட்டிழையியற்றியசெபமா
ண், டுன்னுகூர்ச்சிறுவாண்மண்டொடுகருவி தொகுமிவையுடையவ
னுதன், மின்னுவெண்பூதிதூளிதஞ் சருவாங்கமும்விளங்குறமிகச்
செய்த, லுன்னுநற்றிரிபுண்டரந் தரித்திடுதலுபவீதஞ்சிகையுடைத்
தாதல். (௬)

சுழல்பவத்திடுகாமாதிகணீத்ததூமனமுடையனுய்ப்பாவங்
கழல்படச்செயுஞ்சாவித்திரிசந்திகாலங்கடொறுஞ்செபித்திடுத
லழலவிர்குடங்கைமுக்கணெம்பெருமா னருட்குறியருச்சனையியற்ற
றழல்விழிப்பேழ்வாய்க்கூற்றுயிர்குடித்ததாமரைதியானித்தல்கடனு
[ல்

கொண்டசிரஞ்சன்கமண்டலங்கந்தை கோவணம் பலிக்கலன்
வேணுத், தண்டமுத்தரீயங்கொளநிருநீறுத் தூளனந்தகச்செயநகை
முப், புண்டரந்தரித்தல்சிரச்சிகைமழித்தல் பொம்மலெண்கவளமே
புசித்தல், மண்டலம்புகழ்சாவித்திரி சந்திவயங்குகாலந்தொறுஞ்செ
பித்தல். (௭)

திடமுறவான்மவிசாரஞ் செய்திடுதீர்த்தயாத்திரை புரிந்திடு
தல், படர்கிருச்சிரஞ் சாந்திராயணமுதலாப்பலவிரதமு மனுட்டி
த்த, லிடமுறுமோரூரினிலொர்நாளன்றி யேற்றநாளிராமைசஞ்சரி
த்தல், படவரவணிந்தோ னருட்குறிப்பூசை பத்தியிற்புரிந்திடன்
மரபால். (௮)

மேதகுபரமவஞ்சனெண்பூதிவிளங்கிடுத்தூளனஞ்செய்தல்
கோதகறிரிபுண்டரந்தரித்திடுதல்கோதனவான்மயிர்க்கயிறு [வி
பூதமிக்குறுகமண்டலமுழைத்தோல்பொருந்துவாண்மண்டொடுகரு
யேதமில்யோகபட்டமுத்தரீயமிவையதுளைச்சூசியொண்கந்தை. (௯)

கதிர்வெயின்மறைக்கத்தக்கசத்திரமேகழறராக்குமிழ்செய்பாது
கையே, வெதிர்புரிதண்டம்விழைசெபமாலைவெண்ணிறக்கோவணங்
கோடல், பிதிர்தராதேமப்புண்டரமென்றும்பிரணவமனுவினுற்செய்
தன், முதிரொளியுபவீதந்தபுத்திடுதன் மொய்சிகையொடுதலைமழி
த்தல். (௧௦)

நித்தியகரும நீத்திடல்புனித நிகழுமண் பாத்திரந்தாரு, வொத்
தபாத்திரமே கஞ்சபாத்திரமே யுவந்திடும் வேணுபாத்திரமே, யத்
தபாத்திரமே யிவைகளி லொன்றுலறல்கொடர் சமனஞ்செய்திடு
தல், பத்தியின்மருவு பரசிவதியானம் பண்ணுதல் கடனெனப்
பகர்வார். (௧௧)

பாடுநற்புகழ்சால்பகூதகனஞ்சன்பகருமண்பாத்திரமன்றி
நீடுமற்றொருபாத்திரங்கொளநகாதானீதிசால்பரமவஞ்சனுக்குக்
கூடுமான்மிதவைமையமேற்றுண்கை குய்கமழ்பலகறியோடு
நாடுமோதனமுங்கவர்வுறின்யோகநசித்திடுநிலைத்திடலின்றி. (௧௨)

குறைதரநுகரின் வருத்தமேமிகுந்து கொளுமுடற் சோர்ச்சி யாதலினு, னறைதருமியோகந் தனக்கனுகூல மாகுமாபுசித்திடல் வேண்டு, மறைமொழிக் குரவன்சேவை செய்திடுதன் மதித்திடு ஞானவப்பியாச, நிறைதரச்செய்தல் சவுசமேமோன நிகழ்தியானந் தவருமை. (கந)

பொய்மொழிகாமங் குரோதமாற்சரியம் புகர்படுமுலோபமே மோக, மைமலியகங்கா ரங்களைந்திடுதன் மண்ணுயிரிருவகை நடத்தல், செம்மையார் தருமன்னிவர் கடணுஞ் சிறந்தநாற் சந்நியாசிகளு, மெய்மையே சாதுர்மாசிய விரதம் விளைந்திடல் விதியெனும் வேதம். (கச)

முதறிவாண்மைக் குடீசகன்முதலா மூவரு முத்திகொள்பாக்குத், தீதகல்சாவித் திரிமனுநாளுஞ் செபித்திடல்வேண்டு மற்றொருவன், வேதமந்திரங்கட் காதியாமெழுத்தை விரும்புபு செபித்திடல்வேண்டுங், காதலிற்சந்தி காலங்கடோறுங் கவின்படு புனிதனேயாகி. (கரு)

அறுதரமறை மூலத்தினாற் பிராணாயாம நன்கியற்றிட னூற்றெட், டுறுதரமுரைத்த வெழுத்தையே யெண்ணலொருவரு மிலாவிடத்திருந்து,செறுபொறியடக்கியியல்வகைசமாதி செய்திடலிவ்வணமாகக், குறுமதிமுடித்த தம்பிரானருள்கைக் கொளுந்தொழிலே செயல்வேண்டும். (கசு)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

உத்தமவிருத்திநின் றுமுயர்ச்சியில்லாதநீச
வத்தகுவிருத்திசார்ந்தோ ரூருடபதிதனுவான்
சித்தமாசொருவிமேன்மைதிகழுஞ்சந்நியாசிதன்னை
யொத்தவேழ்பரித்தேர்மேவுமொளியினன்காணுந்தோறும். (கஎ)

பேசுநம்மண்டலத்தைப்பேதித்துக்கொண்டுமேலா
மேசினல்லுலகஞ்செல்வானேயிவனென்றுள்ளஞ்சும்
பாசமிலனையன்வைகப்படுங்கிரகத்தெந்நாளுந்
தேசவிர்செம்பொன்முன்னுஞ்செல்வங்கள்பெருகுமாலோ. (கஅ)

பொறியவித்தொழுக்கினின்றுபொலிபவனேயானாலு
நெறியவித்திடாதசெய்துநிற்பவனேயானாலுங்
குறிபடுபுகழ்ச்சந்நியாசிகொண்டவேடத்தினானே
யறிவுருவமலனென்றேயாவரும்வணங்கத்தக்கோன். (கக)

(மேற்படிவேறு.)

மருவுபிரமசரியனுக்குமன்றன்மலர் மேலவன்றெய்வந், திருவமிகுமில்லறத்தாற்குத்திகிரிக்குடங்கையான்றெய்வ, மொருவில்வானப்

பிரத்தனுக்கொள் ளொளியேழ்பரித்தேரோன்றெய்வம், பொருவிச்
சந்நியாசிக்குப்போற்றுமபேசனேதெய்வம். (உ0)

பகவன்மறையந்தமுந்தொடாரப்பரமனடியாருளத்தகலாத்
தகவன்றெய்வமாதலினாற்சந்நியாசவாச்சிரம
மிகவுஞ்சிறந்ததறத்ததால்விளங்கும்பரமவஞ்சனுடல்
சகயின்புறச்செய்கனனமவாற்றகனப்புரிதல்கூடாதால். (உக)

அனையன்றனக்குத்தரகிரியையீதிகளுமின்றவன்மனைவி, கிளை
யுமைந்தராதியர்க்கு நிகழுமாசுசமுமின்று, புனையுங்கனனமாயவ்
டம்போதிப்பதிட்டைசெயல்வேண்டும், வனையுமிலிங்கப்பதிட்டை
யினுன்வருப்பேறளிக்குமப்பதிட்டை. (உஉ)

கனனப்புரியுங்காலையவன்சரிசிலுடலந்தொட்டாலு, மனனெ
க்குருகக்கண்டாலுமறங்கள்பாவும்வலியழியுஞ், சினமின்மற்றையவ
ருக்குஞ் செய்யவேண்டுங்கனனமுட, வனகனூலின்படியின்னாரா
றல்வேண்டுந்தகனமே. (உங)

விருப்பினிவைசெயில்லறத்தான்மினிர்மாமேதபலனைடவன்,
சருப்புமுரன்மென்மலர்சிறந்தேறியிற்சுழியுமாகுச, மருப்புமுலையாள்
விழிகளிப்பவணிமாமன்றினடநவினும், பொருப்புவில்லி குஞ்சிதத்
தான்போற்றுப்பலமைந்திறந்திரே. (உச)

ஆறாவது சந்நியாசவிதியுரைத்த
வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம்-கூ-க்குத் திருவிருத்தம்-௱௫௯.

உ

ஏழாவது

## கழுவாயுரைத்தவத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

விடமெனக்கருகிவடவையிற்கொதித்துவினையுயிர்நடுங்கிடத்தோ
ற்றுஞ், சுடர்விழிக்கொடும்பற்கூற்றுயிர்குடித்ததுயமுண்டகமலருள
த்தி, இடர்கெடுத்துயர்சந்நியாசவாச்சிரம மியம்பினமினிக்கொடும்
பாவப், படர்தபுத்தெவர்க்குநலமருள்கழுவாய் பலவுளவவையுநன்கு
ரைப்பாம். (க)

மறையவற்செகுத்தோன் கடிமதுநுகர்ந்தோன்வயங்குசெம்பொ
ற்களவாண்டோ, ளிறையருட்குரவன்பன்னியைப்புணர்ந்தோனிக

நீலிக்கொடியவரையாரு, மறைவரான்மாபாதகரென விவரையடுத்தொருவருடனட்டவரு, முறைதவிர்மாபாதகர்களையென்ன மொழிவதற்கையமொன்றின்றே. (௨)

அறிதரான்மறையோற் செகுத்தவன்றன்னை யவமதித்தடவியுட்புகுந்து, செறிதருமெவர்க்குந்தன்னிழிபுரைத்துஞ் சேர்சருகாதிதுய்த்துஞ்சோ, றெறிதலையோட்டிற்பிச்சை யேற்றுண்டு மிவ்வணம்பன்னிருவருட, மறிமழுக்குடங்கை வள்ளருளுள்ளி வசித்திடினசித்திடும்பாவம். (௩)

தெரிந்துமாமறையோற் செகுத்தவன்பாவந் தீர்த்திடவெண்ணினனாயிற், பரிந்துதன்னகர்நின் றழல்புறங்கொடுபோய்ப் படர்சிகைகொண்டெழவளர்த்து, விரிந்தசெஞ்சடையிலிளம் பிறையணிந்தவிமலனை நினைந்துதனுடல, மெரிந்து நீறுகவீழ்ந்திடல்வேண்டு மீதுசெய்திடமுடியாதேல். (௪)

மிகுமுபவாசவிரதஞ்செய்தேனும் விழையறப்போர்புரிந்தேனு, நகுமணிகொழிக்குங்கங்கைமுன்னாய நதிகதப் புனல்வீழ்ந்தேனும், தகுமகாப்பிரத்தானம்புரிந்தேனுஞ் சாந்தமா மறையவர்திம்பா, லுகுகரைச்செருத்தலான்பொருட்டேனுமுயிர்விடினொழிந்திடும்பாவம்()

உள்ளவுமொண்ணுப்புரைசெறிகள்ளை யுண்டவனொழிவரும்பாவர், தள்ளவெண்ணினனேவெள்ளவிற்குளிக்குந் தகுதியோர்ந்துள்ளமாழாந்து, பின்னைவாண்மதியஞ்சூடியைநினைந்துபெருந்தளம்வழிதரப்பெய்த, கள்ளையேகொதிப்பவெதுப்பிவாய்மடுத்துக்கழிதலேவேண்டுமொல்லாதேல். (௬)

விண்ணியலமருருப்பினிலடங்கவிளங்கிடுகுடம்புரை செருத்தற், புண்ணியவான்கள் சலத்தினையேனும் புகன்மயவிரதத்தையேனுந், தண்ணியநெய்யேனும் புனலேனுந் தழலிடைக்கொதிநெழக்காய்ச்சிக், கண்ணியவாயினழலெழவிடுத்துக்கழித்துயிர்விடுப்பினுங்கழியும். (௭)

வயங்குபொற்களவு செய்தவனிரும்பின் வலியுடை முசலமொன்றியற்றி, நயங்கொளந்நகர்மன்னவன்கரத்தளித்து நடுங்குதன்னிழிதொழிலியம்பி, யுபங்குதலொழியவருள்கென விரந்தோரடியவனடித்திடத்தலையேற், றியங்குயிர்விடுப்பின்விடுத்திடும்பாவமிறைவனும்பழியடையானே. (௮)

கரைசெயிக்கழுவாயுஞற்றவொல்லாதேற் கள்ளுண னந்தணற்செகுத்தோற், குரைசெயும்விரதம்புரிகவொல்லாதே லுலைவையப்பரிமகம்புரியா, வரைசராடுறுநீரவபிருதத்திலாடுகவதுவு மொல்லாதேற்புரையறுசெம்பொன்றன்னிறையுணர்ந்தபூசுரற்குதவுதல்கடனால். ()

அருடருமாசான் பன்னியின்மணிசெ யணிமுலை மணந்தவன் பாவ, விருடபவெண்ணிவிகழ்ந்துதன்செயலையிரும்பினு லவளுருப்ப ண்ணி, வெருடருதழலிற்பொறியெழக்காய்ச்சி விரும்பியவன்பருக் கின்பப், பொருடருபிரானைநினைந்துமார்பழுந்தப் புல்லிவீந்திடுதலே வேண்டும். (க0)

தேசிகன்மனையாட் புணர்ந்தவனீதுசெய்ய வொல்லாதெனிற் குறியைக், கூசிலனுகிவாளினுலறுத்துக்குடங்கையினேந்தியஞ்சரும் பர், மூசியபடலைக் கடுக்கையானடிக்ண் முன்னுபுகூற்றுறையுளெ னப், பேசியதிசைபோய் மறிந்திடினுழியும் பின்னென்றூற்பெய ரரும்பாவம். (கக)

வெப்பியலிவரோடியைந் தவர்பாவம்விளித்திடுதண்டமு மவ ர்க்குச், செப்பியதண்டமே யினுமுகிழ்வெண் டிங்களுங் கங்கையு மணிந்த, துப்பியல்சடையான் றிருவடிநினைந்து சுடுசுடர்த்தழலினு வதுநற், றிப்பியப்புனலினுவை துவீழ்ந்துசெத்திடினுந்தொலைந்தேகும்.

குரவனைப்பிழைத்த கொடியவன்மறையோற் கொன்றவற்கியம் பியவிரத, முரவுறப் புரிதல்சாந்திராயணமே யுரைத்திடப்படுகிருச் சிரமே, விரவுறப்பற்பனடத்துதல்புரவி மேதமாமகம்புரிவேந்தர், பரவுபூண்டாடுமவபிருதத்திற்புக்குமூழ்குதல்கடனுமால். (கஉ)

மகன்மனைக்கிழத்தி தன்னுடன்பிறந்தாண் மருவுதன்மகளிவ ர்ப்புணர்ந்தோ, னிகன்மனத்தவரு ரெரியுணக் கொடுத்தவெந்தை தாளிருதயத்தெண்ணி, யகனிலத்தழல்வீழ்ந் திறந்திடல்வேண்டுமத் தையைமாமியைப்புணர்ந்தோன், மிகன்மதித்தென்றுஞ்சாந்திராய ணமேவிளைத்துயிர்விடுத்திடல்வேண்டும். (கச)

தன்னுடன்பிறந்தாண்மகள் சகோதரனைத்தழுவுறுங் கிழத்தி யைப்புணர்ந்தோன், பன்னிடுசாந்திராயணவிரதம்பன்னிரண்டுஞற் றிடவேண்டு, முன்னிடு தாயோடுதித்தவர்வயிற்றினுற்றவரணிமுலை தோய்ந்தோன், மின்னிடுதழலை வளர்த்ததில்வீழ்ந்து வீந்திடல்விதி யெனப்பகர்வார். (கரு)

இழிவுறுமாதர்ப்புணர்ந்தவன்பாவ, மியம்பிடத்தக்க சாந்தப னங், கெழியநற்பயன்செய்கிருச்சிரந்தத்த கிருச்சிரஞ்செய்திடின களு, மழிவுறுமுளத்திற் பூத்தபாதரைநீ ராடுமூன்புணர்ந்தவன்பாவ, மொழிதரமூன்றுநாளுணவொழிக்கினுழிதருமென்மனருணர்தோர்

வேற்கருநெடுங்கட்கன்னியர்பகத்துமிருகயோனியினுமிந்திரியம் பாற்படவிடுத்தோன்சாந்திராயணமேபண்ணிடிற்றுலைந்திடும்பாவ நாற்குலத்தினுமேதிலர்க்குரியார்தகலநுகர்ந்தவன்பெரும்பாவ மேற்குமாறழலைவளர்த்ததின்வீழ்வுற்றிறந்திடாதொழிதராதென்றும்

ஒழுக்கமுற்றிழுக்கி யழிந்தமங்கையரை யுறுதவம்புரிமடவாரை, யிழுக்குறு கழைக்கூத்தாடு மாதர்களை யியலுறு தேவதாசியரை, வழுக்குறுசிலதிமாதரைப் புணர்ந்தோன் வயங்குசாந்திராயணஞ்செயறா, சழுக்ககற்றுவரைப் புணர்ந்தவன் பத்துக்கிருச்சிரமாற்றுதல்வேண்டும். (௧௮)

சீர்த்தநற்பிரமசாரி மங்கையர்தஞ் செழுங்கடிதடம் படிதரிற்புன், கார்த்தபத்தோலைமெய்யின்மேற்போர்த்துக் கசிந்து மூக்காலமுமூழ்கிப், பார்த்தவர்க்கெல்லாந்தன்னிழிபுரைத்தேழ் பயிலகம்பிச்சையேற்றுண்டு, தேர்த்தடப்புவியாற்றியானித் தோர்வருடந்திரிதரவேண்டுமிவ்வாறே. (௧௯)

இயலுறுபிரமசாரி யென்றுரைப்போனிந்தியக்கலிதஞ் செய்வானே, லுயலுறமூழ்கி மாமறைமூலத் தோடுகா யத்திரிமனுவை, மயலறப்பதினாயிரந்தரஞ்செபிக்க மாண்டசந்நியாசியுமிந்தச், செயலுறின்மூழ்கிப்பிரணவம்பதினாயிரந்தரஞ் செபித்திடல்வேண்டும். ()

அந்தணர்முதலோரரசரைச்செகுப்பி னந்தணற் கடிந்தவர்க்குரைத்த, மைந்துறுகழுவா யியறறலக்கழுவாய்வயங்கு பார்ப்பனிக்கொலைக்கோரெண், சந்தநல்வணிகக்கொலைக்குமூன்றரசத்தையறன்கொலைப்பழிக்காறு, பந்தமார்பின்னோர்தம்மடமகளிர் பழிக்குநன்கோரியாண்டியற்றல். (௨௧)

ஒருபதினறுதினந்தலைமண்டையோட்டிலேழ் மனைப்பலியேற்றுண், டிருநகர்க்கண்ணேதிரிதரிற் சுணங்க னிருத்தபாவந்தொலைந்தேகும், பொருதிறற்கேழல்பாடலகுலம் பூனைகொன்றவன்கிருச்சிரமும், வருமெலிதவளைமாய்த்தவன்சாந்தி ராயணமுஞ் செயன்மரபால். (௨௨)

அரவுயிர்செகுத்தோனொருமதியுளவோரங்கை பாலருந்திநோற்றிடுக, பரவுறுமின்சொற்றத்தையையொறுத்தோன்பணவருக்கானுதவிடுக, விரவுபல்பறவை யொறுத்தவன்யிக்க விரதமாற்றுபுமறையோர்க்குக், கரவறுமனத்தின்விருப்பியொண்ணிதியுங் கறவையுமளிப்பதுகடனால். (௨௩)

பாவடிக்களிறுமுதல்விருகங்கள் பாற்றினோர்விரதமிக் காற்றித், தூவடிசிலை நெய்பாலொடுமறையோர்துய்த்திட வளித்திடல்வேண்டும், பூவடைபழங் காய்செறிதருக் குறைத்தோர்பொலிதருமிலதைகளறுத்தோர், மூவருமிருக்குவிளம்பிநெய்யருந்தி மூன்றுநாணோற்றிடல்வேண்டும். (௨௪)

அறிதரா தூன்சேராக்கையையொறுத்தோற் காசிரியன் வழிபாட்டாற், செறிதருந்தீர்த்த நானமூற்பலவாற் றீர்ந்திடும்பாவமற்ற

றிந்தேன், மறிதராசுரகிற்றுளைந்திடல்வேண்டும் வம்பலர்மனைமுதல்கவர்ந்தோர், குறிபெறவவர்க்கவ்வீந்துசாந்திராயணங்குணமுறச்செயல்வேண்டும். (௨௫)

கோசிகம்பைம்புலிந் தனம்புலால்பால் குளமதண்முதலியவவ்வி, னேசமோடிழந்தார்க்கவையளித்துணவுநீத்தானைந்தருந்திடல்வேண்டும், பூசைவெண்குரண்டமரிட்டம்வெங்கிரி புறுக்கிளியூர்க்குரீஇமுதற்பு, ளாசையினுகர்ந்தோருணவினை யொழிந்தீ ராறுநாளனுற்றிடல்வேண்டும். (௨௬)

முடைப்புலாலுணங்கல் கோழிவெண்முட்டை முனிவிலாதருந்தினோர்மாழ்கித், தடைப்படாதுயர்சாந்திராயணவிரதந் தகவொருமதிசெயல்வேண்டும், படைத்திடுமப்பூபம் பாளித முதலாப் பல்லவுங்கடவுளர்க்கூட்டா, தடைத்தவர்மோடுவீங்கிட விரும்பி யாற்றுககிருச்சிரவிரதம். (௨௭)

அழலினுக்கூட்டாதுண்பவரிழிந்தோ ரகத்தினிதுண்டவர்சிரார்த்தஞ், சுழறருசூதகாசவுசத்திற் றுய்த்தவர் கிருச்சிரஞ்செய்க, கழறரமலமோர்மூன்றையுமருந்துங் காலையுந்தயிலநன்காடித், தழல்வெதுப்புறுநீர் தோய்முனும்விடுத்தோர் சாந்திராயணஞ் செயவேண்டும். (௨௮)

கொடியசண்டாளர் தீத்தொழில்செய்வோர் குணமறுகலாம்விளைப்பவர்கள், படியிடைப்பூத்து நீர்குடையாதபாவையரிவர்களையன்றி, நெடிதுறப்பார்த்தோர்மூன்றுநாளன்னநீத்தானைந்தருந்திடல்வேண்டுங், கடிமதுமறந்து தீண்டினோர்முந்நாள் கழித்துணவானவி பருந்தல். (௨௯)

முனிவரர்தமைக்கற்புறுமடவாரை முறைபெறுநல்லொழுக்கினரை, நனிமதியாதெள்ளி னரழல்விறகாலுவிளைக்கருக்கிடல்வேண்டும், புனிதமாந்தேவாலயத்தினந்தனத்திற் புகர்படுமும்மலம்விடுத்தோர், கனிவினுண்குறி நீத்துடன்கிருச்சிராதி கிருச்சிரங்கவின்பெறச்செய்க. (௩௦)

வளம்பெறுசந்நியாசியென்றுரைப்போன் வரிமுலை மங்கையர்போக, முளம்பெறநினைப்பி னுற்றிடவேண்டு முயரவகீரணிவிரதம், விளம்புமந்நினைப்பு மறவியிற்றென்றில் விரைந்தினிதாற்றிடவேண்டுங், களம்படாத்தத்த கிருச்சிரவிரதங் கண்ணுதற்பிரானடிநினைந்தே. (௩௧)

விதியினைவிலக்கிநிடேதத்தைப்புரிந்துவேதநிந்தனைமுதற்பலவு
மதியுறச்செய்தோன்செய்தநாளளவுமாண்புறச்செய்திடவேண்டு
மதிகயாந்தத்தகிருச்சிரவிரதமம்பிகைபாகனையிகழ்ந்தோர்
பொதிதருபாவமவனருளன்றிப்போக்கிடப்படாதெவற்றானும். (௩௨)

சொற்றவிக்கழுவாய்பலவுளுமதிகந்துரிசறுஞானமாங்கழுவாய்
மற்றதுபெறுவான்பத்தியேசாந்திவகுத்திடுதாந்திமுற்குணங்க
ளுற்றவனுயாசாரியற்போற்றியுவப்புறுபணிவிடைசெய்து [ம்.
செற்றுநற்பொருள்கள்விளங்குவேதாந்தசிரவணஞ்செய்திடவேண்டு

திகழும்வேதாந்தசிரவணமதனாற்சேர்தருஞானமேதழலா
யிகழ்வுறுபாவமெனும்பெருங்காட்டையெரித்திடுமச்சிரவணமே
புகழுமும்மதிமூவிருமதியிராறுபொலிமதிபுரிந்திடின்முறையே
யகழுஞ்சுக்குமபாதகமுபபாவம்டருமாபாவம்விட்டகலும். (௧௪)

மறையினந்தத்தை யெவனனுட்டிப்பான்மற்றவன் றுயர்ச்சமு
சாரத், துறைபினின்றகன்று முத்தியையடைவான் சோர்வறவனுட்
டிக்கும்போது, குறையுறிற் சுவர்க்கபோகந்துய்த்துயர்ந்தகுலத்தி
லோர் தரம்புவித்தோன்றி, நிறைபெருங்குரவ னருளினுற்பாசநீக்
தரனடிநிழலடைவான். (௧௫)

ஏழாவது

கழுவாயுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ. அத்தியாயம்-௭-க்குத் திருவிருத்தம்-௱௬௰௧.

உ

எட்டாவது

## தானபலமுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

மின்னுநீரொளிர்சடைவிமலநாயகற்
பண்ணுமாதரவுடைப்பளகிலந்தணீர்
மன்னுபாவக்கழுவாயுரைத்தனந்
துன்னுதானப்பெரும்பலமுஞ்சொல்லுவாம். (௧)

மானவர்க்கறிவினை வயக்கியின்பமு
மானமார்முத்தியில்வைக்குநீர்மையாற்
ஞானமெவ்வகையுளுந்தக்கவித்தியா
தானமேசிறந்ததுசாற்றுங்காலையே. (௨)

ஆன்றவின்சுவையுடையன்னதானமே
சான்றபூதானங்கோதானமேசுடர்
கான்றபொற்றானமேகன்னிதானமே
தோன்றமற்றிவைகளுஞ்சொலின்விசேடமே. (௩)

சிவனடிப்பத்தியிற்சிறந்தவேதியர்க்
கிவர்தரும்விளைவிரும்பூமிதானஞ்செய்
தவனிமண்ணுலகிடையாரவாழ்ந்துபி
னுவமையில்சுவர்க்கம்வாழ்ந்துறுவன்முத்தியில். (௪)

புரையில்சிற்றளவுடைப்பூமியேனுமெய்
கரையுஞானியர்கொளக்கனிவினீத்துளோன்
விரைநறுங்குழலியர்விருப்பிற்சூழ்தரத்
தரையிடைவைகினுமுத்திசார்ந்தவன். (௫)

நன்மைகொணன்மதிநூனிறச்செழுந்
தண்மைகொள்வேதியர்தமக்குத்தீட்டலில்
வண்மைகொள்விஞ்சையைவழங்கினோன்கதி
யுண்மையன்பவத்தின்வந்துறுனெஞ்ஞான்றுமே. (௬)

தரைபுகழொழுக்குடைச்சந்நியாசிகட்
குரைபெறுமன்னனீருதவினோன்மடம்
வரையெனக்கட்டுபுமகிழ்வினல்கினோன்
விரையவான்பதங்கட்குமீதுசென்றவன். (௭)

சிரமாவாசியைத்தினநல்வேதியர்க்
காரநிட்காமியமாகவன்னநல்
கோருமாவுணர்வினனுயரறத்தனைச்
சாருவன்பரமன்சாரூபமென்பவே. (௮)

கண்ணபக்கஞ்சதுர்த்தசியிற்கற்றுணர்
புண்ணியவேதியர்தமைப்புராரியா
வெண்ணியின்சுவையனமினிதினூட்டுவோன்
றிண்ணியவினையறச்செல்லுவான்கதி. (௯)

நற்றிரையோதசிநயங்கொளந்தணர்க்
குற்றிடமடிசிலன்போடூட்டுவோன்
பற்றுறுசெல்வனாய்வாழ்ந்துபாரிடைப்
பிற்றடையிலாதுறும்பிரமலோகமே. (௧௦)

துவாதசிதினத்திலச்சுதனையுன்னுபு
தவாநலமறையவர்தங்கட்கின்மடை
யவாவுடனூட்டுவோனமரனாய்மணிக்
குவாலொளிவீசும்வைகுந்தம்வாழ்வனே. (௧௧)

இதனினுமதிகமேகாதசித்தின
நிதமுபவாசமாய்நோற்றுவேதியர்க்

திதமுறத்துவாதசியெண்ணிமாயனைக்
கதமறவூட்டுதல்கழியுந்தீங்கெலாம். (௧௨)

தசமியிலிந்திரன்றன்னையெண்ணுபு
நிசமறையவர்க்குநெய்பால்விராவிய
வசனமன்புடனருத்திடுமறத்திறன்
விசனமில்விண்ணகர்மேவிவாழ்வனால். (௧௩)

நவமியினடுநிலைநமனையுள்ளுபு
சிவமறையவர்க்கனஞ்சிறப்பவூட்டுவா
னெவனவனிடத்திலவ்வியமனொற்றைக்கு
மவமறுசவுமியகுணத்தனாவனால். (௧௪)

அட்டமிதினத்திலெம்மானையுள்ளுபு
சிட்டர்வேதியர்க்கனஞ்செழிக்கவூட்டுவோன்
பட்டவல்வினையெலாம்பாற்றிக்கூற்றுயிர்
கட்டவொண்மலரடிக்கலப்பின்பார்வனால். (௧௫)

சத்தமிவருதினஞ்சந்திரற்குறித்
துத்தமமறையவர்க்கூட்டுவான்பத
மித்தரைபுகழவாழ்ந்தீற்றின்பமா
ரத்தகுமதியுலகடைந்துவாழ்வனே. (௧௬)

சட்டியிற்கதிரவன்றனைக்குறித்தன
முட்டிகழன்பொருவாதுவேதியர்க்
கிட்டிடுபுகழினனிலங்குரூபனாய்
முட்டிலக்கதிரவனுலகமுற்றினோன். (௧௭)

பஞ்சமிவருதினம்பவளவாய்மலை
வஞ்சியைமதித்துமாமறையவர்க்கன
மஞ்சலித்தூட்டுவோனகிலபாவமு
மெஞ்சிடத்தத்துவஞானமெய்துவான். (௧௮)

செய்யதாமரைமலர்த்திருவையுள்ளியே
யையவான்சதுர்த்தியிலந்தணாளர்க்கு
நெய்யபாலடிசிலைநிறையவூட்டுவோன்
வையமார்செல்வத்தேவதிவனென்றுமே. (௧௯)

திரிதியைத்தினநிலத்தேவர்க்கின்சுவை
விரிதிருத்தகுமுணாவிரும்பியூட்டுவோன்
பரிதியிற்பொலிதரப்பகர்முத்தேவரு
மரிதிவற்கிலையெனவருளிக்காப்பரே. (௨௦)

(வஞ்சித்துறை.)

விதியையோவுநாண், மதிகொள்வேதியர்க்
கெதிரிலோதனந், துதியினூட்டுவோன். (௨௧)

செய்யநாவகத், தையவேதங்க
டெய்யமாநடஞ், செய்யுமென்பவே. (௨௨)

பிரதமைத்தினம், விரதவேதியர்க்
கிரதவின்பதஞ், சரதமூட்டுவோன். (௨௩)

சமரசம்பெறு, விமலஞானியாய்க்
கமமகிழ்ச்சியி, னமருமுத்தியில். (௨௪)

தாவில்வெண்பசுப், பூவிற்றேவர்க்கு
மேவநல்கினேன், சீவன்முத்தனே. (௨௫)

இலகுகன்னிகை, குலவநல்கினே
னிலவிடுஞ்சிவ, வுலகநண்ணுவான். (௨௬)

(வஞ்சிவிருத்தம்.)

எந்தத்தேவரைக்குறித், தெந்தத்தானநல்குவா
னந்தத்தேவர்தம்மரு, ளந்தப்பாடிலாதுறும். (௨௭)

அண்டருக்குளெவரருள், கொண்டுநிற்கவெண்ணினே
னண்டர்மற்றவரெனக், கொண்டுபோற்றன்ஞானியை. (௨௮)

கிருமியாதியுயிர்களி, னிருநிலத்தினிரைமுதல்
விருகம்யாவுமதிகமாம், பெருகுமற்றவற்றினும். (௨௯)

அதிகர்மாந்தரவரினு, மதிகரையரவரினு
மதிகராவரறிவினி, லதிகராயவந்தணர். (௩0)

அவரினும்விசேடராற், கவர்மதியிலாதவ
ரிவரினும்விசேடராற், றவர்கொணூனடையினர். (௩௧)

இனையருக்குமதிகரா, னினைதருங்குடீசக
ரினையருக்குமதிகராற், புனைதரும்பகூதகர். (௩௨)

பன்னிவர்க்குமதிகரா, லன்னநற்பெயரினு
ரின்னருக்குமதிகரா, லென்னிலக்கணியையவர். (௩௩)

பாடுசாலிவரினு, நிடுபுத்திசாதனங்
கூடுமோர்வமாறுரு, நாடுமோன்மஞானியர். (௩௪)

அதிகராவராதலாற், கதியையுள்ளங்கண்ணினோர்
மதிகலத்தவர்களை, விதியிற்போற்றல்வேண்டுமால். (௩௫)

பிரமதேசுசாருமா, றரநிலாவவுள்ளினோ
னரனடிக்கணன்புசால், பரவுவேதியரையும். (௩௬)

நோயிலாதிருப்பதற், காய்கதிர்ப்பிரானையும்
பாய்வலிபடைத்திடற், கேப்மருத்திறையையும். (௩௭)

பரவுகீர்த்திபெற்றிட, வுரவுசேர்தழலையும்
விரவுநன்மதியுறப், புரவுநாமகளையும். (௩௮)

பரமஞானம்வேண்டிடில், வரமனோன்மணியையுங்
கருமசித்திவேண்டிடி, லொருவிநாயகனையும். (௩௯)

தங்குபோகமார்தர, வங்கலாநிதியையு
மங்கருங்கமையுறச், சங்கரப்பிரானையும். (௪௦)

நினைவைராகநிலைபெறப், புனையுஞானியரையுங்
கனைபெயற்குவாசவன், றனையும்போற்றல்வேண்டுமால். (௪௧)

பிரியமார்சிவக்குறிக், குரியபூசையாற்றுவோற்
கரியயாவையடர்வினை, யிரியயாவுமெய்துமே. (௪௨)

தூயசோதிட்டோமமுன், ஞயயாகம்யாவையும்
பாயநூற்படிசெய்வோ, னேயதேவனுவனே. (௪௩)

(வஞ்சித்துறை.)

சதவுருத்திரஞ்சமகநாளுமற்
புதம்விளைத்திடும்புருடசூக்கமே
சிதமுறுத்திடுஞ்சிவசங்கற்பமே
சுதமகற்றுபுசுடரைக்கக்கரம். (௪௪)

(கலிவிருத்தம்.)

இவைகளிலொன்றனையிடாறநாளு
நவையகலாரியனன்மொழிவழியே
செவையுறநன்குசெபிப்பவன்பாவக்
குவைகளனைத்தையுங்கொன்றவனுகி. (௪௫)

மூவெழுசுற்றமுமொய்த்துடனண்ணத்
தேவர்களஞ்சலிசெய்துவணங்க
யாவருமேத்துமெழிற்சிவலோக
மேவிமகிழ்ச்சியின்வேட்டவைதுய்த்து. (சசு)

(வஞ்சிவிருத்தம்.)

பற்பலகாலம்வதிந்து, சொற்பெறுபுண்ணியந்தீர்ந்த
பிற்புவிவந்தோர்பிறப்புற், றற்புதஞானமடைந்து. (சஎ)

மாமறைகாணரும்வள்ள, றூமலர்த்தாட்டுணைகீழ
லேமமுறுங்கல்பெய்தி, நாமறவைகுவனுளும். (சஅ)

(கலிவிருத்தம்.)

சுகமலாவிடையத்தைச்சுகமென்று
மிகவதைப்பெறவேண்டுங்கருமஞ்செய்
தகவிலாவவஃதேயடைசீவர்கட்
குகவுறுதுமற்றொன்றுரையாடினே. (சகூ)

கனியிருக்கவுங்காய்கவர்வாரென
வினியவானந்தமென்றுமிருக்கவு
னியும்போகவிரும்புமுலகநற்
புனிதமென்றிறும்பூதிதுவாகுமால். (ரு0)

எட்டாவது

தானபலமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் அ-க்குத் திருவிருத்தம் உசக.

உ

ஒன்பதாவது

## பாவகருமபலமுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அரவுமதியுநதியுமணியவிர்கோடீரப்பிரானுவக்கும்
புரவுமிகுவெள்ளியநீறும்பொலிவுமிகுமலைந்தெழுத்தும்
விரவுவலியசிதைப்புணையாமேவிப்பவவாரிதிகடந்தீர்
பரவுதானபலமுரைத்தாம்பாவகருமபலமுரைப்பாம். (க)

மறையோர்ச்செகுத்தகொடும்பாவிமாணாக்கரமேயொட்டகமே
கறையாருடலத்தெறுழியேகானக்களிறேகடும்பரியே
பொறையார்திரிகோட்டிரலையேபொலிவுருப்பல்பறவைகளே
யறைதீங்குறுசண்டாளனேயாகப்பவமுற்றுழிதருவான். (௨)

தீமைபயக்குஞ்சுராபானஞ்செய்தபாவிமலம்புசித்துத்
தூய்மையடையாவுடல்வீக்கித்துக்கத்துழலுமுயிர்களா
நாமதடையும்பறவைகளாநலமில்கிருமிகீடமாத்
தோமதுறுபல்பவமெடுத்துச்சுழன்றுதிரிவான்பற்பலநாள். (௩)

படியிலருள்செய்யாசிரியன்பன்னிகவனம்பண்ணினவன்
கொடியகுணத்திராக்கதனாய்க்குணமிலாப்பைசாசமாய்க்
கடிதலுறுக்குங்கள்வனாய்க்கயமைத்தீயதொழிலனாப்
மடிவில்வனத்துச்சூகரமாய்மற்றைவிருகமாயுழலும். (௪)

கரிசின்மறையோர்பொருள்பூமிகவர்ந்தோன்பிரமராக்கதனா
மரியதெனத்தானியக்கரவிலமைந்தோன்கருமூடிகமாவன்
விரியுநறியபுனல்கவர்ந்தோன்வெறுக்கத்தக்கமண்டூகந்
தெரியவொலிவெண்கலக்கரவுசெய்தோனஞ்சப்பிறப்பாளன். (௫)

(மேற்படிவேறு.)

சாலநெய்க்கரவுசெய்தோன்சாரசகுலமாவன்
பாலதுகரவிற்கொண்டோன்பறையியையரிட்டமாவ
னேலவூன்மறைப்பிற்கொண்டோனொருவையினுருவங்கொள்வன்
வாலமருப்புக்கொண்டோன்வருவனேமிப்புள்ளாகி. (௬)

பருத்திகள்ளினன்குரண்டம்பட்டுநூல்கள்ளிநின்ற
வருத்தியன்சிச்சிலிப்புள்ளாவன்சாகாதிகொண்டோன்
பொருத்துகட்சிறைமயூரம்பூக்கவர்ந்தவனாயாவன்
மருத்தசைபழங்கள்கொண்டோன்மற்கடவுருவங்கொள்வன். (௭)

எறுவாகனங்கவர்ந்தோனிரவணப்பிறப்பனாவ
னூறுபாற்பசுக்கவர்ந்தோனுறுவன்மேழகப்பிறப்பிற்
கூறுநீசப்புலாலுட்கொண்டகத்திரியனாய்கன்
மாறுகோளகன்றபின்னேனுமற்றிவருருவாவாரே. (௮)

அண்ணல்பரனையாசாரியன்றனையவமதித்தோ
ரெண்ணருங்காலம்பவ்வீயிடைத்துளைகிருமியாவர்
தண்ணமாரிவரையெண்ணாதிழிவுரைசாற்றினோர்க
டிண்ணமண்ணவர்வெறுக்கத்தீமுயலகநோய்கொள்வார். (௯)

சினந்தருள்குரவன்றன்னைச்சினந்தவன்சிரநோயாளன்
கனந்தருகற்புளாளைக்கழித்தவனரலைக்கண்ட

னணிந்தவர்க்குறமுன்னூட்டானகலத்துவெந்நோயுள்ளோ
னினந்தமைமறைத்துண்பான்றீயெழுபிணிதெறுவயிற்றன். (௧௦)

ஆலயப்பொருள்கவர்ந்தோனடுவிடவியாளமாவன்
சாலநல்லவர்க்குவாய்ந்ததனங்கொடான்வலையனாவன்
கோலமார்பொழிறழிந்தோன்குலவுறப்பழுகுநோயன்
சீலமில்கலாம்விளைத்தசேட்டைவாயழுகிச்சாம்பும். (௧௧)

வம்பலர்மனையார்ச்சேர்ந்தமடமையோனேயாவ
னம்புறுவிருந்துபோற்றான்கபோலத்தினடுங்குநோயன்
வெம்புநோயலைப்பச்சார்ந்தாற்போற்றிடான்விழியினோய
னம்புனற்பந்தர்சீத்தானறற்கோவைமோடுற்றானே. (௧௨)

ஆன்றனைவதைத்தான்றோற்றமாம்பொழுதேகண்ணில்லா
னான்றனைவருத்தஞ்செய்தோனக்கிராணக்கோனுள்ளான்
மான்றவெங்கதம்வளர்த்தோன்புலையனன்மனையைநீத்து
மான்றடங்கட்பரத்தைவழிச்சென்றோன்மிடிக்கோட்பட்டோன். ()

எளியரைவதைத்தபாவியிருகரங்காலுமில்லா
னளிபுறமடியார்க்காய்ந்தோனழுகுடற்றொழுநோயாளன்
களியனாய்க்கொண்டநோன்புகழித்தவனுறையுணீத்தா
னுளிதரான்மாலையுற்றார்க்குரிமையையிழந்துசோர்வான். (௧௪)

பெரியரைக்கண்டெழாதபேதையொண்பொருளிழப்ப
னரியதாய்தந்தைக்கன்பிலாதவன்வறியனாவ
னுரியநல்லொழுக்கநீத்தோனுலப்பில்வேதனையிற்சாம்பும்
விரிதரச்சொல்லப்புக்கால்வேதற்குமுடியாதம்ம. (௧௫)

தீயபாதகர்தம்வாழ்நாடீர்ந்திடுமமயநோக்கி
மேயவன்காலதூதர்வெய்யபாசத்தின்வீக்கிக்
காயெரிகவைத்தாலன்னகழுமுளாலுடலஞ்சூன்று
பாயதீயியவைத்தண்டம்பற்பலவாற்றிமாதோ. (௧௬)

தென்றிசையாளுங்கோமான்றிருமுனர்விடுப்பவந்த
வன்றிறலியமனோக்கிவாய்மடித்தெயிறுதின்று
கன்றியவுளத்தனாகிக்கனல்விழிகொப்புளிப்பத்
தின்றுதின்றுமிழத்தக்கசினந்தலைக்கொண்டுசீறி. (௧௭)

பாவிகாளோடியோடிப்படைத்தபொற்றிரளையெங்கே
வாவியபரிகளெங்கேமதம்படுகரிகளெங்கே
மேவியசிவிகையெங்கேவிளைநிலமடிமையெங்கே
யோவியமடவார்செவ்வாயூறலுண்டிடுமின்பெங்கே. (௧௮)

இளநலமைந்தரெங்கேயெங்ஙனமிகந்துவந்தீ
ருளமுறவியமன் றண்டமுண்டெனவுரைக்குஞ்சான்றோர்
பளகில்சொல்லிகழ்ந்துநின்றீர்பகைத்தவர்புரங்கள்செற்ற
வளநகைப்பெருமான்றனைவாழ்த்துதல்சிறிதுமில்லீர். (௧௯)

தரையிடைப்பிறந்துநீவிர்சாதித்தகருமம்யாது
நிரையமென்றுள்ளவெல்லாநெடிதுநாண்மூழ்கத்தக்க
புரைபடுதீயபாவப்பொதிபலநேடிக்கொண்டீர்
கரையுநல்லறஞ்சற்றில்லாக்கலதிகாளென்செய்தீரே. (௨௦)

எனக்கொதித்தழன்றுபொங்கியிடியுமச்சுறவுரப்பித்
தினத்துறச்செய்தீங்கெல்லாஞ்சித்திரகுத்தன்கூற
மனத்திடையோர்ந்துதண்டவல்வினையாளர்ப்பாராச்
சினத்திவர்க்குற்றதண்டஞ்செயுமெனவவருஞ்செய்வார். (௨௧)

(மேற்படிவேறு.)

கறையினிருத்தியயத்தினுலக்கைகையிற்கொடுறச்செந்நீ
ருறைதடெறித்தெழவென்புநுணுங்கவுரத்தினிடித்திடுவார்
மிறைநிறையத்தலைகைகள்கிழக்குறமேலடிகோணவிருப்
புறைதரமாட்டியடுந்தழன்மூட்டியுயங்கவறுத்திடுவார். (௨௨)

முள்ளுறுதண்டமுயர்த்தியுரப்பிமுடிக்கணடித்திடுவா
ரெள்ளுபுகுழியினைநாய்பலகவ்வியிழுக்கவிடுத்திடுவார்
வள்ளுகிர்வேங்கைகள்பாய்ந்துடல்கீறிவருத்தநிறுத்திடுவா
ரள்ளுகுழம்புமலக்கிருமிக்குளமூழ்ந்தவழுத்திடுவார். (௨௩)

உருக்கியசெப்புறுநீர்நனிவாய்வழியூற்றியுடற்றிடுவார்
முருக்கிநெடுஞ்சிவிறிப்புனல்வங்கமுகத்தில்விடுத்திடுவார்
தருக்கியழற்கணுறுத்தசினையக்கொடுதாரைகள்சூன்றிடுவா
ரெருக்கியிழுத்துநெருக்கிவயிற்றுறையீருளரிந்திடுவார். (௨௪)

கூறுபடுத்திமெய்சாடிநெய்யிட்டழல்கொளுத்துவர்சிற்சிலரைப்
பாறுமுதற்பலபுட்டசைகொத்திடப்பண்ணுவர்சிற்சிலரை
நாறுமுடைத்தசைவாள்கொடுகொய்துநசிப்பர்கள்சிற்சிலரை
வேறுபடத்துணிசெய்துடல்கும்பிவிழுத்துவர்சிற்சிலரை. (௨௫)

தீயின்வெதுப்புசலாகைசெவிக்கட்செலுத்தவுளைந்திடுவார்
வாயினழற்றுமிரும்புசலாவமயங்கிவிழுந்திடுவார்
சீயினைமாந்துகெனக்கவுண்மொத்துதல்செய்யவழிந்திடுவா
ராயினமுட்டிகைகொண்டுசிரத்திலடிப்பவரற்றிடுவார். (௨௬)

(கலிநிலைத்துறை.)

ஏதிலார்மனைதழுவியவிழுதையர்தம்மைக்
காதிமாவதிகோரமாநரகிடைக்கவிழ்ப்பார்

மேரீதிவெங்கொலையாளரைக்கால்கரமுடக்கிச்
சோதிகொண்டெழுமழற்குழிவீழ்த்துவர்துணைந்து. (௨௭)

உயிர்வருத்தினோர்தமையயத்தண்டினாலொறுத்துச்
செயிர்கொள்கும்பிகற்பாந்தத்தினளவுஞ்சேர்த்திடுவார்
தயிலங்கள்ளினோர்தமைக்கரங்காறவப்பிணித்துப்
பயிலும்வெந்தயிலப்பெருஞ்சாடிபாய்த்திடுவார். (௨௮)

கள்ளருந்தினோர்நாவினைவாள்கொடுகடிந்து
விள்ளருந்தழற்பொறியெழுநீரைவாய்விடுவார்
தெள்ளுமாரியன்மனையினைப்புணர்ந்ததீயோனை
யெள்ளுதீமலநிரம்பியபெருங்குழியிடுவார். (௨௯)

அன்னையத்தனைக்குரவனையரும்பெருமறைநூ
றன்னைமாயனைப்பிரமனைச்சந்திரன்றன்னைப்
பொன்னையாரழலைப்பழித்துரைத்தவர்புரையா
வின்னலார்நிரையம்பனாடுளைந்திடவிடுவார். (௩௦)

நிலவுசேர்சடைத்தம்பிரான்றன்னைநிந்தித்த
புலவுநாறுவாய்ப்பாதகப்புலையர்பூமேலோன்
குலவுகற்பம்பன்னூறுகோடிகள்கொடுங்கும்பி
கலவுமாறிட்டுவைப்பராற்கவலைமிக்குறுத்தி. (௩௧)

நாடுசந்நியாசிகட்கனங்கொடாததீநடையோர்
கூடுவன்கருப்பாலையிற்கொடுத்திடக்குழைவார்
நீடுபொன்னினைக்கள்ளினோர்நிகழுறுப்படங்க
வாடிருப்புவெம்முளையறைந்தொறுத்திடவழுவார். (௩௨)

கொண்டகேள்வனைப்பிழைத்துமற்றொருவனைக்குறித்த
பெண்டிரானுருவிருப்பினையழலிடைப்பிறக்கி
மண்டநேர்தழுவுறவொறுப்பார்மனைபிழைத்த
கண்டருந்தழலிருப்புமாதணைத்திடக்கடிவார். (௩௩)

மறைவிளம்புநற்கருமங்கள்வயக்கிடாராகி
முறைதிறம்பியகருமங்கண்முடித்தபுன்மனக
ரறையும்வெங்கொடுந்தீவரமாநிரையத்தின்
மிறைநிரம்பிடப்பற்பலகாலம்வீழ்ந்துழல்வார். (௩௪)

வாவிகூவமொண்சிவாலயம்பெரியவர்மடங்கண்
மேவிமும்மலம்விடன்முதற்பலவிளைத்தோரை
யோவில்வன்கருப்பாலையினுடலிறவாட்டித்
தீவினைந்தகும்பியிற்கதிர்நாள்வரைசேர்ப்பார். (௩௫)

படியின்மேலவர்தம்மைநிந்தனையுரைபகருங்
கடியர்வாயினுமன்னதுகேட்டுறக்களித்த
கொடியர்காதினுங்காயழலிரும்பினூற்குடைந்து
முடியவெந்நிரையத்திடைவீழ்த்துவர்முறையால். (ங௬)

இன்னவாறுபாதகம்புரிந்தோரெலாமெரியே
மன்னுகோரமேவிகோரமேவருத்ததிகோரந்
துன்னுதீமகாகோரமேகராளமேதுயர
மென்னுங்காளராத்திரம்பயானகமிரவுரவம். (ஙஎ)

கோரரூபமேபயோற்கடம்பதுமகோணந்தீ
யாருஞ்சண்டமேசண்டசோலாகலமடுதெல்
சோர்விலாவிகராளமேசுதீர்க்கவர்த்துலமே
சார்தரும்மகாசண்டம்பீடணம்பிரசண்டை. (ஙஅ)

கொடியதாகியபதுமம்வச்சிரதிரிகோணங்
கடியவின்னவைமுதற்பலநரகத்துங்கவிழ்ந்து
துடிதுடிப்பர்பாவப்பயனெலாந்தொகுத்தேனு
நொடியயாவரேவல்லவர்நுவலருந்தவத்தீர். (ஙகூ)

முகுந்தனுதியர்க்கரியவன்றிருவடிமுயங்கத்
தகுந்தமாவியையறஞ்செயார்வெய்யபாதகத்தி
வகுந்துபோயமனூதர்கைப்பட்டுமாநரகம்
புகுந்துமாழ்குவர்பற்பனூளென்னிறும்பூதே. (சo)

கங்கையேமுதனதிபலபொலியவுங்கலைமா
னங்கையேந்தியதம்பிரான்கருணையினவிரு
மங்கையோடுபெஃறலங்ளொறும்வைகவுமதியாச்
சங்கைகொண்டமர்மூடருக்கிதுதகுந்தகுமால். (சக)

பெரிதுமாரியனருள்வழிநின்றுமெய்பிறங்கத்
துரிதநீக்குநன்ஞானமேயடைதரத்துணியா
ரரிதுமானிடப்பிறவியென்பதுவுமாராயா
ரெரிதுவன்றுமாநரகெலாந்துளைவதென்னறிவே. (சஉ)

நிரையம்யாவும்புக்குழன்றுநாணெடிதுசென்றதன்பின்
விரைசெய்கொன்றைமாலிகைச்சடைவிமலனாருளாற்
றரையிடைப்பலவுருவெடுத்தனேகநாடள்ளிக்
கரையுமானிடயோனியின்முறைப்படிகதிப்பார். (சங)

ஒன்பதாவது

பாவகருமபலமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் கூ-க்குத் திருவிருத்தம் உஅச.

உ

பத்தாவது

# தேகோற்பத்தியுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மல்லார்பொருப்புச்சிலைகோட்டிமாயப்பகழியுடன்கூட்டிப்
புல்லார்புரத்தொள்ளெரியூட்டிப்புத்தேளிர்களைவாழ்வித்த
நல்லார்திருத்தாளுறமுளத்தீர்நந்துபாவப்பயனுரைத்தாம்
பல்லார்புகழ்தேகோற்பத்திப்பண்பும்விளங்கவெடுத்துரைப்பாம் ()

அறத்தினொளிரும்பெருந்தானத்தமரசன்மமுறும்புவியின்
மறத்தின்மராதியதோற்றமருவுமிரண்டும்வாய்ந்தசமத்
திறத்தினுறுமானீடசன்மஞ்சேருமுயிர்கண்மகத்தவியா
னிறத்தின்மிகுமென்றாழுவந்துநிரம்பமழையைவிருத்திசெயும். (உ)

மழையின்விருத்தியாம்பைங்கூழ்மருவுபலனுமம்மழையும்
பழையகருமப்படியன்னபானமாகுமனிதருக்கு
விழையுமன்னபானமிருவேறாந்துராலேசாரமெனத்
தழையுமலநீராதிதுராலசாரந்தனிற்றேலாதியாம். (௩)

அடருப்பூதசம்பந்தமானசாரமிருவகையாம்
படருந்தூலபாகமெனப்பகர்சூக்குமநற்பாகமெனச்
சுடருந்தூலபாகத்திற்சொலும்வின்னைற்பஃறாதுகளுந்
தொடருங்காலாற்சுக்கிலமூர்தோன்றுமழலினுனிரம்பும். (௪)

பொருத்துநீரானெய்த்தோரும்பூமியதனுன்மாங்கிசமும்
விருத்தியாமற்றொருபாகமிளிர்சாத்துவிதமிராசதமென்
றருத்தமுறவீர்வகையாகுமவையுட்சாத்துவிதபாசத்
திருத்தமிகுந்தவைம்பூதச்செய்யபாகங்களின்மாதோ. (௫)

நிலங்கிராணமபானத்தைநெடுநீருபத்தமிரதத்தை
யிலங்குமழல்வாக்கொடுவிழியையெறியுங்காற்றுக்கொடுகரத்தை
நலங்கொள்வெளிபாதஞ்சுரோத்திரத்தைநாளும்விருத்திசெயுந்
துலங்கைம்பூதபாகத்துட்சொல்லுமனத்தினையும். (௬)

அலர்பிராணவாயுவையும்புவிருஞ்சேர்திவாக்கினையு
மலரும்வாதம்பிராணவனிமூலந்தனையும்வான்டாக
முலவுபாதமூலத்தையும்வீசேடவிருத்திசெயு
மிலகுமற்றைமிராசதபாகத்திலுறுமிரதபாகம். (௭)

காலவசத்தினுவிரத்தங்கருதுமதின்மாங்கிசமதனிற்
கோலமேதையதின்மூளை குலவுமதினெலும்பதினரம்பு
சாலவதிற்சுக்கிலமாகுஞ்சாற்றுமதுசுரோணிதஞ்சேர்ந்
தேலக்காலபரிபாகத்தெழுஞ்சந்தானவிருத்தியே. (அ)

மெய்யில்வாதமுதனோய்கள்விரோதமடையாக்காலத்து
மையில்வெண்ணீர்வாயுவினுன்மாதர்செந்நீரொடுகூடிச்
செய்யவுயிர்சேர்கருவாகுஞ்சேருமற்றைத்தினங்கலலந்
தெய்யவேழிற்புற்புதமாஞ்செறியோர்பக்கம்பிண்டமாம். (கூ)

மதியமொன்றிற்கடினமாமதியமிரண்டிற்சிரமுண்டா
மதியமூன்றிற்பாதங்கண் மதியநான்கில்விரலுதர
மதிசெய்கடியுமுண்டாமைமதியின்முதுகோடுருபக்க
மதியாறினிற்கண்செவிநாசிமதியேழ்சீவசையோகம். (கΟ)

எட்டாமதியிலங்கங்களெல்லாநிரம்பியுந்திவழி
மட்டார்குழற்றாயுணவிரதமருவநுகர்ந்துவளர்போது
முட்டாமுன்னைப்பவநிகழ்ச்சிமுளைப்பக்கொடியநிரையத்துப்
பட்டாழ்பவரினனிவருந்திப்பாங்குபெறவின்னனநினையும். (கக)

அளவில்யோனிகளிற்பிறந்தாமளவில்கருமபலனுகர்ந்தா
மளவில்பேருருற்றிருந்தாமளவிறுன்பமனுபவித்தா
மளவில்பவநீங்குறுமுயற்சியாதும்புரிந்தாமலம்பிறந்த
வளவிலளவின்மறைமுடிக்குமப்பாலானையளவிலியை. (கஉ)

தாய்தந்தையுமில்லாதவனைத்தாய்தந்தையுமாகியபரனை
நோய்தந்தடுவெங்கூற்றுயிரைநொடியிற்குடித்தகழலானைச்
சேய்தந்தவனைமும்மதிலுஞ்செற்றமூரற்பெருமானை
யாய்தந்திடுமன்பாளுமலர்தூயடித்தொண்டினியற்றி. (கங)

குரவனருளின்மறையுண்மைகொளுத்தக்கொண்டுநித்தியமும்
பரவுநைமித்தியமும்விதிப்படியேபுரிந்துமோகாதி
யுரவுகெடநல்வயிராகமுற்றுநிட்காமியம்புரிந்து
விரவுமுண்மைஞானத்தின்மேலாமுத்தியடைந்திடுவாம். (கச)

என்றுநினைத்துக்கொண்டிருக்குமெறுழாலையின்மென்கரும்பேபோ
லொன்றும்யோனியிடைநெருக்குண்டுயங்கிவெளியின்வருமோகந்
துன்றுவளியந்தாங்கடிப்பச்சுழன்றுமுன்னைநினைப்பெல்லாஞ்
சென்றுகழியமறந்துவிடுந்தீராதாயஞ்ஞானமுறும். (கரு)

அஞ்ஞானத்தாலிராகாதியடர்ந்துதருமாதருமங்களர்ந்
தெஞ்ஞான்றுந்துன்புறுபிறப்புமிறப்புமென்மேலூறநிற்குஞ்

செஞ்ஞாயிறுதண்மதியழற்கட்டெய்வப்பெருமான்றிருவருள்சேர்
மெய்ஞ்ஞானம்பெற்றிடினன்றிவீடுமோகொடியவஞ்ஞானம். (கசு)

பாசஞானம்பசுஞானம்பாறியொழியப்பதிஞான
நேசமுடையோனல்லாக்காணிகழும்பவமாயிரங்கோடி
பேசவெடுத்தானேயெனினும்பெயர்ந்துமாயுமோசெம்பின்
வாசமானகாளிதம்போலனாதிதொடுத்துவருபாசம். (கஎ)

(கொச்சகக்கலிப்பா.)

நித்தனாய்நின்மலனாய்நிட்களனாய்நிராமயனாய்ச்
சுத்தனாய்ப்பரஞானசுயஞ்சோதியாயுயிர்கட்
கத்தனாயன்னையாயானந்தனாயகில
கத்தனாய்மறைமுடிவுங்காணரியபேரொளியாய். (கஅ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மேயபரிபூரணனாகிவிளங்காநிற்குங்கண்ணுதலை
யாயன்போடுமெவனுணரானவனேயான்மதுரோகியந்தத்
தீயமட்டனெப்பாதகந்தான்செய்யமாட்டானுலகத்திற்
பாயமறையோதியும்பாசம்பாற்றான்பிரமதுரோகியே. (கக)

அகிலசந்தேகமுநிவிர்த்தியானேன்பரமன்றனையுணர்ந்தோ
னகிலகருமங்களுஞ்சயமேயாகுமன்றொருவனுக்கே
யகிலமறையுள்வாக்கெவைக்குமதீதனமப்பிரானருளா
லகிலவிதியும்விலக்குமற்றின்படைந்துளானுமவனேயாம். (உ0)

(மேற்படிவேறு.)

கான்றிடுசோறெனமாயாசம்பந்தபாவனையைக்கழல்நீத்துத், தோன்
றிடுதத்துவமசிநல்வாக்கியார்த்தப்படிதூய்மையிற்பாவித்தல், சான்றி
டுமாமறையவர்க்குமுக்கியமா மெடுத்தசன்மபலனுமீதா, மூன்றிடு
மெய்ப்பத்தியேயெவைக்குங்காரணமாமென்றுனிரப்பார்நல்லோர். ()

பத்தாவது

தேகோற்பத்தியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் க0-க்குத் திருவிருத்தம் கஎ௫.

உ

## பதினொன்றாவது

# நாடிசக்கரநிலையுரைத்தவத்தியாயம்.

(கலிநிலைத்துறை.)

அரவுநாண்மதியவிர்சடையந்தண்ணருளில்
விரவுமெய்ப்பெருந்தவத்தினீர்விரிகடலுலகிற்
பரவுகின்றதேகோற்பத்திமுறையினைப்பகர்ந்தா
முரவுளாருணர்நாடிசக்கரநிலையுரைப்பாம். (க)

அலகின்மானிடர்யார்க்குமெய்நீளத்தினளவை
யிலகுதத்தமங்குலத்திலைவியையதொண்ணூற்ருறு
குலவுமங்குலமினையமெய்யிற்குதத்தினுக்கு
நிலவுமங்குலமிரண்டின்மேற்குய்யத்தினிலைக்கு (உ)

சேருமங்குலமிரண்டின்கீழ்ச்செழும்பொனினிறமாய்ச்
சாருமொண்டழற்ருனமேயாகியமூலா
தாரமென்பதுவிளங்குமற்றவ்வெல்லைதனையே
யாருநன்கெடுத்தியம்புவருடனடுவெனவே. (ந)

அனையமூலத்திற்கொன்பதங்குலத்தின்மேலகல
நினையுமங்குலநான்கதாய்நிகழுமாண்டலைப்புட்
சினைநிகர்ப்பதாய்நரம்புமுற்குழ்திறத்ததுவாய்ப்
புனைதருங்கந்தத்தானமென்றுளதொன்றுபொற்ப. (ச)

இதினடுத்திசையிருப்பதுநாபிமற்றின்னுந்
துதிசெயுஞ்சுழிமுனையெனுநாடியுஞ்சுடரு
மதிசெய்மற்றதனூற்புறத்தினுமருவியவா
லதிகநாடிகளெழுபத்திராயிரமம்மா. (ரு)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

மலிதருநாடிபலவுளுஞ்சிறந்துமன்னுநாடிகள்பதினான்கு
பொலிசுழிமுனைபிங்கலையிடைசரச்சுவதிபுரைபூடையேவருணை
மெலிவறுமத்திசிகுவையேயசசுவினிவிழையலம்புசைகுகுவே
வலிகெழுவிசுவோதரைபயச்சுவினிசங்கினிவயங்குகாந்தாரை. (சு)

என்பனபெயர்களிவற்றுளுங்கழியவேற்றமார்நாடிகண்மூன்ரு
லன்புறுமவைகள்சுழிமுனையிடைபிங்கலையிவற்றுளுமதிவிசேடாங்

கொள்படுநலஞ்சேர்சுழிமுனைநாடிகோதறுமந்தநாடியையே
தென்பொலிபிரமநாடியென்றுரைப்பர்சிறந்தவந்நாடிதான்மன்றே.

வென்னடுவீணாதண்டமேபோலமேவியவென்பொடுகூட
மன்னியசிரத்தினடுவெழிவந்துபுருவமத்தியம்வரைநிற்கு
முன்னிடுநாபியுற்றகந்தத்திற்கோரிரண்டங்குலத்தின்கீழ்
மின்னிடுசிறப்பிற்குண்டலிசத்திமேவுமாலஃதரவுருவாய். (அ)

வயங்குறுபணத்தாற்சுழிமுனைத்துவாரமறைத்துமற்றந்நாடியி
னை,யியங்குறுகண்டபாகத்தாற்சுற்றீரெட்டுறச்சுற்றியொள்ளுடலை
நயங்கொளப்பிரமநாடியின்வழியேநன்குமேற்கொண்டுபோய்வாலா
ன்,மயங்கொடுபொலியும்பிரமரந்திரத்தைமறைத்துக்கொண்டிருக்கு
மாலென்றும். (கூ)

பகர்சுழிமுனைத்துவாரந்தான்மறைக்கப்பட்டிருத்தலினுளர்காலு
நுகருமன்னுதிசாரமுமதற்குணுழைதரப்பெறுவெனநவல்வ
ரிகலுறுபிரமநாடியின்வாமமிடைவலம்பிங்கலைபின்முன்
றகவுறுசரச்சுவதிகுதுவிரண்டுநாடியுந்தடையறநிலையும். (க0)

இடையெனுநாடிப்பின்முன்காந்தாரையியம்பிடுமத்திசிகுவையும்
புடைகொள்பிங்கலைக்குப்பின்முனற்பூடைபொலியசசுவினியுநிலையு
மிடைதருகுகுவேயத்திசிகுவையேவிளம்புமிவ்விரண்டிற்குநடுவ [ர்.
ணைடதரும்விசுவோதரையெனுநாடியென்மறைறிவினிலமைந்தோ

இயல்யசசுவினிகுகுவிற்குநடுவணியவுறநிலையுமால்வருணை
பயப்படுபூடைசரச்சுவதியினள்பகர்யசசுவினிநின்றிடுமால்
வயக்குகாந்தாரைவளச்சரச்சுவதிமத்தியிற்சங்கினிநிலையுங்
கயக்கமிலாதவலம்புசைநாடிகந்தமத்தியத்திடைநிலையும். (க௨)

சுழிமுனைமுன்பா னிலைக்குகுநாடிசொலுங்குய்யத்தானத்தி
னளவு,மிழிவறுவருணைகிழக்குமேலுடலமெங்கும்பிங்கலையிடைநாடி,
மொழிவலமிடமாக்கிராணத்தினளவுமொழியசசுவினிநன்னாடி, பழி
யிலாவலத்தாளங்குட்டவளவும்பாய்வியாபித்துநின்றிடுமால். (கங)

சார்தருபூடைபிங்கலைப்பின்பாற்றக்கணநேத்திரமளவு
மார்தருபயச்சுவினிவலச்செவியினளவுநன்குறுசரச்சுவதி
யோர்தருபிரமநாடிபின்பானுவளவுமொள்ளத்திசிகுவைதா
னேர்தருமிடத்தாளங்குட்டவளவும்வியாபித்துநிற்குமென்றுரைப்ப.

சங்கினியிடதுசெவியினதளவுந்தக்ககாந்தாரைதானிடப்பாற்,
றங்கியநயனத்தளவுநல்விசுவோதரைமுகநள்ளலம்புசைதான், மங்
கருமபானதானத்தினளவும்வயங்குறீஇவியாபித்துநிற்கும், பொங்கி
யபிராணனபானனேவியானன்பொருந்துறுமுதானனேசமானன்.

நாகனேகூர்மன்கிரிகரன்றேவதத்தனற்றனஞ்சயனேயென்
றாகவோர்பத்துவாயுவுநாடியனைத்தினுஞ்சஞ்சரித்திடுமா
றேகமிவற்றுட்சிறந்தனமுன்னர்ச்சொற்றவைவளிகளேபிராண
னேகமார்மூகமூக்குந்திமத்தியினுமிருதயத்தினுங்குடியிருக்கும். ()

சாற்றிடுமபானன்குதங்குய்யமூருச்சானுமோடண்டமேகடியே
போற்றிடுநாபிசங்கையிவ்விடங்கள்புகல்வியானன்செவிவிழிக
ளேற்றிடுகோடாக்கிராணமொண்களமிவ்விடங்கள் சந்திகள்காங்கால்க
டோற்றிடுமுதானன் சமானன்மெய்யெல்லாந் தொகவியாபித்திடு
மாதோ. (கள)

உற்றதொக்கென்புமுதலியவிடங்களுறையுமாருகன்மூனைந்து
முற்றநாகன்றுன்வேர் வெளிப்படுத்தன்முதலியதொழில்களைச்செய
யுஞ், சொற்றகூர்மன்கண்ணிமைத்தன்முற்றொழிலைத்தும்மலைக்கிரிக
ரன்செய்யு, மற்றவத்தேவதத்தனித்திரையைத்தனஞ்சயன்சோபை
யைவயக்கும். (கஅ)

உன்னிடுபிராணவளிநிசுவாசமுசுவாசங்காசமுண்டாக்குந்
தன்னிலையபானவளிமலசலவிசர்சனஞ்செய்திடுஞ்சமானன்
மன்னியயாவுமவ்வத்தானங்கண்மருவுறநிறுத்திடுமுதானன்
பன்னிடுமூர்த்தகவனமும்வியானன்விவாதமும்பண்ணுமாறனும். ()

சுழிமுனைக்கவிழ்பூங்கடுக்கையஞ்சடிலச் சுயம்பிரகாசனுலிடை
க்கு, வழிமதுத்துளபக்கொண்டல்பிங்கலைக்கு மணமலர்த்தவிசுறை
புத்தேள், பழியறுசரச்சுவதிக்குநல்விராட்டு பகர்தருபூடைக்குத்திக்
கு, மொழிதருவருணையத்திசிகுவைக்கு முறைவளிவருணனேதெய்
வம். (உ0)

ஆரியல்யசசுவினிக்கலர்கதிரோனலம்புசைநாடிக்கவ்வருணன்,
பாரியைகுகுவுக்கோங்குகாந்தாரைக்கெழில்படுபைங்கதிர்மதிய, மே
ரியல்சங்கினிக்குமம்மதியே யியைபயச்சுவினிக்கும்பிரமன், சீரியல்
விசுவோதரைக்கொளிரழலை தெய்வமென்றுரைப்பர் கற்றுணர்ந்
தோர். (உக)

இடையினெப்போதுமதியும் பிங்கலையிலிலங்குமென்றாரூஞ்
சஞ்சரிக்கு, நடைகொள்பிங்கலையினின்றுமொள்ளிடையினவிறரும்
பிராணவாயுவுதான், மிடைவதையுத்தராயணமென்றும்விளம்பிடை
நின்றும்பிங்கலையிற், கடையிலவ்வளிசங்கிரமமாவதைத்தக்கணயன
மென்றுநன்குரைப்பர். (உஉ)

தழைதருமிடைபிங் கலையெனுமிரண்டின்சந்தியைப்பிராணன்
சேர்காலம், விழைதருமமாவாசியையெனவுரைப்பர் மேவுமப்பிரா
ணன்மூலத்தைக், குழைவறச்சேரிற் பிரதமவிடுவகாலமென்றுங்கு

வாஞ்சென்னி, யுழையுறச்சேரி லிரண்டதாம்விடுவகால்மென்றுஞ்
சொல்வாருணர்ந்தோர். (உ௩)

நன்னிசுவாசத்தோடுசுவாச நாடியொன்றிருந்துமற்றொன்றிற்,
றுன்னிடல்சங்கிரமணகாலமெனச்சொலப்படும் பிராணன்மற்றிடை
நின், றுன்னுபிங்கலைநின்றோங்குகுண்டலியினுற்றிடுங்காலத்தைமு
றையே, மன்னியவுலகமேத்துபுண்ணியத்தமதிகதிர்க்கிரகணமென்
பர். (உ௪)

சென்னிசீசயிலம்பாலங்கேதாரந்திகழ்தரும்புருவமத்தியமே
மன்னியகாசிவண்குயத்தானஞ்வளர்குருக்கேத்திரமியயர்
துன்னியபுண்ணியப்பிரயாகைசொல்லுமவ்விதயத்தினடுவெண்
மின்னிடுதெய்வச்சிதம்பரமூலாதாரத்தாரூரென்பர்மெய்க்கண். உ௫

அறிவினிற்பெரியோரகத்தினும்புறத்துமாகியதீர்த்தங்கண்மூழ்கிச்
செறிதருந்தெய்வத்தலங்களும்போற்றிச்சிவானந்தமுத்தியையடை
ரறிவினவ்வளவுசிறந்திடார்புறத்தேயாகியதீர்த்தங்கண்மூழ்கிச் [வா
செறிதருந்தெய்வத்தலங்களும்போற்றிச்சிவனுவர்போகமேநாளும்.

திருத்தகுமான்மதீர்த்தத்தின்மூழ்கித் தெய்வதத்தலங்களுமாங்
குக், கருத்துறக்கண்டுவணங்கிடும்யோகர்கருமங்கள்வேண்டிடாரெ
ன்று, முருத்துவல்லிருளை யுண்டெழுகதிரோனொத்தமாமணிகள்விற்
றுண்போன், பெருத்தவம்மிக்கன்முதலியதாங்கிப்பேணிவிற்றுண்ப
னேவுணர்வீர். (உ௭)

கழிசுராபாண்டந்தன்னைநன்னீரிற்கணக்கில்பஃறரங்கழுவிடினும்
பழியகன்றுறுமோசுத்தியையதுபோற்பைம்புனலாற்சுத்தியடையா
மொழிதருமுடலமான்மதீர்த்தத்தான்முழுச்சுத்தியெய்திடுமுடனே
யழிவறுசித்தசுத்தியுஞானயோகசித்தியுமடைந்திடுமால். (உ௮)

சரியையர்கிரியையுடையவர்புனிற்றுத்தண்ணிலாக்கொழுந்தணிசடி
பெரியநாயகனையுருவினிற்கண்டுபேணுவர்யோகுழந்திடுவோர் [லப்
விரிதருமிதயகமலத்திற்காண்பர்மெய்ப்பொருளுணர்ந்தஞானியர்க
டெரிதரவெங்குங்காண்பராலென்றுசெப்பிடுந்திப்பியமறையே. உ௯

பரம்பரனடியிரண்டறக்கலந்தபண்பினராயஞானியர்கள்
வரம்பெறுபாததீர்த்தமாடுனருமருவுவர்சத்திசித்திகளைப் [று
புரம்பொடிபடுத்தபுண்ணியப்பெருமான்பொலிமலர்த்திருவடிப்பே
நிரம்பிடத்தக்கதன்னிலைகொண்டுநிற்றல்பேரறிவிஞோர்துணிவால்.

பதினொன்றாவது

நாடிசக்கரநிலையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ. அத்தியாயம் கக-க்குத் திருவிருத்தம் ௩௩௫.

உ

பன்னிரண்டாவது

# நாடிசுத்தியையுரைத்தவத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

பாடியற்றும்பரமன்பெரும்புகழ்
பாடியற்றமகன்றநற்பண்பினீர்
நாடிசக்கரநன்முறைகூறினா
நாடிசுத்தியுநன்றுரையாவோம். (க)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

காமசங்கற்பமின்றிக்கரைவிதியுத்தமான
வேமநற்கருமமாற்றியியமமுன்னுடையோனாகித்
தூமனசாந்தம்வாய்ப்பச்சொல்லுமெய்நிரதனாகிச்
சேமவைப்பனையவாசான்சேவைசெய்திறத்தனானோன். (உ)

கருமுகிறவழாநிற்குங்கனவரையிடத்தினேனும்
பெருநதிக்குலையினேனும்பிரசம்வார்நறும்பூவில்வத்
தருமுதலிடத்தினேனுஞ்சலம்பலமூலம்வாய்த்த
வொருவனத்தேனுந்தக்கவுறையுளொன்றியற்றிக்கொண்டு. (ங)

விரிநீர்முக்காலமூழ்கிவிரசையந்தழலிலேனும்
வரியோமத்தழலிலேனும்வந்தபுண்ணியநன்னீற்றை
யுரியமந்திரத்தாலுத்தூளனஞ்செய்தோரைந்திடத்தும்
புரிமேன்மையோனேகொண்முப்புண்டரந்தரித்துக்கொண்டு. (ச)

சேறணிபழனத்தில்லைத்திருநடமாடுந்தேவை
நீறணிபவளக்குன்றைநிருமலக்கொழுந்துதன்னை
யாறணிசடைமெய்ஞ்ஞானவருட்பெருங்கடலையம்மை
கூறணியிறையையன்பிற்கொளும்விதிப்படிவணங்கி. (ரு)

ஒருமருப்புடையதேவையொளிரும்வேற்கரத்தினானை
மருமலர்ப்புண்டரீகம்வயங்குபாரதியைஞானக்
குருபரன்றனையென்றாழைக்குமுதநண்பனைமருத்தை
வெருவழற்கிறையைப்போற்றிவிரும்பியோராதனத்தில். (சு)

பூருவமுகங்கொண்டேனும்புகல்வடமுகங்கொண்டேனுஞ்
சாருறவிருந்துகண்டந்தலைதளர்வறநிமிர்த்தே
யோரும்வாய்மவுனமாகவுளத்துச்சஞ்சலமொன்றின்றித்
தேருநாசியினுனிக்கட்செறிதரப்பார்வைவைத்து. (எ)

தகவநனிடத்திருக்குஞ்சந்திரவிம்பந்தன்னி
னகவமிர்தத்தைப்பில்குநயங்கொளும்வகாரமென்னு
முகலருமமிர்தபீசமுள்ளுறததியானம்பண்ணி
யிகலறுமிடையாற்காலேயேற்பவுள்ளேயிழுத்து. (அ)

உதரத்தினிரம்பப்பூரித்துடலமத்தியினிருக்குங்
கதவழல்சொலிக்கின்றற்போற்கருதுபுநாதவிந்து
சுதமகல்வன்னிபீசந்தோயவுட்டியானஞ்செய்து
மதமுறக்காலேப்பின்பிங்கலேவழிமந்தமந்த. (கூ)

வெளிவிடவேண்டும்பின்புவிடாதுபிங்கலேயாற்பூரித்
தொளிசெயக்கினிபீசத்தைத்தியானித்தொள்ளிடையின்மார்க்கம்
வளிவெளிக்கொளுமாமந்தமந்தவேவிடுக்கவேண்டுந்
தெளியவிங்ஙனமோர்காலக்கறுதரந்திறம்பாவண்ணம். (க0)

தினமுமுக்காலந்தோறுஞ்செய்திடக்கடவனிவ்வா
றினமுறமூவாண்டேனுமேற்புறநாலாண்டேனு
மனமுறவியற்றுவானேன்மருவிடுநாடிசுத்தி
யனகமார்ந்துடலமுந்தன்வசப்படுமெறிவின்மிக்கீர். (கக)

தேங்குறுசடாரத்தீதான்றீபித்துக்கொண்டிருக்கு
மோங்குநாதமும்விளங்குமுற்றவிவ்விலக்கணங்கள்
பாங்குறுசித்தியாதல்பளகறவுணர்ந்துபின்னர்
நீங்குறவதனைவிட்டுகிரம்புறவான்மசுத்தி. (கஉ)

செய்திடவேண்டுமென்றேசெறியுமும்மலமுநீங்கப்
பொய்தவிர்குரவனல்கும்புகரறுஞானம்பெற்று
மைதயங்குறுகண்டத்துவள்ளலாருண்மைதேர்ந்து
கைதவப்பவஞ்சவாழ்க்கைகழறலேயான்மசுத்தி. (கங)

தக்கநற்கருமஞ்செய்துசாத்தியனுயினோர்க்கு
மிக்கநன்ஞானமுண்டாமேவுமஃதின்றேலின்றும்
பொக்கமில்கருமந்தானும்புண்ணியப்பெருமான்பாதச்
செக்கமலத்துப்பத்திசேர்தரச்சேருமாலோ. (கச)

உலகினிற்சிலர்நன்ஞானமுற்றவர்போலப்பேசி
யிலகுசற்கருமம்யாவுமிழந்துழிதருவரந்தக்
கலதியரென்றுமுத்திகாண்பவரல்லர்மெய்யே
குலவுபோகமுமிழந்துகொட்புறுவார்களன்றே. (கரு)

பன்னிரண்டாவது

நாடிசுத்தியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் கஉ-க்குத் திருவிருத்தம் ௩௫ய

உ

பதின்மூன்றவது

# இயமமுறையுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

கயல்செய்விழிமாங்குயில்செய்மொழிக்கார்செயளகக்கவுமாரி
பயல்செய்மேனிப்பெருந்தகைபொற்பாதமறவாப்பத்திமையீ
ருயல்செய்நாடிசுத்திமுறையுண்மையுரைத்தாமட்டாங்க
வியல்செயோகங்களுண்முதலாமியமமுறைமையியம்புவாம். (௧)

இயமநியமமாசனமேயிலங்குபிராணாயாமமே
வயமார்பிரத்தியாகாரம்வருதாரணையேதியானமே
பயமார்சமாதியெனவெட்டிட்பகர்முன்னின்றவியமந்தா
னயமார்பத்துவகையாகுமவில்வாமவற்றையுங்கேண்மின். (௨)

முந்தமொழியுங்கொல்லாமைமுனிவின்றுவக்குஞ்சத்தியமே
சந்தவத்தேயம்பிரமசரியந்தயையேயார்ச்சவமே
நந்தலமையுங்கமைதிருதிநாடுமிதாகாரஞ்சவுச
மிந்தவகையுண்முதனின்றவின்பமாருங்கொல்லாமை. (௩)

மறையின்வகுத்தயாகாதிவயங்குமின்பக்கொலைதவிர
வறையுமற்றையுயிர்க்கொலைகளகத்துநினையாதிருத்தலாம்
பொறைகொளுடலைக்கரணத்தைப்பொறியாதிகளைநாடினென்று
மிறையிலாதுநினைத்திடுதல்வெய்யவான்மகொலையாகும். (௪)

ஆதலாலவ்வெண்ணமொரீஇயான்மவுண்மையறிவதுவுங்
காதல்பயக்குங்கொல்லாமையென்றுகரைவார்கற்றுணர்ந்தோர்
கேதமற்றசெவிகண்ணாற்கேட்கக்காணப்பட்டதனைத்
தீதகலவவ்வாறேசெப்பிவிடுதல்சத்தியமே. (௫)

கடல்சூழுலகினிடைத்தோன்றிக்கருதுந்தொழில்கள்பலசெய்து
முடல்சூழ்வினைத்துன்பின்படைந்துமொழிந்துபோவார்தெய்வமலர்
மடல்சூழ்கடுக்கைத்தொடைபுனைந்தவள்ளற்பிரானேயென்றொன்று
மடல்சூழுண்மைத்தெய்வமெனநம்புவதுவுமஃதாமால். (௬)

ஏதிலார்தம்பொருள்களிலேதேனுங்கவரவெண்ணுமை
தீதிலாதவத்தேயந்தேகாதிகளைநானென்றே
சாதியாதபெருந்தெளிவுமதுவாமென்றுசாற்றுவார்
கோதிலாதநூலுணர்ந்துகுழகனடிக்கன்புடையோரே. (௭)

விதித்தகாலந்தன்மனைவியென்றேருள்புணர்ந்துபரமாதர்
கதித்தகொங்கைகனவிடத்துங்காணுதொழியுமதுதன்னைத்
துதித்தபிரமசரியமெனச்சொல்வார்முக்கட்சுடரடியின்
மதித்தன்மனத்தைச்செலுத்துவதுமதுவாமென்னுமறைநூல்கள். (அ)

உயிர்கள்பலவுந்தன்னுயிரையொப்பக்காண்டறயையாகுஞ்
செயிரில்சேய்மித்திரகளத்திராதியிடத்துந்தெவ்விடத்து
மயிர்ப்பிறன்ஞன்மாவிடத்துமமையச்சமபாவனைவைத்தல்
வயிரமறுமார்ச்சவமென்றேவகுப்பாருணர்ந்தவல்லோரே. (கூ)

பற்றூர்முதலோராற்றனக்கோரிடர்சம்பவிக்கப்பட்டாலுங்
கற்றூர்புகழமதித்துயரங்கழித்துநிற்றலேகமையா
முற்றுமதியமுடித்தபிரான்மொழிநம்புவதேபாசபந்த
மற்றூர்முத்தியுறற்கேதுவாமென்றெண்ணலேதிருதி. (க0)

மானேர்விழியாளொருபாகவள்ளலுறைமூர்த்தமதாய
யானோர்சீவனவனின்வேறலனென்றெண்ணுவதுவுமது
வானோர்மருந்தைநிகர்த்தாலுமடைமூன்னுணவுசமமாகத்
தானோர்ந்துண்ணுவதனைமிதாகாரமென்றுசாற்றுவரால். (கக)

அதிக நானபோசனமூறுகும்யோகந்தனக்கதனுன்
மதிசெயடிசில்ரைக்கூறும்வயங்குபுனலோர்காற்கூறும்
பதியக்கொண்டுகாற்கூறுபாங்கின்வாளாவிடல்வேண்டும்
விதியிற்பிறழாதுளர்மருத்துவிருப்பினுலாவித்திரிவதற்கே. (கஉ)

உரைத்தசவுசமிருவகையாலுடம்பின்மண்ணுதிகளிட்டு
வரைத்தவிதியின்படிநீரின்மண்ணுவதுபாகியசவுசம்
புரைத்தவுணர்வின்வேதாந்தப்பொருளைமனத்தினுறநிளைத்துத்
தரைத்தவாப்பாசங்கழியத்தாணிற்பதுமானதசவீசம். (கங)

இந்தச்சவுசமிரண்டுமுளோனேற்றமாகுஞ்சுத்தியுளான்
பந்தப்புறச்சவுசமொன்றேபண்ணுவோனுள்ளழுக்கொழியான்
சந்தத்திருமெய்ஞ்ஞானவறற்சவுசஞ்செய்யுஞ்சிவயோகிக்
கந்தப்புறச்சவுசந்தினமுமாற்றூனேனுந்தோடமின்றே. (கச

இச்சாதனங்கள்கொண்டுசுயவிச்சாருபப்பெருமானை
நச்சாடரவப்பூணுனைநச்சாருளத்தைநச்சானைக்
கச்சாரிளமென்முலைபயலங்கச்சார்புறவைத்தானையின்ப
மெச்சாதரவிற்கொடுப்பானைமெச்சாவுணர்ந்துகொளல்வேண்டும். ()

பதின்மூன்றுவது

இயமமுறையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் கங-க்குத் திருவிருத்தம் நூசாறு.

உ

## பதினொன்காவது

# நியமமுறையுரைத்தவத்தியாயம்.

### (கலிவிருத்தம்.)

நியமமாகநிருமலன்வாழுமுண்
ணியமமாருநெடுந்தவவந்தனீர்
நியமமாமியமத்தைநிகழ்த்தினு
நியமமாநிலையுங்கரைவாமரோ. (க)

### (அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஆன்றதவஞ்சந்தோடமேயாத்திக்கியமேதானமே
மான்றலறுமீச்சுரபூசைவண்சித்தாந்தசிரவணமே
தோன்றுமிலச்சைமதிசெபமேதுயவிரதமிப்பத்துஞ்
சான்றநியமவகையென்றுசாற்ருநிற்பர்தக்கோரே. (உ)

தொழுதார்க்கருளுமொருமுக்கட்சோதிமலர்த்தாளுளத்துள்ளி
யெழுதாமறையின்விதிப்படிநன்கேற்றசாந்திராயணமே
பழுதாகாதகிருச்சிரமேபகருமற்றைவிரதங்கள்
வழுதாகாமலனுட்டித்துவருத்தினுடம்பையதுதவமாம். (ங)

எத்தன்மையானபந்தமெனக்கெந்தவாறுவந்ததஃதெக்
கத்தனடியிற்பத்திசெயிற்கழியும்பிறவியறச்சீவன்
முத்தனுவதென்றியான்முத்தியுண்மையெதுவென்று
சுத்தமனத்தனுயுணருந்தொழிலுந்தவமேயென்றுரைப்பர். (ச)

உற்றகடல்சூழ்மண்ணுலகினெழியாதெழுமவாவொழித்துப்
பெற்றபொருளைக்கொண்டுவக்கும்பெற்றிபெரியசந்தோடங்
சொற்றவமரர்பெரும்போகங்குறியாதவிர்செஞ்சடைப்பரன்முன்
மூற்றநினைந்துள்ளிருப்பதுவுமதுவேயென்னுமுதுவேதம். (ரு)

பாங்கார்மறையாகமமிருதிபசருங்கருமங்களினுரு
மோங்காநிற்கும்விசுவாசமுடைமையேயாத்திக்கியமா
நீங்காதறத்தினிலைநின்றுநேடும்பொருளைநிருத்தனடி
தாங்காநிற்குமுளத்தோருக்கன்பிற்கொடுத்தருனமாம். (சு)

வேதநெறியைக்கைவிட்டார்வெய்யகூற்றினுயிர்குடித்த
பாதமுளத்துப்பதித்திடார்பகர்மெய்யன்பர்போற்றிரிவார்சாதல்

உரைசுவத்திகங்கோமுகம்பதுமமேயோங்குவீரஞ்சிங்கம்
புரையில்பத்திரமுத்தமேமயூரமேபுகழ்ச்சுகமொன்பானுந்
தரையிடத்தினல்லோர்பலருங்கொளத்தக்கவாசனபேதம்
வரைசெய்துத்தமமறைபுகல்விதிலையுமாண்புறச்சொலுங்காலை. (௨)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

தக்கணவிணைக்கால்களானிவைகுவெண்சார்ந்தவிடப்புறப்பதமும், பொக்கமிலிடசானுருகணடுவண் பொருந்துதலுறவலப்பதமு, மொக்குமாசேர்த்துச்சமமுறுதேகமுடையவனாயிருத்தலையே, செக்கரஞ்சடையானுரைமுழுதுணர்ந்தோர்செப்புவர்சுவத்திகமெனவே.

காணுறுவாமபாகத்துக்கடியிற் கரைவலத்தாட்கரட்டினையும், பேணுறுவலப்பாற்பிருட்டபாரிசத்திற் பிறங்கிடத்தாட்கரட்டினையும், பூணுறச்சேர்த்துக்கொண்டிருத்தலையே பொருந்துகோமுகாசனமென்பர், மாணுறுநூல்களனைத்தையுங்கேட்டுச்சிந்தித்துத்தெளிந்த மாதவத்தோர். (௪)

சவ்வியபாகவூருமேல்வலப்பாற்றாளையும்வாமபாகத்துச்
செவ்வியதாளைவலப்புறக்கவான்மேற்சேர்த்திரண்டங்குட்டங்களையு
மொவ்வுறவிரண்டுகைகளான்மாறியுறப்பிடித்திருந்திடுமதனைப்
பௌவநீருலகில்யாவரும்பதுமாசனமெனப்பகருவர்மாதோ. (௫)

இத்தகுபதுமஞ்சகலரோகபயமெலாற்றையுநீக்கும்வன்மையதா[மேல்
லொத்திடுமிடப்பாற் பாதநற்கரட்டையொளிர்தரு தக்கணக்கவான்
வைத்துடனுவளலின்றியேசமத்தின்மருவுறவிருப்பதையன்றோ
தத்துநீர்ப்புவியிற்றிறன்மிகுவீராசனமெனப்பகருவரம்மா. (௬)

பொருந்துறுவாமபாதத்தின்கரட்டைப் பீசவலவண்டத்தின் கீழ்ச், திருந்துதக்கணத்தாட் கரட்டினைவாமஞ்செறிதருமண்டத்தின்கீழு, மிருந்திறலொடுசேர்த்திருகையுமுழந்தாளிரண்டின்மேல்விரணிமிர்தரவைத், தொருந்தரமறக்கணாசியினுனிவைத்துறுதல்சிங்காசனமாமால். (௭)

மருவிருபாதக்கரட்டினையிருபால்வாய்த்தவண்டங்களின்கீழ்வைத்
தொருவறவூருவிரண்டினுமிருகையூன்றினனாயிருப்பதுவே
பெருகுறுநலப்பத்திராசனமென்பர்பேணுமற்றிதுவிடரோகங்
கருதுறுபயமாதிகளையுநீக்குமென்மனோர்கற்றுணர்ந்தோரே. (௮)

மன்னியவாமபாதத்தின்கரட்டைவயங்குமண்டத்தின் கீழ்பால் வைத், துன்னியவதன்கீழ்வலப்பதக்கரட்டையொட்டவைத்திருப்பதுமுத்த, மின்னமுங்குறிமேல்பாகத்திலிடத்தாட்கரட்டினைவைத்ததன்மேலாத், துன்னிடவலத்தாட்கரட்டைவைத்திருக்குந்தொழிலு மஃதேயெனப்பகர்வார். (௯)

ஏற்றகூர்ப்பரங்களுனிகளுயியிணையிணை தரவிருகையுநிலத்தின்
மாற்றிடாதூன்றிபடிமுதற்சென்னிமண்ணிடையுறுதமேலெழுப்பிப்
போற்றுறவிருத்தன்மயூரமாமென்றுபுகலுவர்சகலபாதகமுந்
தேற்றமாநாசம்பண்ணுமீதென்றுஞ்செப்புவர்திப்பியப்புலவர். (௧௦)

ஒருவனுக்கெந்தவிதத்திறாற்சுகமுமுறுதயிரியமுமுண்டாகு
மருவுமவ்விதமாவிருப்பதுசுகமான்மற்றிஃதுசத்தனேகொள்வன்
திருவமாசிந்தவாசனவகைகடெரிந்தவனுலகெலாம்வெல்வான் [ல்.
குருவருள்பெற்றிவ்விதிகொடுபிராணுயாமத்தைக்குயிற்றிடல்கடனு

பதினைந்தாவது

ஆசனவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௧௫-க்குத் திருவிருத்தம் ௩௧௬.

உ

பதினாறவது

# பிராணுயாமவிதியுரைத்த வத்தியாயம்

## (அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இளங்குறுமதிமுடித்தவிணையிலியருள்கொள்வான்மெய்
வளங்குறுகாதுபோற்றுமாதவப்பெரியகீர்
துளங்குறுமனத்தர்கொள்ளுந்தூயவாசனம்வகுத்தாம்
விளங்குறுபிராணுயாமவிதியினையெடுத்துச்சொல்வாம். (௧)

## (எழுசீரடியாசிரியவிருத்தம்.)

ஏற்றமார்பிராணுயாமமென்றுரைப்பதிரேசகம்பூரகமெவருஞ்
சாற்றுகும்பகமிம்மூன்றுமேதருதிசான்றமுறையாயினிம்மூன்றுந்
தோற்றமாரகாரவுகாரமேமகாரசொரூபமேயாமிவைபுணரின்
மாற்றரியபிரணவம்பிராணுயாமமற்றதனதுசொரூபம். (௨)

இடையினால்வளியையாகருடணஞ்செய்திரெண்மாத்திரைவரை
பூரித், தடைவுறவகார தியானஞ்செய்திடுக வங்ஙனம்பூரித்தவளியை
த், தடையறநான்குதலையிட்டவறுபான் சாற்றுமாத்திரைவரைகும்பி
த், துடையவுத்தியானஞ்செய்கமேல்வன்மையுளவரைக்குந்தரிததிட
லாம். (௩)

பின்னரவ்வாறுகும்பித்தவளியைப்பிங்கலைநாடியின்வழியே
மன்னுமாத்திரைமுப்பதிற்றிரண்டளவுமருவுறவிரேசகஞ்செய்து

நன்னலம்பயக்குமகாரவக்கரத்தைநன்குறத்தியானஞ்செய்திடுக
வுன்னரும்பிராணாயாமமீதேயென்றுரைப்பர்கற்றுணர்ந்தவர்மீட்டும்

மருவுபிங்கலையாலொருபதினாறுமாத்திரையளவும்பூரித்துப்,பொ
ருவறுமகாரமூர்த்தியாஞ்சிவனைப்புகரறத்தியானிக்கவேண்டும், பெ
ருகவிவ்விதம்பூரித்தகாற்றனைமேற்பேசியமாத்திரையளவு, வெருவறக்
கும்பித்துகாரசொரூபவிண்டுவைத்தியானித்தல்விதியால். (௫)

நன்னயம்பயப்பப்பின்னுரச்சொரூபநான்முகற்றியானித்துக்கொண்
டன்னமூன்றனைத்தமாத்திரையளவுமருவிடையாலிரேசகித்தல் [டு
பன்னுமிப்பிரகாரம்பிராணாயாமந்தனைப்பழக்கஞ்செய்திடுக
வின்னமீரிந்தமுறைபுரிந்திடுதலிலங்குசந்நியாசிகட்காமால். (௬)

பிரமசாரியரில்லத்தவர்வனத்தோர்பிராணவாயுவையுதரத்தில்
வாருறப்பூரித்துயர்பிரணவமன்னியவியாகிருதிகளோடு
விராவியகாயத்திரியினைச்செபிக்கவேண்டுமிவ்வாறுமும்மூன்று
தரமொருமூன்றுசந்தியுஞ்செபிக்கத்தகுமெனநவிலுவர்சான்றோர்.

புரவலர்விராத்தியுடைவசியருக்கும்பொருந்துமற்றிதுவெனுமறை
நூல், பாவுசூத்திரர்க்குமாதர்க்குநமோந்தம்படுசிவமந்திரமேனுங்,கர
விலவியவைமந்திரமேனுங்கசிவுறச்செபித்திடலதுவால், வரமுறிப்
பிராணாயாமமோர்தினக்குமாண்புறப்புரிதலீரெட்டே. (௮)

ஒருமதியிவ்வாறுஞற்றிடிற்கொலையானுறுப்பழிமுதலியவொழியும்
பெருகுறவாறுமதியநன்குஞற்றிற்பிறங்கிடுஞானமாண்டொன்றேற்
கருதரும்பிரமஞானியேயாவன்கவினுறுயோகசானத்தோ [ன்,
னருமிறன்றருய முடையனாய்ப்பிராணாயாமத்தாலே முத்தியடைவா

வளியினைவயிற்றாகருடணஞ்செய்துமாண்புறப்பூரித்தல்செய்த
நெறிசெய்பூரகநீர்நிறைகடம்போலச்செறிதரவாயுவைவயிற்றிற்
கவிதாத்தரித்தல்கும்பகம்வயிறுகலந்தகாலவ்வயினின்றும் [தோர்.
மெள்ளெனவிடுத்தலிரேசகமென்றுவிளம்புவார்மெய்ப்பொருளுணர்ந்

மிக்கவிப்பிராணாயாமஞ்செய்திடுங்கால்வேர்வையுண்டாகிடின
தமம், தொக்ககம்பந்தான்றோன்றின்மத்திமமாந் துலங்குமுத்தா
னமுண்டாகிற், றக்கவுத்தமமாமிது கிடைப்பளவுந் தவிரற்க வவ்வ
ரண்டனையு, நக்கவுத்தமம்வந்துறிற் சுகியாவனண்ணுறுஞ் சித்தசுத்
தியுமே. (௧௧

சித்தசுத்தியினாற்சோதியைமனநற்றிடமுறப்பற்றிடுமென்று
மொத்தமற்றதனாற்பரசிவக்கலப்பினுற்றொளிர்ந்திடுவனன்மாவுந்
தத்துவபரமுத்தியும்பினரண்டையுஞ்சாற்றுமிவ்வாறன்றியொருவ
னித்தியமிரண்டுமொருவிக்கும்பகமேநிலையுறச்சாதனஞ்செய்யின்.

பாதகமனைத்து மொழிதரமனவொப் பாயவேகத்தையும் பகரு,
மேதகுஞானந்தனையுநன்கடைவன்மேன்மையோர்சொற்றிடப்படுமி
வ், வாதரப்பிராணாயாமத்தையென்றுமப்பியாசஞ்செயுமவனுக், கேத
மொன்றின்றுகிடைப்பரியதுவுமெவ்வுலகத்தினுமின்றே. (கஙு)

ஆதலிற்சருவமுயற்சியினாலுமப்பியாசஞ்செய்கவதனைக்
காதலினதுசெய்காலமுஞ்சந்திகாலங்கள்பிராமநன்முகூர்த்த
மாதர்நண்பகலுமாமெக்காலமுமாம்வளியையாகருடணஞ்செய்து
ரோதலில்வயிற்றுப்பூரித்துநாசிநுனியினுநாபிமத்தியினும். (கச)

பாதமாரங்குட்டத்துந்தாரணமேபண்ணிடவேண்டுமிவ்வாறு
மேதகப்புரிவோன்சகலரோகமுமில்லித்தகனாகிநூறுண்டு
காதலிற்சீவித்திருப்பன்றாரணத்தைக்கவினாசியினுனிசெய்யின்
வாதமற்றவற்குவசப்படுநாபிமத்தியிற்செயிற்பனோயொழியும். (கரு)

மேவுதாளங்குட்டத்தினிற்றரிக்கின்மெய்கனமின்றியிலகுவாம்
நாவினால்வளியாகருடணஞ்செய்துநலமுறப்பானம்பண்ணுவனேற்
பாவியசிரமதாகரோகங்கள்பாறிடுநாவினால்வளியை
மாவுறுமாறுகருடணம்பண்ணிவாய்ப்பநாவடியினின்மாதோ. (கசு)

அமைதரச்சித்ததாரணம்பண்ணியமிர்தபானஞ்செயினகலா
திமையவர்புகழுஞ்சுகம்பலவுண்டாமிடையினாலாகருடணஞ்செய்
தமைதரக்காலைப்புருவமத்தியிற்றாரணஞ்செய்துதூய்மையனாகிக்
கமைதரவமிர்தபானஞ்செய்குவனேற்கழியுமால்வியாதிகளனைத்தும்

இடைவலகலையாலீர்த்துளர்காலையினைதரநாபியிற்றரிக்கி [னுங்
னுடைவலிகொடுபோழுரோகங்களனைத்துமொருமதி மூன்றுசந்தியி
தடையறவளியைநாவினாலீர்த்துத்தயங்குசித்தத்தைநன்றாபிப்
புடையுறத்தரிக்கில்வாதமேமுதலாப்புகல்பலதோடமுமொழியும். ()

இருநரம்பாற்காலாகருடணஞ்செய்திரண்டுநேத்திரங்களிற்சிரத்
தின், மருவுசோத்திரத்திற்றாரணஞ்செய்யின்மயங்கியவ்வப்பிணியக
லும், பொருவறுசுவத்திகாசனத்திருந்துபுகாறுமனத்தனாயபானத்,தி
ருகறுவளியைமென்மெலமேலேதிகழ்பிரணவத்தொடுமீர்த்து. (கஅ)

அங்கையங்குட்டத்தாற்செவியடைத்தக்கங்கடற்சனியினாற்பு
தைத்துத், தங்குநாசியையமத்திமையினானெருக்கிச்சாற்றுவாயீரிதழ்
பொருத்திப், பொங்குமானந்தமெழும்வரைசிரத்திற்பொலிவுறத்தா
ரணஞ்செய்க, மங்கலில்பிராணவாயுவப்போதுமருவுறும்பிரமரந்தி
ரத்தை. (உ0)

ஆயவக்காலைநாதமொன்றுண்டாமஃதொருபஃதவைமுறையே
மேயகிண்கிணியேசிலம்புநன்மணியேமிளிர்தருசங்கமேயாழே

சாய்வறுதாளம்வேய்ங்குழல்பேரிதழுங்குமத்தளமுகிலென்பர்
வாயுதாரணைதான்சென்னியின்மத்திமருவுறுகாலையினன்மா. (உக)

சுடர்வரையருவிபோன்றுகீழ்முகமாய்த்தோன்றுமப்போதுமெய்ஞ்ஞானம், படர்தரமுன்னைப்பெருஞ்சமுசாரபந்தம்யாவுஞ் சழிந்தொழியு, மிடர்கெடவாமபாதத்தின்கரட்டையியையவண்டத்தின்கீழ்வைத்துத், திடமுறவலப்பாதக்கரட்டினையுஞ் சேர்தரப்பீடியாவிருந்து. (உஉ)

பரசிவன்றனையுந்தம்பிமாமுசத்தூப்பண்ணவனையுந்தியானித்து
வரமுறுமூலாதாரத்திலைரத்தவன்னகேசரங்களையுடைய
வரவிந்தமலரிற்பிரணவமனத்தினன்புறத்தியானித்துக்கொண்டே
விரவவெவ்வளவின்மனேலயமாகுமேவதுவரைக்குமற்றம்ம. (உங)

ஆயிடைவாயுநிரோதஞ்செய்திடுதலந்தயோகத்திறலபான
வாயுவக்கினித்தானத்தினையடையும்வயங்குசெவ்வுருவமேயாய
மாய்விலாக்கினேயமெனுந்திரிகோணமண்டலத்துணவுகிரணிப்பித்
தேயசீர்த்தேகதாரகனுயிருக்குமோரொள்ளழன்மாதோ. (உச)

அந்தவக்கினியோடபானவாயுவையு மவிர்தருபிராணவாயுவையு, மூந்துசஞ்சலமில்லாதழல்சயமாயுறுமளவும்பிரணவத்தைச், சிந்தையிற்றியானஞ் செய்துகொண்டமையச்சிறந்ததாரணஞ் செயவேண்டு, நந்தழல்சயமாகியபினல்லழன்மண்டலத்திற்கு நண்ணுமேல்பாலில். (உரு)

கிளர்ந்திடுநாபிக்கந்தத்திற்கடித்தகீழுறுபாலிற்பத்திரங்கள்
வளர்ந்தருமாறுகொண்டுறைதருசுவாதிட்டானகமலமலரில்
விளங்கிடுபிராணனபானனைமிளிர்தீயோடுமாரோபணம்பண்ணி
யுளம்பிரணவத்தைநினைத்துநாபியினையொளிர்தருதிருட்டியானேக்கி

அமைமனேலயமெவ்வளவினுமிடுமவ்வளவுமாவயினுளர்காலைச்
சமைதரநிரோதஞ்செய்கபின்மாருதத்தொடுவிராயவக்கினியா
லிமையினிற்பிரபோதத்தினையடையுமியலுறுகுண்டலியதன்பின்
கமையொடுநாபிரந்திரமின்றுங்கவித்ததன்பணத்தினைவாங்கும். ()

வாங்குமக்காலைச்சுழிமுனைமூலரந்திரமாண்புறத்தெரியும்
பாங்கினவ்விடத்துவாயுவைநிரம்பப்பண்ணுசபடாழலோடு
தேங்குறவளியைச்சுழிமுனையதனிற்சிரமளவும்பிரணவத்தை
நீங்குறாதுள்ளித்தாரணைசெய்தனெறியெனப்பகர்வரிவ்வாறு. (உஅ)

பொலிதழலொடுகோலாலங்கமுழுதும்பூரிக்கப்பட்டவப்போது
மலிசிரத்தான்மாவானிடைக்கதிரைமானுறவிளங்குமேன்மேலு
நலிவறவிவ்வாறப்பியாசிக்குதலத்திற்குவளிசயமுண்டா [ம்.
மொலிவளிசயத்திற்குற்றசின்னங்களுரைத்திடின்வேர்முதலுண்டா

உற்றவிப்புனிதயோகுசெய்பவனுக்குலகமூன்றினுநிகரில்லை
பற்றியமூலரோகமேனுயர்செய்பகந்தரமேமுதலாய
மற்றுளநோய்கள்யாவுநீங்கிடுமோபாவமுமழிந்திடுமதனாற்
பெற்றிடற்கரியசித்தசாந்தியுமேர்பிறங்கிடப்பிறந்திடுமதனால். (௯0)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அரும்பவிழ்மலரோன்மாயனாதியர்வாழ்வெலாமோர்
துரும்பெனநினைக்குந்தக்கசுகவிராகமுண்டாம்
விரும்புமற்றதனாற்சுத்தமெய்ச்சிவஞானமுண்டாம்
பெரும்பெயரதனாற்பாசப்பிணிப்பறுமுத்தியுண்டாம். (௯௧)

நன்றுறித்தகுதிசான்றஞானசாதனத்தைவிட்டே
யென்றுமாயையின்மூடப்பட்டிரும்புவியிடையசார
மொன்றுமாபாசபந்தத்தழுன்றிடுவார்களென்னே
வன்றிகண்மலத்தினூர்ந்துமனமகிழ்ந்திடுதல்போலும். (௯௨)

திப்பியஞானசாரஞ்சிறிதருந்திடுவானேனு
மிப்பிரபஞ்சவாழ்க்கையெள்ளளவேனுமின்றே
தொப்பிலாமுக்கணெம்மானுபயபாதங்கள்பற்றி
வைப்படியாருக்காயமாமுத்திமருவிவாழ்வான். (௯௩)

மருதுகொல்லேற்றுப்பாகவள்ளலாரடிசார்ஞானப்
பெருமையர்சகத்தையெல்லாம்பெருஞானவுருவாக்காண்பர்
தருசமூசாரமாயதளைப்படுமூடர்நில்லாப்
பொருளுருவாகக்காண்பர்புகர்மலவலியென்சொல்கேன். (௯௪)

பொருவிலிவிமலஞானபூரணபூரணனின்பத்
திருவடியடைதற்கேதுசெப்புவர்பல்லாற்றானு
மருவியதானப்பேற்றுள்வயங்குயோகங்களுண்டாங்
தருமகல்விட்டியாற்றிற்றழைத்திடுந்தெய்வப்பேறு. (௯௫)

பேணுமாற்றவங்களாற்றிற்பிரமத்தானத்தாராவர்
பூணுமெய்ஞ்ஞானமொன்றேபுகரறுமுத்திக்கேது
கோணுமுளிலாதபுத்திக்கூர்மையருணர்வரீது
காணுமஞ்ஞானமூடர்கட்டுரைக்கினுங்கொள்ளாரால். (௯௬)

கருமத்தினாலேமுத்திகாணுதலரியதாருங்
கருமத்தையன்றிஞானங்காண்பதின்றெற்றைக்குஞ்சற்
கருமத்தைக்கொண்டுஞானங்கண்டுமுத்தியைச்சாராது
கருமத்தையிழந்துநிற்குங்கலதியரென்செய்வாரே. (௯௭)

ருகிருளிரவிதோன்றக்கழிதல்போன்ஞானந்தோன்றப்
பெருகியபாசம்போகும்பேசுதற்போதமும்போ
மருகுஞ்சஞ்சிதமுமூவாவவிர்கலைமதிக்கொழுந்து
செருகுசெஞ்சடைப்பிரான்பொற்சேவடிசேர்தலுண்மை. (நஅ)

பதினாறுவது

பிராணாயாமவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் கசு-க்குத் திருவிருத்தம் சநச.

உ

பதினேழாவது

## பிரத்தியாகாரவிதியுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

புராணபுனிதபுண்ணியாபுராந்தகாபொற்றாமரையும்
பராணமகளேத்தெடுக்குமுமைபாகாவன்பிற்பயிலுறுபத்
தராணண்மலர்த்தாளாவென்றுதவாதுதிக்குந்தவமுடையீர்
பிராணாயாமவிதியுரைத்தாம்பிரத்தியாகாரம்புகல்வாம். (க)

(மேற்படிவேறு.)

விடையநுகர்ச்சியிற் படருமிந்திரியங்களை யறிவின்மிகையாலு
ளூர், தடைசெய்துதன்வசமாக்கிடுதலேதகுபிரத்தியாகாரந்தான், மி
டைதரவெங்குங்காணப்பட்டபிரபஞ்சமெலாமெய்யேயோரி, னுடை
யசிவசொரூபமெனப்பார்ப்பதுவுமதுவாமென்றுரைப்பார்நல்லோர்.

தோற்றமுதலிறுதியுறுமளவுந்தான்செய்துவருதொழில்கள்யாவு
மாற்றல்கொளீசுரச்செயலென்றறவுநினைத்திருப்பதுவுமதுவேயாகு
மாற்றரியநித்தியநைமித்தியகாமிககருமமாண்பிற்செய்து
சாற்றரியசிவப்பிரீதிசெய்வதுவுமதுவென்பர்சான்றோர்யாரும். (உ)

வளியையயாகருடணஞ்செய்தொளிர்தந்தமூலத்துமாணப்பின்ன
ரொளிதருகண்டத்தினும்பினிதயத்தும்பின்னாபியுறுகந்தத்துந்
தெளிபினர்க்குண்டலிசத்திபிடத்தும்பின்றிகழ்தருமூலாதாரத்துங்
களிதரப்பினபானத்தானத்தும்பிரண்டுகெடியிடத்துமாதோ. (ச)

பின்னரிருகவானடுவும்பின்முழந்தாளிரண்டிடத்தும்பின்கணைக்கா
னன்னரிடத்தினும்பின்னர்ப்பாதாங்குட்டங்களினுநாட்டல்வேண்டு

மன்னியவோரிடத்திலவ்வளிநிறையளவுஞ்சித்தத்தைநிறுத்திமற்றோ
ருன்னியதானஞ்செலுத்தலிவ்வாறுசெய்வதுவுமுதுவாமென்பர்.(ரு)

இன்னுமிடைபிங்கலையால்வாயுவையாகருடணஞ்செய்தின்பமார
மன்னுசுவத்திகத்திருந்துபாதமுதற்சிரம்வரைமாண்புறப்பூரித்துப்
பின்னிருதாளிடத்துமூலாதாரத்தும்பெருநாபிக்கந்தத்து
மன்னிதயநடுவிடத்துங்கண்டமூலத்தும்வளர்நாவிடத்தும். (சு)

பகர்புருவநடுவொளிருநுதல்சிரத்துமாகவெரரொன்பதுதானத்தும்
புகரிலொருதானசயமாகியபின்மற்றுமொருபொலிதானத்துத்
தகரரியசித்தநிரோதஞ்செய்துதானத்தின்முறையேயன்பி
னகரமுகரம்மகரமைந்தெழுத்தோமெண்ணலுமற்றதுவாமென்பர்.()

உடலாதிபலவினையுமான்மாவென்றுரைத்துவருமொருஞானத்தை
மிடலாருமாகருடணஞ்செய்துவேருகாமிளிர்பூங்கொன்றை [ன்
மடலாருஞ்சடைப்பெருமானிடத்துநிரோதஞ்செய்யுமாண்புமோரி
விடலாகாவதுவிதுமந்தணத்துமதிமந்தணமாமேன்மைமிக்கீர். (அ)

பதினேழாவது

பிரத்தியாகாரவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் கஎ-க்குத் திருவிருத்தம் சசஉ.

உ

## பதினேட்டாவது

# தாரணைவிதியுரைத்தவத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

வாரணைமுலைமலைமயிலொர்பாகர்த
மாரணைதிருவடிக்கன்புபூண்டுளீர்
சீரணைபிரத்தியாகாரஞ்செப்பினந்
தாரணைமுறைமையுஞ்சாற்றுவாமினி. (க)

(கொச்சகக்கலிப்பா.)

பேருடலநடுவெளியிற்பிராணவாயுவிற்சடரத்
தாருமழறனிற்றெளிநீரவனியுறுபாகத்தி
லோருறுபாகியவெளியையுளர்காலையொளிர்தீயைச்
சாருறுமின்சுவைட்புனலைத்தகுபிருதிவியைமுறையின் (உ)

திட்முறவபேதமதிசிறப்பத்தாரணைசெய்தே
வடயொழிமுப்பத்துமூன்றுமெய்யையரலவை
யுடனுறவிந்துவைக்கூட்டியுறுமுறையிற்செபஞ்செய்தல்
படர்தருபாதகநிவிர்த்திபண்ணுந்தாரணையாமால். (௩)

மருவுமுழங்காலளவுமண்பாகங்குதமளவுந்
தருசலைநீர்ப்பாகமிருதயமளவுமழற்பாகம்
பொருவில்களமளவும்வளிபுணர்பாகஞ்சிரமளவு
மொருவுதலிலாகாசபாகமெனவுரைப்பரால். (௪)

புகரறுமிவ்வோரைந்துபூததானங்களிற்பூ
மகன்மறுமார்பினனென்றும்வயங்குமுருத்திரன்றனக்கு
நிகரறுமயேச்சுரனின்மலசதாசிவனிவரை
யகனமரத்தனித்தனியாங்காங்குமுறைபாவிக்க. (௫)

வேறுமொருதாரணையைவிளம்புவாமதுமனத்தி
லூறுசுவையமுதகலையொண்மதியஞ்சோத்திரத்திற்
கூறுபலதிக்குகளுங்குளிர்வாக்கிலக்கினியு
மாறுதலிலாதுகையில்வாள்வயிரப்படையானும். (௬)

அடிகளிலுபேந்திரனுமபானத்தானங்கதிருங்
கடிதவிலாக்குய்யத்திற்கவின்றபிரசாபதியு
நெடிதுறுதொக்கினில்வளியுநேத்திரத்திற்சூரியனும்
வடிவுறுநாவருணனுமூக்கசுவினிதேவருமாதோ. (௭)

ஆருயிரிற்பரசிவனுமமர்தரத்தாரணைபுரிதல்
சோருதலில்பிரமாதிசொரூபங்களானவெலா
மோருமவ்வக்காரணங்களுறவொடுக்கியாவைக்கும்
பேருதலில்காரணமாய்ப்பேசுதற்குமெட்டாதாய். (௮)

சடமாயுமிருக்குமொருதனிமாயைதனைமேனி
யிடமாதருடையபிரானிடத்தொடுக்குவதுமது
திடமாயைம்புலன்களையுந்திகழ்மனத்தினுறக்கவர்ந்து
வடமாருநிழலமர்ந்தான்மலரடிவைப்பதுமது. (௯)

மாலாதிபலதேவர்மாண்புமவராலுணராத்
தோலாதபெருங்கருணைச்சயஞ்சோதிபெரும்புகழும்
பாலாயகாலங்கள்படுகூறுமாணிடர்க்கு
மேலாயவிதியுமினும்விரித்துரைக்கப்படுமெவையும். (௧௦)

குறைவறச்சொற்றிடுதலினற்கோமளமாமொருபாக
மறைதருசொல்லாதலினாலாரணத்துக்கொப்பாக

நிறையுமொருநூலின்றெந்நீர்மையுலகினுமெனந
றுறையுறம்புவதுமதுவென்றுரைப்பர்தூய்மையரே. (கக)

தேவர்முதல்யாவர்களுக்கேதுகாதிகளுமாகேன
சோவழியாகைத்தபரஞ்சுடரின்வேறலன்யானென்
றோவறுபாவனைபுரியுமுதுவுமதுவாமென்பர்
பூவமர்மைமிசவனத்துட்புண்ணியமாதவத்திரே. (கஉ)

பதினெட்டாவது

தாரணைவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் கஅ-க்குத் திருவிருத்தம்-சஙச
உ

## பத்தொன்பதாவது

## தியானவிதியுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

புவிமுழுதிடந்துசென்றபுனத்துழாய்க்கேழல்வானத்
தவிர்தரப்பறந்தவேதவன்னமின்னமுங்காணுப்பொற்
சவியடிமுடிக்குநாளுந்தண்மலரிடுவீர்நல்லோர்
செவிகொடாரணைநவின்றுந்தியானத்தின்முறையுஞ்சொல்வாம். (க)

நிருமலவாகாயத்தினிமிர்பிரகாசம்வாய்ந்து
பொருவில்சிதளங்கொண்டியாருங்காணுறப்பொலியாநிற்கு
மொருமதிமண்டலத்தையுறமுசற்றியானஞ்செய்து
பெருகதனடுவட்பேரானந்தமேசொரூபனாகி. (உ)

பரையொருபாகஞ்சுத்தப்படிகசங்காசமேனி
புரையறுபிறைமாமோலிபுலவர்தம்மகளிர்கண்ட
விரைகொண்மங்கலநாண்காத்தமிளிர்தருநீலகண்ட
முரைதருமுக்கணுற்றேயொளிர்தரவுடையோனாகி. (௩)

ஆதிமத்தியாந்தமில்லாவருப்பொருளாகிவைகுஞ்
சோதியையிடையறுதுசோகம்பாவனைசெய்துள்க
னீதியாமின்னுந்தூயகெடுபடிவண்யாரு
மோதியவோரிலக்கயோகனைவிசாலமாகி. (௪)

பூரணவிளக்கம்வாய்ந்துபொலிசுதிர்மண்டலத்திற்
சீரணிசுவன்னமொத்ததிருவுருமுகரோமங்க

டார்ணிசிகைநகங்கடழைசெம்முகமுமுள்ளோனாய்ப்
பேருலகனைத்தினுக்கும்பிறங்குகாரணனேயாகி. (ரு)

கவினுறுமுமையோர்பாகங்காளமார்கண்டமுக்க
ணவிர்சதுர்ப்புயமுள்ளானாயமைந்தநின்மலப்பிரானைக்
குவிகைகொண்டறியாச்செங்கைக்குழகனையிடையறாது
துவிதபாவனைசெய்யாதுதியானித்தநலங்கவின்னும். (சு)

சுத்தவைதிகத்தழற்கட்டோன்றுபல்லுலகாதார
னித்தவானந்தநல்குநிருமலன்கங்கைசூடி
வித்தகத்துவசவேற்றன்விரூபாக்கன்விசுவரூப
னத்தனாற்புயன்செவ்வேணியவிர்கலாநிதிகொளண்ணல். (எ)

மன்னுமாபதிநல்லக்கமாலிகாபரணனாவின்
மின்னுபால்போலவெண்மைமிளிர்நிறத்தவனொப்பில்லா
னுன்னுமந்தணத்தினுள்ளுமந்தணனாகியுள்ள
துன்னுசோதியைமிக்குள்கசோகம்பாவனைசெய்தம்ம. (அ)

உரனுறவின்னுமோராயிரஞ்சிரங்கரந்தாளுள்ளா
னரனெனும்பரனாயநாரமென்றெவரும்பேசும்
விரவுசேதனவசேதனங்கட்குமேன்மைசான்ற
பரவிட்டானமாய்நாராயணப்பெயர்பரித்தோன். (கூ)

பொலிபுருடோத்தமன்பொன்புனைமறுமார்பனாய
வலிகெழுமானுமென்றுமனனுறத்தியானஞ்செய்து
மலியருட்பரமனில்லாய்மாண்பிரானாயாமத்தான்
மெலிவறுபிரணவத்தால்விகசிதமுள்ளதாகி. (க0)

திகழணிமாதியெட்டுச்சித்தியாந்தளங்கள்வாய்ந்து
துகளில்கேசரங்கடாந்தத்துவவித்தையாகக்கொண்டு
நகல்செய்சாத்திரகன்ஞானநாளம்பெற்றுள்ளதாய்மே
தகமகதத்துவக்கந்தம்படைத்தொளிராநிற்கும். (கக)

இருதயகமலநாப்பணெங்குசஞ்சரியாநிற்கு
மொருவறுசுவாலைபல்லவுடையதாயுடம்பிற்றண்முன்
மருவியசென்னிமட்டுந்தபிப்பதாய்வாயுவில்லாத்
திருகறுமிடத்திலோங்குந்தீபம்போற்சொலிப்பதாகி. (கஉ)

நீலமேகத்தினுப்பண்மின்னெனநிமிர்விளக்கஞ்
சாலவாய்ந்துறுநீவாரதாணியமுட்சொரூபக்
கோலமாரரிசனத்தின்குலநிறம்பெற்றிருக்குஞ்
சீலவக்கினியையுள்ளந்தியானிக்கவேண்டுமாலோ. (கங)

அத்தழற்சிகையினாப்பனானந்தமெய்ச்சொரூப
னித்தியன்பரமாகாசநடுவுறைநிமலன்சேற்க
ணுத்தமிசமேதன்பாசநோய்க்கொருமருந்தாயுள்ளான்
பத்தியில்வினைகார்க்கண்டன்பரமகாரணன்மாதேவன். (௧௪)

ஒளிர்தருவிரூபக்கண்ணனொப்பிலிவிசுவரூப
னளிமலர்க்கிழவன்முன்னோராற்றியாணிக்கப்பட்டோன்
றெளிதருதான்றியானஞ்செய்யவோர்வத்துவில்லான்
றுளிசிதர்கங்கைசூடிசுயம்பிரகாசனாகி. (௧௫)

இருந்தருள்பிரமந்தன்னையிரண்டறத்தியானஞ்செய்க
திருந்திதுதெய்வவேதச்சிகையெடுத்தியம்பாநிற்கு
மருந்திறன்முத்திக்கேதுவாகியமார்க்கமாகும்
பொருந்தமற்றின்னும்பூமேற்புண்ணியனானையென்று. (௧௬)

பாவனைபொருந்தப்பண்ணிப்பற்றுதன்னிதயநாப்பட்
பாவனைக்கெட்டிடானாய்ப்பலவுக்குஞ்சான்றுமாகிப்
பாவநைமறையீற்றோங்கும்பரனாயுள்ளானைச்சோகம்
பாவனைகொடுதியானம்பண்ணிடவேண்டுமின்னும். (௧௭)

சத்தியஞானானந்ததற்பரசொரூபனாகி
நித்தியநிமலனாகிநிகரறுமுதல்வனாகித்
தத்துவாதீதனாகிச்சருவவாதாரனாகி
யத்துவாமூர்த்தியாகியப்பிரமேயனாகி. (௧௮)

திரிசியமுள்ளோனாகித்திரிசியமில்லோனாகி
விரிவுறப்புறம்புமுள்ளும்வியாபித்துநிற்போனாகி
யரியதிலரியோனாகியரியனவறிந்தோனாகித்
துரியமுங்கடந்தோனாகிச்சுயம்பிரகாசனாகி. (௧௯)

மூலமீறிகந்தோனாகிமூப்பிலாமுத்தனாகிக்
காலகற்பனைகடந்தகாரணப்பொருளுமாகித்
தூலமல்லாதிருக்குஞ்சூக்குமனாகிவைகுஞ்
சீலமார்பரசிவத்தையிரண்டறத்தியானஞ்செய்க. (௨௦)

எரியவிர்குடங்கையானையிரண்டறத்தியானஞ்செய்யும்
பெரியவன்சிவனேயென்றுபேசுதற்கையமில்லை
யரியதெனவனுக்கெல்லாப்பாவமுமகலுமுத்திக்
குரியவனானன்மற்றோர்க்குரியதென்பவமேயன்றி. (௨௧)

இத்தகுதியானஞ்செய்தற்கெறுழிலான்சங்கநேமி
யத்தன்பீதாம்பரத்தனலர்ந்ததாமரைச்செங்கண்ண
னுத்தமத்திருவாழ்மார்பனலவெ[illegible]செவ்வாய்
வித்தகன்மணிகால்யாத்தமிளிர்மு[illegible]ன். (௨௨)

டார்ணிசிகைநகங்கடமைழசெம்முகமுமுள்ளோனுய்ப்
பேருலகனைத்தினுக்கும்பிறங்குகாரணனேயாகி. (ரு)

கவினுறுமுமையோர்பாகங்காளமார்கண்டமுக்க
ணவிர்சதுர்ப்புயமுள்ளானுயமைந்தநின்மலப்பிரானைக்
குவிகைகொண்டறியாச்செங்கைக்குழகனையிடையறு து
துவி தபாவனைசெய்யா துதியாணித்தறுலங்கவின்னும். (சு)

சுத்தவைதிகத்தழ்ற்கட்டோன்றுபல்லுலகாதார
ணித்தவானந்தநல்குநிருமலன்கங்கைசூடி
வித்தகத்துவசவேற்றன்விரூபாக்கன்விசுவரூப
னத்தனுற்புயன்செவ்வேணியவிர்கலாநிதிகொளண்ணல். (எ)

மன்னுமாபதிநல்லக்கமாலிகாபரணனுவின்
மின்னுபால்போலவெண்மைமிளிர்நிறத்தவனெுப்பில்லா
னுன்னுமந்தணத்தினுள்ளுமந்தணனுகியுள்ள
துன்னுசோதியைமிக்குள்கசோகம்பாவனைசெய்தம்ம. (அ)

உரனுறவின்னுமோராயிரஞ்சிரங்கரந்தாளுள்ளா
னரனெனும்பரனுயைநாரமென்றெவரும்பேசும்
விரவுசேதனவசேதனங்கட்குமேன்மைசான்ற
பரவதிட்டானமாய்நாராயணப்பெயர்பரித்தோன். (கூ)

பொலிபுருடோத்தமன்பொன்புனைமறுமார்பனுய
வலிகெழுமானுனென்றுமனனுறத்தியானஞ்செய்து
மலியருட்பரமனில்லாய்மாண்பிரானுயாமத்தான்
மெலிவறுபிரணவத்தால்விகசிதமுள்ளதாகி. (கo)

திகழணிமாதியெட்டுச்சித்தியாந்தளங்கள்வாய்ந்து
துகளில்கேசரங்காந்தத்துவவித்தையாகக்கொண்டு
நகல்செய்சாத்திரநன்ஞானநாளம்பெற்றுள்ளதாய்மே
தகமகதத்துவக்கந்தம்படைத்தொளிராநிற்கும். (கக)

இருதயகமலநாப்பணெங்குசஞ்சஞ்ரியாநிற்கு
மொருவறுசுவாலைபல்லவுடையதாயுடம்பிற்றுண்முன்
மருவியசென்னிமட்டுந்தபிப்பதாய்வாயுவில்லாத்
திருகறுமிடத்திலோங்குந்தீபம்போற்சொலிப்பதாகி. (கஉ)

நீலமேகத்திணுப்பண்மின்னெனநிமிர்விளக்கஞ்
சாலவாய்ந்துறுநீவாரதானியமுட்சொரூபக்
கோலமாரரிசனத்தின்குலநிறம்பெற்றிருக்குஞ்
சீலவக்கினியையுள்ளந்தியானிக்கவேண்டுமாலோ. (கங)

அத்தழற்சிகையினுப்பணனந்தமெய்ச்சொரூப
னித்தியன்பரமாகாசநடுவுறைநிமலன்சேற்க
ணுத்தமிசமேதன்பாசநோய்க்கொருமருந்தாயுள்ளான்
பத்தியில்விளைகார்க்கண்டன்பரமகாரணன்மாதேவன். (கச)

ஒளிர்தருவிரூபக்கண்ணனெனுப்பிலிவிசுவரூப
னளிமலர்க்கிழவன்முன்னேராற்றியாணிக்கப்பட்டோன்
றெளிதருதான்றியானஞ்செய்யவோர்வத்துவில்லான்
றுளிசிதர்கங்கைசூடிசுயம்பிரகாசனுகி. (கரு)

இருந்தருள்பிரமந்தன்னையிரண்டறத்தியானஞ்செய்க
திருந்திதுதெய்வவேதச்சிகையெடுத்தியம்பாநிற்கு
மருந்திறன்முத்திக்கேதுவாகியமார்க்கமாகும்
பொருந்தமற்றின்னும்பூமேற்புண்ணியனேனையென்று. (கசு)

பாவனைபொருந்தப்பண்ணிப்பற்றுதன்னிதயநாப்பட்
பாவனைக்கெட்டிடானுய்ப்பலவுக்குஞ்சான்றுமாகிப்
பாவனைநடுறையீற்றேருங்கும்பரனுயுள்ளானைச்சோகம்
பாவனைகொடுதியானம்பண்ணிடவேண்டுமின்னும். (கஎ)

சத்தியஞானனந்தசுற்பரசொரூபனுகி
நித்தியநிமலனுகிநிகாறுமுதல்வனுகித்
தத்துவாதீதனுகிச்சருவவாதாரனுகி
யத்துவாமூர்த்தியாகியப்பிரமேயனுகி. (கஅ)

கிரியமுள்ளோனுகித்திரிசியமில்லோனுகி
விரிவுறப்புறம்புமுள்ளும்வியாபித்துநிற்போனுகி
யரியதிலரியோனுகியரியனவறிந்தோனுகித்
துரியமுங்கடந்தோனுகிச்சுயம்பிரகாசனுகி. (ககூ)

மூலமீறிகந்தோனுகிமூப்பிலாமுத்தனுகிக்
காலகற்பனைகடந்தகாரணப்பொருளுமாகித்
தூலமல்லாதிருக்குஞ்சூக்குமனுநிவைகுஞ்
சீலமார்பரசிவத்தையிரண்டறத்தியானஞ்செய்க. (௨0)

எரியவிர்குடங்கையானையிரண்டறத்தியானஞ்செய்யும்
பெரியவன்சிவனேயென்றுபேசுதற்கையமில்லை
யரியதெனவனுக்கெல்லாப்பாவுமுமகனுமுத்திக்
குரியவனுனன்மற்றேர்க்குரியதென்பவமேயன்றி. (௨க)

இத்தகுதியானஞ்செய்தற்கெறுழிலான்சங்கநேமி
யத்தன்பீதாம்பரத்தனலர்ந்ததாமரைச்செங்கண்ணை
னுத்தமத்திருவாழ்மார்பனுலவொ [illegible] செவ்வாய்
வித்தகன்மணிகால்யாத்தமிளிர்மு [illegible] தன். (௨௨)

மகரகுண்டலத்தன்செந்தேன்மாந்திவண்டினங்கள்கீத
நிகரறப்பாடுமென்றணிமிர்துழாய்க்கண்ணியண்ணல்
பகருமாயிரவாய்நாகப்பாயலான்பரவைசூழு
மகனிலங்காவல்பூண்டோனுயமாயவனையேனும். (உக)

கலைமகணுவன்பூவன்கமண்டலமணிவடங்கை
நிலையுறக்கொண்டவண்டனீருலகனைத்துமாக்குந்
தலைமையனன்னமூருஞ்சதுமுகன்பதுமமாலை
மலைசெயெண்டோளனுயமறையவன்றனையேனும். (உஉ)

அலர்கதிர்ப்பிரானையேனுமக்கினித்தேவையேனு
மலர்கலைமதியையேனுமாண்புறத்தியானஞ்செய்க
பலபகவித்தியானம்பண்ணிவந்திடுவனுகிற
கலவுவன்மூறையிற்றூயகதிர்செயுஞானமாதோ. (உ௩)

பத்தொன்பதாவது

தியானவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ககூ - க்குத் திருவிருத்தம் சஎகூ.

உ

இருபதாவது.

## சமாதிவிதியுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

கறைகெழுகண்டத்தெண்டோட்கண்ணுதற்சாமிபாத
முறைமையிற்றியானஞ்செய்துமுனிவறத்துதித்துந்தாழ்ந்தும்
பறைதருகாலாஞ்சத்திபதிதரப்பெற்றீர்கேண்மின்
றறைபுகழ்தியானஞ்சொற்றுஞ்சமாதியென்பதுவுஞ்சொல்வாம். (க)

சுத்தமெய்ஞ்ஞானனந்தசுயம்பிரகாசவீச
வுத்தமமுக்கணுற்றோளோங்கொளியிடத்தெஞ்ஞான்று
மெத்தகையுயிர்களேனுமிரண்டறக்கலந்தின்பாரு
மத்தகுகலப்பையம்மாவறிந்தவர்சமாதியென்பர். (உ)

மேவருமறைகளத்துவிதமெனவிளம்புமச்சொற்
றூவரும்பொருள்வேறன்மைதானெனவுரைப்பரற்றூற்
றீவர்கள்பலருந்தானுய்நிற்பனந்தேவதேவன்
பாவனைதுவிதங்கொள்ளிற்பவமொழியாதுகாணும். (௩)

பெருகுறுபரமானந்தப்பேரொளியொன்றேயேனு
மொருவிறன்மாயையாலேயுறப்பலபேதமாகிக்
கருதும்வான்மடாகாசஞ்செய்கடாகாசமாயினாற்போற்
றிருகறவிளங்குமுண்மைதெளிதரிற்பேதமின்றே. (௪)

புகருடல்பிராணவாயுபொறிமனம்புத்திசித்தம்
பகரகங்காரம்பஞ்சபூதஞ்சத்தாதிமாயை
தகராருநானென்றோதுஞ்சழக்குணர்வொழித்தியாவு
நுகர்தனதுண்மைதேர்ந்துநுண்மையினுண்மையாகி. (௫)

நீடுமானந்தரூபநிருமலவொளியிலொன்றாக்
கூடுமாறொருவாவெண்ணங்கோடலுஞ்சமாதியின்னும்
பாடுகொளைம்பூதத்தினுருபலண்டமுற்று
மாடுகொள்விவேகமென்னுமடுசிகைத்தழலைக்கொண்டு. (௬)

பூதமாத்திரமேயென்னும்புத்திசெய்துறத்தகித்துத்
தோதகமின்றிமீட்டுந்தூலபூதங்கடம்மை
யாதரவொடுசத்தாதியாமெனத்தகித்துப்பின்னர்த்
தீதில்சத்தாதியாயசெறிபூதசூக்குமத்தை. (௭)

மாயமாத்திரசொரூபமென்றுமாண்புறத்தகித்துப்
பாயவம்மாயைதன்னைப்பாங்கருட்சார்பினின்று
தேய்தரத்தகித்தானந்தச்சேயொளிப்பிழம்பின்மூழ்கு
நேயமார்துணிவுமஃதாமெனநிகழ்த்திடுவரின்னும். (௮)

பிரணவசொரூபமாயபெருந்தகைத்தம்பிரானை
வரமுறுநாதத்தோடுமருவியமூன்றுவன்னத்
திரவில்சொரூபியாகத்தேர்ந்துபின்னவற்றுளம்மா
வுரமிகுமகரமற்றையுகரநன்மகரநாதம். (௯)

முறையினிந்நான்கிருக்குமொழியியசுருநற்சாம
நிறையதர்வணமாய்வேதனெடியமாலுருத்திரன்னே
கறையில்காரணமாய்க்காருகபத்தியந்தக்கணத்தீ
மறைசொலாகவனீயஞ்சம்வர்த்தமாயின்னுமாதோ. (௰)

பிருதுவியந்தரம்பேர்ச்சுவர்க்கஞ்சந்திரலோகம்மாய்
மருவுசாக்கிரங்கனவுஞ்சுழுத்திமாண்டுரியமாய்ச்சீர்
தருநாபியிதயங்கண்டந்தலையாயுதாத்தமிக்க
விருமைகொளனுதாத்தஞ்சொரிதமேகசுருதியாகி. (௧௧)

தகுபூதம்பவுடியம்வர்த்தமானஞ்சாதாரணம்மாய்
நகுதலில்யாவுநற்பிரணவமயமென்றுட்கொண்டே
யுகுதலிலவ்வையுவ்விலுவ்வைமவ்வினிலம்மவ்வை
மிகுதலையுறுநாதத்தில்விளம்பியவந்நாதத்தை. (௧௨)

அமையுமாயையிலம்மாயையைத்தனதிடத்திற்றன்னை
யிமையவர்தலைவனெண்டோளெந்தைபாற்கிரமமாகிச்
சமைதரவிலயஞ்செய்துதனக்கிணையின்றிநிற்றல்
கமையுடைச்சமாதியென்றுகரைவராலெவருமின்னும். (௧௩)

அலைநுரையாதிதோன்றியாழியினடங்குமாபோ
லிலையமாகிடுமுக்கண்ணனிடத்தினிச்சகத்துமற்றத்
தலைவனினழுந்துமெற்குச்சகத்தேதுமாயையேதென்
றலைவறுதுணிவிற்கொண்டுநிற்றலுமதுவாமென்பார். (௧௪)

நிருமலனிருவிகாரனிராமயனிருவிகற்பன்
மருமலர்த்துளவமாலைமாலயற்கரியசோதி
யொருவனுள்ளகத்தினெப்போதொளிர்தரவிளங்காநிற்குந்
தெருமரலொழிசமாதிசித்தியுண்டாமப்போதே. (௧௫)

(கோச்சகக்கலிப்பா)

சகலபூதங்களையுந்தன்னுயிரிற்காண்பதுவுஞ்
சகலபூதங்களிடந்தன்னுயிரைக்காண்பதுவு
மிகலறவெஞ்ஞான்றொருவனுளனவனஞ்ஞான்றே
யிகன்மிகுமின்பார்தருமொன்றிரண்டறுமுத்தியையடைந்தோன். ()

தத்துவத்துக்கெட்டாததனிப்பரமயோகியிடைச்
சித்தமபேதம்படச்செய்திகழ்சமாதியனாகி
யெத்தலமுந்தோன்றாமலென்றிருப்பானொருவனவன்
முத்தனெனமுத்தலமுமொழியாநின்றிடுமன்றே. (௧௭)

மின்னுடையப்பொலிசடிலவிமலனார்திருத்தாளிற்
றன்னுடையமனங்கலக்குந்தன்மையுடையவனாகி
யென்னுடையதியானெனுமிவ்விரண்டுமொழிதாநிற்போன்
மன்னுடையவின்பநிலைமருவினோனவனன்றே. (௧௮)

மறைமுடியினடாவிலுமாதேவனொருவனே
யறைதருநித்தியனுலகமவனதுமாயாசொரூப
முறையுமிஃதவனிடத்தேயுதிக்குமொடுங்கிடுமெனவுட்
குறைவறவெண்ணுதலுடையோன்கூடுவான்முத்தியினை. (௧௯)

துக்கமேனாடோறுந்தொலையாமலுண்டாக்கு
மிக்ககொடும்பவநோயின்வேரறுக்குநன்மருந்து
செக்கர்முடிமதியணிந்தான்றிருவுண்மையுணர்ஞானந்
தக்கவதுபெற்றவனத்தம்பிரானாவனால். (௨௦)

எண்ணிலாக்கருமங்களைத்தனைநாள்குயின்றாலுங்
கண்ணிலாகும்பயனெக்காலுநிலைத்திடுவதோ
தண்ணிலாமதிமுடித்தான்றனுணர்மெய்ஞ்ஞானபல
னுண்ணிலாவின்பமிகுத்தோங்குமொழியாதென்றும். (உக)

அழற்சிகைதான்சிறிதெனினுமடரிருளையழித்திடுமவ்
வழற்பொறியொன்றெனினுமாரணியமழித்திடுமவைபோ
லழற்கரத்தேவுண்மைசிறிதறிஞானமஞ்ஞான
மழற்கடும்பாதகமனைத்துமழித்திடுதற்கையமின்றே. (உஉ)

மந்திரவல்லமையுடையோன்வாளரவினொடுகூடிச்
சந்ததமுமிருந்தாலுந்தாவுறாததுபோல
வந்தமிலானடியுணருமருண்ஞானிபுவிவிடைய
பந்தமுடனிருந்தாலும்பற்றானவ்வாதனையே. (உ௩)

வலிமருந்தாலெவ்விடமுமாறிவிடுவதுபோல
மெலிவறுநன்ஞானத்தால்விட்டொழியுமெப்பவமு
மொலிபுகழ்சேர்மெய்ஞ்ஞானிபிரபஞ்சத்துறுதுயிலு
மலிபருளார்பொருளிடத்துமன்னுவிழிப்புந்துறவான். (உச)

நடந்தாலுமிருந்தாலுநவின்றாலுந்துயில்கொண்டு
கிடந்தாலும்விழித்தாலுங்கிளர்முடிமன்னவர்முதலோர்
தொடர்ந்தாலுந்தொழுதாலுந்துதித்தாலுமவமதித்துக்
கடந்தாலுமெய்ஞ்ஞானிகமலவிலைப்புனல்போல்வான். (உரு)

## (அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இனையஞானிதனைப்பரனென்றெண்ணாதேவனவமதித்தா
னனையபாவிநெடுங்காலமள்ளலனைத்துமழுந்திடுவான்
வனையுஞானியெவன்மனைச்செல்வானச்செல்கைமாத்திரத்தா
னினையும்போகம்பற்பலவுநிரம்பவுறுமம்மனையாளி. (உசா)

இன்னுமவன்றன்பிதிரர்குழுவேற்றமாகிமுத்தியிடை
மன்னுஞானியருட்பார்வையுயங்கவெவன்மேற்படினுமவன்
றன்னுபாவமெலாமொழிந்தோன்றூயஞானிதானுதித்த
மின்னுகுலமும்புனிதமுறுமேவுவாளன்னையுமுத்தி. (உஎ)

செய்யஞானிதரிசனமேதேவதேவன்றரிசனமா
மையவவன்றங்கிடுபூமியமைந்தசிவபுண்ணியபூமி
தெய்யவவனைவணங்கிடுதல்சிவபிரானைவணங்கிடுதல்
பொய்யிலவனுக்கியற்றுபணிபூதநாதற்கியற்றுபணி. (உஅ)

மருவுகுதலைமழலையுமணிவள்ளத்தருமையறியாது
பெருகவிகழுமதுபோலப்பித்தின்முழுகும்பேருலகம்
பொருவின்ஞானியருமைதனைப்போற்றாதிகழ்ந்துபுகரடையுங்
கருவன்மலத்தைதயிருங்கயிலைக்கடவுளருளாலறுத்துள்ளீர். (௨௯)

அன்றுகடலிற்கொதித்தெழுந்தவாலகாலமமுதாக்கி
நன்றுபொலியுநம்பெருமானனினமலர்த்தாளிடைப்பத்தி
யொன்றுமவர்க்கேமெய்ஞ்ஞானமுறுமற்றோருக்குறாதென்றுந்
துன்றுஞானமகிமையெலாஞ்சொல்லப்புகினாள்பலகழியும். (௩௰)

இருபதாவது

சமாதிவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௨௰-க்குத் திருவிருத்தம் ௫௰௯.

---

இரண்டாவதுகாண்ட முற்றிற்று.

ஆகக் காண்ட மிரண்டுக்குத் திருவிருத்தம் ௬௫௪.

சிவமயம்.

மூன்றாவது

# முத்திகாண்டம்.

முதலாவது

## சூதர்மேருவையடைந்த வத்தியாயம்.

### விநாயகர்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

மதிவளர்சடையுமணிமுடிப்போதி வயங்குமொள்ளரையுமோர்கோடுந், துதிவளர்தருபொற் குழையுமெவ்வுயிருந் தொகப்புரிநிழலுமன்பராகம், பொதிவளரின்பமரும்பு நன்பூவும் புகரறக்கொண்டுபன்னாளுங், கதிவளர்பல்மிக் களிக்குமம்பகட்டுக் கற்பகந்தனையடுத்துய்வாம். (க)

### பரசிவம்.

பத்தியின்விளையும்பரம்பொருளாகிப்பசுவறிவொழிதரார்தொடரா
நித்தியநிமலப்பேரொளியாகிநிகரிலியாகியெவ்வுயிர்க்கும்
புத்தியுமினியமுத்தியும்புணர்க்கும்புண்ணியமூர்த்தியுமாகி
முத்தியுமாகிவிளங்கிடுமனாதிமுழுமுதலவனடிதொழுவாம். (உ)

### பரை.

திரிவிதசதசத்தாகியவுயிர்கள்செம்பிற்காளிதம்பொரவன்றே
யுரிமையிற்புணர்ந்தகரியவன்மலத்தையுழல்புகரறிவொழித்தூணரு
மரியசன்மார்க்கநெறியினின்றுருவியவிர்பரசிவவொளிப்பிழம்பிற்
பரிதியின்விழிபோற்கலப்புறவருளும்பராபரைபாதமேத்தெடுப்பாம்

### விநாயகர்.

(நேரிசைக்கலிப்பா.)

ஆரணமாகமம்பரவுமமலனனந்தனருள்
பூரணமாம்பரம்பொருளைப்புண்ணியர்கள்பெருவாழ்வைக்
காரணமாவெத்தொழிற்குங்கதிக்குமொருசெழுஞ்சுடரை
வாரணமாமுகத்தேவைவணங்கிவளம்பெற்றிடுவாம். (௩)

### சண்முகர்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அணிகைவரைகுடையாக்கொண்டா னினங்காத்தருளரவவணையானேத்துந், திணிகைவரையினம் வயமாவினம் பகையின்றலவுநலஞ்சிறக்குந்தெய்வத், தணிகைவரைமிசைநிலவு மாறுமுகப்பரஞ்சுடர்தன் சரணந்தாழ்வாம், பிணிகைவரைதர வருளுஞ்சிவஞானமெந்நாளும்பிறங்க மாதோ. (௫)

(கலிநிலைத்துறை.)

பொன்னுமாமதிக்கடவுளும்பொலிதருமற்றைத்
துன்னுகோள்களுநாள்களுந்தினம்வலஞ்சூழ
வுன்னுமாதரமாகிமூவுலகமுமுருவி
மின்னும்வாளொளிவீசிநிற்பதுவடமேரு. (சு)

பிரமனாதிவானவர்களுட்பெரும்பெயர்க்கயிலைப்
பரமனாருயர்ந்தாலெனப்பாரிடத்துள்ள
வுரமனாடுறுவரைபலவற்றுளுமுயர்ந்து
வரமனாவொளிர்வதுவடகனகமால்வரையே. (எ)

அறிவிலாமலிவ்விலங்கலோடிகலியோரடுக்கல்
குறியதாயமெய்நெடியசீர்க்குணத்தொருமுனியால்
வறியதாய்நனிமண்ணகத்தழுந்தியதம்ம
நெறியதேயெனநினைந்திகல்வரைகள்யாநினையின் (அ)

துடிகொணுண்ணிடையரம்பையருடலிற்றுறந்த
கடிகொள்பொற்கலவயிரம்வீழ்ந்திடந்தொறுங்களுறல்
படிகொள்பல்வரைப்பறையெலாமரிந்தபாகாரி
வடிகொள்வச்சிரஞ்சிதர்த்துமேற்போர்த்ததுமானும். (கூ)

குணங்குலாவுதற்சார்ந்தனயாவையுங்கோலத்
திணங்குதன்னுடைவண்ணமேயாக்கியெவ்வுலகும்
பிணங்குறாதுசோத்திரஞ்செயப்பெரிதுநின்றிடலான்
மணங்குலாவியமதலையான்றன்னையேமானும். (கO)

குழுமுவானவர்முதலியோர்க்கிருக்கையுங்கொடுத்துப்
பழுதிலாசையாயாசைகளெட்டையும்பகுத்து
வழுவிலாதுநின்றிடுமெதனிறமுறன்மதித்தே
முழுதுணர்ந்தவரவனிபொன்னிறமெனமொழிதல். (கக)

துளக்கலாநிலையுடைமையிற்சுடர்சடாமுடிசேர்
வளக்கலாநிதிப்பரனுக்கேவணக்கஞ்செய்வலியி
னளக்கலாப்பொருளுடைமையினடுத்தவர்க்கருத
விளக்கமேய்த்தலிற்றேசிகவரையெனன்மெய்யே. (க௨)

இனையமால்வரைப்பக்கமோரிடத்திரணியாக்கன்
வினையெலாமறுமாபத்தன்மேன்மைசால்கிலீபன்
புனையுஞ்சீருலோனுபன்பொலிபக்கனதற்பன்
றனைநிகர்த்தபவப்பிரீதன்மகோதரனே. (கங)

சங்குசத்திதனரிமகாவாகுசங்குகன்னன்
பொங்குசீர்ச்சனைச்சரன்பொலியக்கினிவன்னன்
றங்குமாதவச்சபாவன்னனேசமக்கிரீப
னெங்குளார்களுமேத்திடுவிரசனோர்விசுவன். (கச)

காலரூப்னிலம்பகன்னன்மசகாண்டன்
காலமாலியேபங்கனேகவினணிமாண்டன்
காலமூன்றுணருமாபத்தன்கரைபுகழ்ச்சோமன்
காலகாலனைக்கைதொழுமுருத்திரபத்தன். (௧௫)

முன்னுமாதவமுசலியேமோசகன்முகுந்தன்
பன்னுமாருமேனையகன்சிவசங்கற்பபத்தன்
மின்னுசீர்ச்சதருத்திரன்விளங்குசாபாலி
துன்னுமாமைத்திராயணன்றூயசங்கவனே. (௧௬)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

இவர்முதலெழுபத்தீராயிரத்தொருபதிற்றிரண்டு
தவமிகுமுனிவருள்ளார்சமந்தமமுடையரீரார்
துவரிதழ்க்கரியகூந்தற்றூநகைமயிலோர்பாகச்
சிவபிரானடிகட்கன்புசெய்துவப்புறுவோர்நாளும். (௧௭)

மந்திரவிதியினீறுத்தூளனம்வ்யங்கச்செய்து
புந்தியினினிமையார்முப்புண்டரம்பொலியக்கொண்டே
யந்தியும்பகலுநீங்காதக்கமாமணியும்பூண்டு
தந்திரவிதிவழாதுகுசிவக்குறியர்ச்சிப்பார். (௧௮)

சத்திரயாகமொன்றுசமைத்தனரதனந்தத்தி
லத்திருமுனிவர்யாருமமைதரவொருங்குகூடி
முத்தியென்பஃதியாதம்முத்திசேருபாயம்யாது
சுத்தியம்முத்திநல்குஞ்சுயம்பிரகாசன்யாவன் (௧௯)

அத்தகுகடவுடன்னையறிவிக்குங்குரவன்யாவ
னுத்தமமுனிவிர்காளென்றுண்மையிற்றேர்ந்தாராகத்
தத்துவமுணரார்சாற்றிச்சாற்றிமற்றவைகழித்துச்
சித்தநம்பிடுமோவொன்றுந்தேர்ந்திலராயினாரே. (௨0)

தடையறத்தெரியுமாறுதவம்புரிந்திடுவாம்யாமென்
றுடையவனருளையுள்ளியுறுதவமுயன்றகாலைக்
கடையனுக்கிடப்பேனுக்குங்கண்ணருணிரம்பநல்குஞ்
சடையவன்விடைநடாத்துஞ்சாமிதன்னருளினாலே. (௨௧)

புண்ணியக்கயிலைமேயபூமலிபொழிலினோர்சார்
நண்ணிவீற்றிருந்தகுருதனைமீசமுனிவரோடுந்
தண்ணியகருணைபொங்கச்சார்ந்தனனாங்கவ்வேலை
மண்ணியவினையராயமாதவத்தலைவர்கண்டார். (௨௨)

எழுந்தனரெதிரேயோடியின்பமீக்கூரத்தாண்மேல்
விழுந்தனர்முகமன்மென்மேல்விளம்பினர்சடையிற்றிங்கட்
கொழுந்தணிபரமானந்தர்குலவருள்கூடிற்றென்று
செழுந்தனம்வறியன்பெற்றசெய்கைபோற்களிப்புக்கொண்டார். ()

அருக்கியமாதிநல்கியாதனத்திருத்தியன்றோ
னிருக்கெனவிருந்தபின்னரிணையிலிபூசைபெற்றான்
முருக்கியவினையீர்வாட்டமுதிர்தரத்தவமுயன்ற
திருக்கிளர்செயலென்னென்னச்செய்யவாய்மலர்ந்தான்சூதன். (உச)

மறைபலவுணர்த்தாநிற்குமந்தணமானவெல்லா
மறைதருபுராணம்யாவுமங்கையாமலகமென்னக்
குறையறவுணர்ந்தியார்க்குங்கொளுத்துமாமுனிவரேறே
கறையறுமுத்திபாதக்கதியடையுபாயம்யாது. (உரு)

முத்தியையெவர்க்குநல்குமுழுமுதல்யாவனந்த
வித்தகன்றனைத்தெரிக்கும்விமலனும்யாவனென்று
சித்தமாய்ந்துறவிவாதஞ்செய்தனந்தெளியகில்லே
முத்தமதெளியுபாயமுறுதவமெனவுட்கொண்டு. (உசா)

ஆற்றினந்தவத்தையெம்மானருள்வெளிப்பட்டாலென்னத்
தோற்றினைதெளிவுமாறுசொல்லிநீயேகல்வேண்டு
நீற்றொளிபழுத்தமேனிநின்மலமுனிவாசெங்கட்
கூற்றுயிர்குடித்தபாதங்குடிகொளுமனத்தாயென்றார். (உஎ)

பொங்குறுமுவகைவிம்மப்புராணங்கண்மணக்குஞ்செவ்வா
யங்குறுமுறுவல்பூப்பவருண்மிகவுடையோனாகிச்
சங்குறுகுழைக்காதையன்றாளிணைதியானஞ்செய்து
தங்குறுமறிவின்மிக்கீர்கேண்மெனச்சாற்றுஞ்சூதன். (உஅ)

முதலாவது

சூதர்மேருவையடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் உஅ.

உ

இரண்டாவது

## முத்திநிலையுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

மெய்த்தவமுனிவிர்நீவிர்வினவியவனைத்துமுன்னா
ருத்தமப்பரமன்பான்மாலுறுதவமாற்றித்தேர்ந்தா
னத்தகுசரிதந்தன்னிலடைவினிலுணர்த்துகேன்முற்
சித்தமாசகன்றோர்கொள்ளுந்திறமுத்திதேருமாறே. (க)

கருமுகில்பூத்தசஞ்சக்காட்டொடுகிடந்தாலென்னப்
பருமணிதிரைகொழிக்கும்பாற்கடற்றுயிலுமாயோன்
சுருதியாயிரமுஞ்சூழ்ந்துதோத்திரஞ்செய்யயார்க்கும்
வெருவருவரங்கணல்கும்வெள்ளியங்கயிலைசார்ந்தான். (உ)

அடிவரையங்கமெட்டாறைந்துறவணங்கியாங்கே
படியிலோரிடத்திருந்துபடர்புலனைந்தவித்து
முடிவிலிசெய்யபாதமுண்டகமுளத்திருத்திக்
கொடியமாதவம்விடாதுகுயின்றினிதிருந்தான்பன்னாள். (ந)

மாதவனெனும்பேர்க்கேற்பமாதவம்புரிகின்றானிச்
சீதரனெண்ணமியாதுதேர்ந்திலமொன்றுமென்னாப்
போதனும்வயிரவாட்கைப்புனிதனுமற்றும்வானத்
தாதரவுடையதேவர்யாருமோரயிர்ப்புக்கொண்டார். (ச)

விரிமலருறையும்பொன்னும்விடுவச்சேனனும்புள்வேந்தும்
வரிகெழுமதராய்மற்றும்வைகுண்டத்துறைவோர்யாருந்
தெரியுநம்மிறைதன்றேவைச்சிந்தைவைத்துஞற்றுகின்ற
னரியமாதவமிக்கின்பமாகுமென்றுவகைபூத்தார். (ரு)

செக்கரஞ்சடையான்மேயதிருவரைச்சாரல்வைகிச்
சக்கரபாணிமிக்கதவம்புரிகின்றானின்று
மிக்கவன்படைகுறித்தோவேறெதுகருதியோவென்
றுக்கசிந்தையராயச்சமுற்றனரசுரர்யாரும். (சு)

சில்வளரளகபாரத்தேவியாய்விடையாயம்பாய்
மல்வளர்தனக்குநாளுமற்றுமாமன்பின்மேலோன்
பல்பகல்வருந்திநோற்பப்பார்ப்பனேகருணைமூர்த்தி
கல்வரைப்பிராட்டியோடுகாட்சிதந்தருளினானே. (எ)

குருக்கிளர்சடையுநீற்றுக்கோலமுமழுவுமானுந்
தருக்குவாளரவப்பூணுந்தயங்குறவெதிரேநின்ற
மருக்கிளர்கொன்றைமாலை வரதனைமாயன்கண்டு
பொருக்கெனவெழுந்துதண்டம்போலடிவிழுந்தான்மாதோ. (அ)

எத்தனைதரந்தாள்வீழுமெத்தனைதரங்கைகூப்பு
மெத்தனைதரநின்றாடுமெத்தனைதரஞ்சூழ்ந்தாடு
மெத்தனைதரங்கொண்டாடுமெத்தனைதரங்கைகொட்டு
மெத்தனைதரமுவக்குமென்சொல்கேன்மாயனன்பை. (கூ)

சோலைத்தாழ்குழற்செவ்வாய்வெண்ணகைத்திருவாழ்மார்பக்
காலைத்தாமரைப்பூங்கண்ணன்கண்கவர்வனப்பினிற்கு
மாலைத்தாதகிமிலைந்தவள்ளலுள்ளுவப்பவின்றேம்
பாலைத்தான்பொழிந்தாலொத்தபஃறுதிசெய்யலுற்றான். (கய)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

ஆறுடுறுசெஞ்சடையாய்சரணமழலாடுகுடங்கையிலுய்சரணம்
பாறுடுறுசூற்படையாய்சரணம்பணமாடரவப்பணியாய்சரண
நீறுடுறுமேனியனேசரணநிதியார்வரைவெஞ்சிலையாய்சரண
மேறுடுறுநீள்கொடியாய்சரணமெழிலார்கயிலைக்கிரியாய்சரணம். ()

இகலார்தருவெம்புரமூன்றவிய விளவாணகைசெய்தவனேசரணம், பகலார்மதிநிச் சலும்வாழ்ந்தொளிரப் பவளச்சடைவைத்தவனேசரண, நகலார்சனகாதியருக்கறமுன் னுன்குந் தெரிவித்தவனேசரண, மிகலார்மகமாற்றொருவன் றலையைவெட்டித்தழலிட்டவனேசரணம். (கஉ)

அருள்பெற்றிடவின்றமிர்தம்பெறுவா னலைமுன்கடைகாலையின்வந்தெழுவெங், கருள்பெற்றவிடத் தினையுண்டருளிக் கடையேனுடுமற்றுளதேவர்களு, மருள்பெற்றிறவா வகைகாத்தருண்மாமணியேயருள்வாரிதியேயொருவாப், பொருள்பெற்றிடு நற்குணமாதிரமேபொங்குஞ்சுடரேசரணஞ்சரணம். (கங)

தருவானிழலுல்வருளங்தெளியத்தங்குற்றிடுமென்றெளியேன்முதலாம், பெருவானருமற்றுளவெவ்வுயிரும் பெறுபோகமிழந்ததைதயோர்ந்தடியேன், மருவாதரவிற் சிலைமாரனையே வத்தீவிழியாற்பொடிசெய்தருளி, யுருவாருமையைப் புணர்ந்தின்பளித்தவொப்பில்லவனேசரணஞ்சரணம். (கச)

அத்தாவமலாசரணஞ்சரண மழகாகுழகாசரணஞ்சரணஞ், சத்தாகியமெய்ப்பரனேசரணஞ் சடையாய்விடையாய்சரணஞ்சரணம், பித்தாபிறைசூடிறைவாசரணம்பேராயிரமுள்ளவனேசரண, முத்தாமுடிவில்லவனேசரண முக்கட்சிவனே சரணஞ்சரணம். (கரு)

(கலிவிருத்தம்.)

எனத்துதியம்பியவெஃகமேந்தியைக்
கனத்தினுங்கரியசீகண்டனேகுபு
வனத்துழாய்மாலையமகிழ்ச்சிபூத்தன
மனத்திடைநினைத்ததென்வழுத்துவாயென்றான். (கசு)

என்றலும்பரவசமெய்தியெங்குஞ்சீர்
துன்றியபரசிவசொரூபமாகக்கண்
டொன்றும்பேசாதிருந்தான்சற்றொன்றுறப்
பின்றனதெண்ணம்பேசத்தொடங்கினான். (கஎ)

உய்ந்தனனடியனேனுண்மைமுத்தியு
மந்தமிலதனைமற்றடையுபாயமுஞ்
சந்தமார்மோசகன்றனையுந்தக்கநன்
மைந்தனைத்தெரிக்குமாண்குருவுந்தேர்ந்திலேன். (கஅ)

அருள்செயவேண்டுமாலையவென்றனன்
கருள்சிதைத்தெழுகதிர்மதியங்காசினி
யுருள்படப்பூட்டிடுனுமையைநோக்குபு
பொருள்படுகுறுநகைபுரிந்துவந்தரோ. (கக)

நன்றுநீவினயதாவின்மற்றேருக்கு
மொன்றிதமாவதோருவமையில்லது
மன்றநீபத்தியுள்வைத்துக்கேண்மியா
வென்றுவாய்மலர்ந்திசைத்திடுவனெம்பிரான். (உ0)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பகர்மறையந்தமுத்திப்பதமொருமூன்றேயென்று
நிகரறுமின்பமுத்தியொன்றென்றுநிகழ்த்தாநிற்கும்
புகரின்மூன்றுரைத்தமூன்றும்பொலிசாலோகஞ்சாமீப
மிகழ்வில்சாரூபமாகுமிவைமுறையடையாநிற்போர். (உக)

சரியைநற்கிரியையோகந்தமூவிநன்கனுட்டித்தோர்கள்
பிரியமாரிம்மூன்றும்பல்பேதமாய்விரியாநிற்கு
மரியநம்மருளால்வையமாக்கிடுமயனைப்போற்றற்
குரியவரடையுமன்னுன்சாலோகமுதலோர்மூன்றால். (உஉ)

மன்னவெம்மருண்மேற்றுங்கிவையகங்காவல்செய்யு
நின்னடிக்கன்புபூண்டநெறியினரடையத்தக்க
முன்னுநின்னுடைச்சாலோகமுதலியபதமோர்மூன்று
மின்னவைமுன்னவைக்குமேற்றமென்றறிதிமாலே. (உங)

நேயமிக்கெமதடிக்கணின்னினுமன்புசான்ற
தூயவனுருத்திரன்பாற்றொக்கவன்புடையநீரார்
சாய்வறவடையுமன்னுன்சாலோகமுதலோர்மூன்று
லேயமற்றிவைதாமுன்னரியம்பியதினும்விசேடம். (உச)

மலரயன்றன்விபூதிமாயவநின்விபூதி
யுலகெலாம்பொடிக்குமாற்றவுருத்திரன்விபூதிதம்மா
னிலவுறவடைசாலோகநிகழ்த்துசாமீபத்தோடு
பலர்புகழ்தருசாரூபபதமும்வேறுண்டாமாலோ. (உ௫)

நாடுறுசதாசிவப்பேர்நாட்டுசொரூபமுத்தி
நீடுறுமெவற்றினுக்குநிரம்பியவிசேடமாகும்
பாடுறவுரைத்தவிந்தப்பதமுத்திமுறையிற்சார்வோ
ரூடுறுபோகந்துய்ப்பரொன்றற்கொன்றதிகமாக. (உசா)

புண்ணியந்தீர்ந்தபின்புபூமியின்விரைந்துமேன்மை
நண்ணியகுலத்துத்தோற்றநண்ணுவரதனுலென்றுங்
கண்ணியபிறப்பிறப்புக்கழிதலின்மீற்றுரைத்த
தண்ணியமுத்தியொன்றேசாற்றரும்பெருமைத்தம்மா. (உஎ)

ஆதியீறில்லாததாய்ப்பேரானந்தசொரூபமேயாய்ச்
சேதவுட்டணமிலாதாய்ச்சித்தமாதிகட்கெட்டாதாய்க்
கோதுறுதுன்பமின்பங்கூடனீங்குதலில்லாதா
யோதுதலித்தன்மைத்தென்றறக்கேட்கப்படாததேயாய். (உகூ)

இலக்கணவிலக்கியங்களியைவாசகவாச்சியங்கள்
விலக்கொடுவிதிகண்மற்றும்விரித்திடுதுவந்துவங்கள்
கலக்குதலென்றுமின்றாய்க்கவின்பெறவிளங்காநிற்கு
மலக்குறும்பகன்மெய்ஞ்ஞானிமாத்திரமுறுமீதம்ம. (உகூ)

இலகுநம்மொளிப்பிழம்பேரடிரண்டறக்கலக்குமுத்தித்
திலகமாமிதனைச்சாயுச்சியமெனச்சொலும்வேதாந்தம்
பலவுரைத்திடுவதென்னிப்பண்பார்முத்திக்குமேலோர்
வலனுறுமுத்தியில்லைமாதவமனத்துக்கோடி. (௩௦)

இத்தகுமுத்திவேறுயாம்வேறென்றெண்ணங்கொள்ளே
லுத்தமமறையபேதமுரைத்திடுமஃதேயுண்மை
சித்தமாசகன்றுநம்பொற்றிருவடிவழிபாடாற்றிச்
சத்தறிவுதயமாகச்சன்மார்க்கநெறியினின்று. (௩௧)

விரியுடலூழ்துய்த்தாகாமியமுறுதொழித்தெவர்க்குந்
திரிசியமாம்பவஞ்சந்தேய்ந்தசொப்பனம்போற்றோன்ற
வரியவெம்பால்விழித்தோரொருவனேசீவன்முத்தன்
றுரியமேல்விளங்குநம்மைத்தோய்ந்தவனவனென்றோர்தி. (௩௨)

பன்னுநம்முண்மைதேரான்பளகறத்தேர்ந்தான்போல
மன்னுறவுரைப்போன்ஞானவஞ்சகமூடனவா
னுன்னுவேதாந்தத்தாலுமுணர்த்துதற்கரியதாமித்
துன்னுபேரின்பமுத்திசொரூபத்தைமவுனமாகி. (௩௩)

பாங்குறநின்சுவானுபவத்தினுலுணர்ந்துகோடி
மாங்குயிற்குதலைச்செவ்வாய்மாமகண்பனுளவென்றான்
றேங்குறக்கேட்டமாயோன்றேவதேவன்றாள்போற்றி
நீங்குதலில்லாவின்பநிறைகடலழுந்தினனே. (௩௪)

பவப்பெருங்கோடைநீங்கிப்பரமன்றாணிழலில்வைக
நிலப்புறுகாதலோடுநெடும்பகல்வருந்திச்செய்யுந்
தவப்பெருங்குணத்தின்மிக்கசாந்தமாமுனிவீர்யாரு
முவப்புறுமுத்தியீதாலுணர்ந்திடுமையமின்றி. (௩௫)

இரண்டாவது

முத்திநிலையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் உ-க்குத் திருவிருத்தம் சுரு.

உ

மூன்றாவது

# முத்தியுறுமுபாயமுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பத்தியின்மாயன்கேட்பப்பராபரன்முக்கண்மூர்த்தி
முத்தியைத்தெரித்தவாறுமொழிந்தனமினியம்மாற்கவ்
வுத்தமனின்பமுத்தியுறுவதற்குபாயஞ்சொற்ற
வித்தகந்தனையும்விள்வாம்விருப்பொடுமுனிவிர்கேண்மின். (க)

காரிருள்கடியுஞ்செங்கேழ்க்கவுத்துவமிலகுமார்ப
னாரியனையமுக்கணமலனையடிவணங்கிச்
சீரியமுத்திசேருமுபாயமுஞ்செப்புகென்ன
வேரியங்கடுக்கைசூடும்வித்தகன்றிருவாய்விள்ளும். (உ)

திரும்மவாளமுத்திசேர்தரத்தகுமுபாயம்
வெருவின்மெய்ஞ்ஞானமன்றிவேறிலையந்தஞான
மருவுறுமறையினந்தவாக்கியப்பொருட்டிடத்தாற்
பொருவறுமனனேவிருத்திபூத்தபின்பொலிந்துதோன்றும். (௩)

அத்தகுஞானந்தானேயவிருநஞ்சொரூபமாகு
மொத்தவத்தகுஞானத்தாலுயிர்களுக்குளவஞ்ஞானஞ்
செத்திடுமஃதிறக்கத்தீர்தருந்துவிதபாவ
முத்தமமிகுமத்தீர்விலொழிதரும்பிராந்தியாவும். (௪)

ஏற்றவவ்வொழிவினுண்டாமிராகாதிகுணநசித்தல்
சாற்றியகுணநசிக்கத்தருமாதருமநசிக்கும்
போற்றியவவைதீர்காலைப்பொறிபுலனெலாநசிக்குந்
தேற்றமப்பொழுதேயுண்டாஞ்சிறந்தகேவலந்தான்மாதோ. (௫)

பழுதையென்றுணரச்சற்பப்பிராந்திபோம்பரிசுபோல
வழுவறுவான்மஞானம்வாய்த்திடப்பாசமாறுந்
தழுவுறத்தக்கவான்மதத்துவஞானத்தாலே
கழுவுமஞ்ஞானமூலகச்சமுசாரநாசம். (௬)

தண்டத்தைநோக்கியீதுசற்பமென்றிடுபிராந்தி
தண்டஞானத்தாற்றீரிற்றகவிதுவென்றவொன்றே
தண்டமானதுபோலாரோபிதமானசமுசாரிக்குத்
தண்டழையுணர்ச்சியாலேதத்துவம்பிரமமாகும். (எ)

தங்குறுபோகந்துய்ப்பேந்தடையறப்பலவுஞ்செய்வே
மெங்குமாம்பரசிவம்வேறியாம்வே றென்றெண லஞ்ஞானம்
பங்கமாரிதனுற்றீயபாசம்போகாதென்ருேர்தி
சங்கசக்கரங்களேந்துஞ்சலசநற்கரத்துமாலே. (அ)

துலங்கிடுகருமமுத்திசுவர்க்கம்போனசிக்குமேனு
நலங்கொளக்கருமந்தானேஞானசாதகமாமந்த
வலங்குகன்மமுமிரண்டாமாந்தரம்பாகியமென்
றிலங்குறுமவற்றுண்முன்னதியையடீனுகருமமாமால். (கூ)

மாசில்பாகியமிரண்டுவகைப்படுங்காயிகஞ்சீர்
வாசிகமென்னவேவன்வயங்குசும்முண்மைதேர்ந்து
பேசிடுதுணிவிற்பேராமானதகருமஞ்செய்வான்
றேசினின்றகலாவன்றன்சிவனுவனுண்மைஞானம். (க0)

(மேற்படிவேறு.)

எவனொருவன் மூவருமேத்தெமையுளத்திற் றியானிக்குமியல் பூண்டா, னவனுமடைகுவனுண்மை ஞானத்தை மலினமுளத்தமைந்தானுகிற், றவமலிநஞ்சாரூபமடைந்து போகங்கடடையறநுகர்ந்தே, யுவமையின் மெய்ஞ்ஞானமு மீற்றெம்மருளாலுற்றுறுவனுயர்ந்தமுத்தி. (கக)

குணமூர்த்திகளுட்சிறந்த வுருத்திரமூர்த்தியை யன்புகூரப்போற்றுந், தணவாதசீர்த்தியினு னுருத்திரசாரூபமுற்றுத் தயங்காநிற்கு, மணமார்மெய்ஞ்ஞானத்தைக் கிரமத்தினுணர்ந்து முத்திமருவாநிற்பன், பணமாரும்பாப்பணேமேற் பாற்கடலிற் பள்ளிகொள்ளும் பச்சைமாலே. (கஉ)

மொழியுமுருத்திரன் பரமமூர்த்தியை யத்தியந்த பரமூர்த்திதன்னை, வழிபடுவோர் சாமீபஞ் சாலோகமுறையடைந்து வயங்குசித்தப், பழியில்பரிபாகத்துக்கேற்ப முறைமையி னுயர்ந்துபதிவார் முத்தி, யிழிமலினவுளரே னின்னுலகாதியடைந்து நுகர்ந்திருநீர் வைப்பில். (கஙு)

சிவமறையோர் குலத்துதித்து ஞானத்தாலின்பமுத்தி சிவனுவாரா, லவமறநின்னடிப் பூசைசெய்தோ னின்சாரூபமடைந்துபின்னர்ச், தவமலிநஞ் சாமீபமடைந்து பலநாள்களின்பின் றண்மைஞான, முவமையறப்பெற் றெமதுபொன்னடியிற் கலப்புறுவானுவந்துமாலே. (கச)

தெளிவின்மனத்தவனே னின்சாலோகமுதன் மூன்றிற்சேர் வாரொன்றை, யளிமிகுநின்னுடைப் பரமமூர்த்தியை யத்தியந்தபரமூர்த்திதன்னைக், களிமிகப்போற்றுவர்முறைநின் சாமீபஞ்சாலோகங்கலந்துபின்ன, ரொளிமருவ முறையுயர்ந்து பன்னுட்பி னெம்மடியை யுறுவர்மாதோ. (கரு)

விரவுமனத்தழுக்க ரயனுலகாதியடைந்து புவிமேவுவார்கள், பரவுபிரமனைத் தொழுவோனவனது சாருபமுறும்பாகசித்த, வுர வினனேன் முறையேயின் சாமீபமெம்முடைச் சாலோகமுற்றுக், கரவிலனாய்முறையுயர்ந்து பன்னாட்பின்ஞானமுற்றுக் கலப்பான் முத்தி. (கசு)

அழுக்ககலாவுளத்தினனே லயனுலக போகநுகர்ந்தவனியின் கண், வழுக்ககனற் குலத்துதித்து முன்பழக்கத் தாலவற்கே வாஞ் சைவைப்ப, னிழுக்கிலவனிருவகை மூர்த்தியை முறையிற்றொழு வோருள்ளினியாராயின், முழுக்கவவன் சாமீபஞ் சாலோகமடைவர் முறையுயர்வார்பின்னர். (கஎ)

தோற்றுமனமலினரெனிலவ்வுலகநின்றவனிதோன்றுவாராற்
சாற்றுபிறதேவர்களைவணங்கினவ்வத்தேவர்கடந்தகுதிக்கேற்பப்
போற்றுறுசாலோகமுதலடைந்துமுறைநற்கருமம்புரிந்துயர்ந்து
மாற்றரியவினைகடிந்துபன்னாட்பினெம்மருளால்வதிவார்முத்தி (கஅ)

சித்தமலினத்தினரேற்சிலபோக நுகர்ந்தவனிசெறியாநிற்பா, ரொத்தவொரு மூர்த்தியை நம்பாவனைசெய் தனுட்டிப்போனுளத் தினேனுங்குஞ், சுத்தமதற்கேற்புற நம்பதமடைந்து முறையுயர்ந்து தூயஞான, வித்தகனாய்ச்சின்னாளி னமதருளாலின்பமுத்தி மேவு வானே. (கக)

புறக்கருமம்புரிவோன் பற்பல காலங்கழித்துயர்ந்து புகுவான் முத்தி, சிறக்குமகக்கருமத்தோன் விரைந்தடைவன் புறக்கருமத்தி னுஞ்சீர்சான்று, விறக்குமகக்கருமத்தின்மிகமகிழ்வம்யாமடவார்விரு ப்பிற்செய்யு, நிறக்குமகக் கருமத்தான் மணவாளர் நனிமகிழ்தனிகர் ப்பமாலே. (உ0)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பிரணவந்தினம் பன்னிராயிரமெண்ணினும் பிரணவத்தோடு மைந் தெழுத்தைக், கரணவொற்றுமையி னத்தொகை தினமுங்கணிக்கி னுஞ்சதவுருத்திரிய, மரணுறத்தினமுஞ்செபிக்கினு மரணவந்தத்தின் ஞானமுற்றுயர்நஞ், சரணபங்கயத்தி னொன்றலாமீது தகுபரிசுத்த ருக்கேயாம். (உக)

இன்னுநன்முத்தி யெளிதினினடைதற் கேற்றவோருபாயமுண் டஃதும், பன்னுதுங்கேண்மோகாசிமுன்னாயபற்பனந்தலத்துளோர் தலத்துண், மன்னுபுவாசஞ் செய்துடல் கழிப்போர்மதிப்பரும் பாவ ராயினுஞ்சீர், துன்னுநம்மடியிற் கலந்துபேரின்பந்துய்ப்பதற் கைய மொன்றின்றே. (உஉ)

(கோச்சகக்கலிப்பா.)

முன்னரொருகற்பத்தின்முழங்குகடற்புவிவரைப்பிற்
பின்னவர்தங்குலத்துதித்தான்பெரும்பாவத்திரண்டனையான்

றன்னமுதல்வினைபுரியாத்தன்மையன்வன்மையனெவரு
முன்னருங்கோலாகலனென்றொருபெயர்பூண்டவனொருவன். (௨௩)

கழிகாமமுடையவனுக்கன்றியிரவும்பகலு
மொழியாதுபழிபாவமுறுமெனவுநோக்காது
மொழியாசைப்படிமுறையுமுனிந்துபலமாதரையு
மிழிவானமகளிரையுமின்புறத்தோய்ந்துளமகிழ்வான். (௨௪)

துயிலுணர்ந்துசிலமாதர்தோள்புணர்ந்துமிகுவலியா
லயினயனச்சிலமாதரகலல்குற்றுறைபடிந்தும்
பயிலுருமாறுபுசிலபொற்பைந்தொடியார்கற்பழித்து
மயிலனையார்சிலரைவசமாக்கிமருவியுமகிழ்வான். (௨௫)

சுற்றமெல்லாநனிவெறுப்பத்துணிந்திவ்வாறுழிதருவோ
னுற்றவொருதினம்புணர்ச்சிக்கோடியோடித்திரிந்து
மிற்றவெழின்மாதர்களுமெய்தாமையாற்காம
முற்றிடத்தன்மனைபுகுந்துமூர்ச்சித்துவீழ்ந்தனனால். (௨௬)

படுத்திடுவானெழுந்திருப்பான்படர்பெருங்காலெனமூச்சு
விடுத்திடுவான்முன்புணர்ந்தமெல்லியலார்தமைநினைப்பா
னெடுத்திடுசெங்கழைச்சிலைவேளெய்கணையைத்தடுத்திடுமா
றடுத்திடுவாரிலரேயென்றுவிபுழுங்குவனழிவான். (௨௭)

மாறாதுகொடுங்காமமண்டுதழல்கொழுந்துவிடச்
சாறுரவுண்டவன்போற்றடையின்றிவிரைந்தெழுந்து
பேறுகத்தனைவருந்திப்பெற்றதாய்படுத்திருந்த
வேறுமோரிடத்தணைந்தான்வெவ்வினைக்கஞ்சாப்பாவி. (௨௮)

தந்தையுமங்கில்லாமைதான்கண்டுமிகமகிழ்ந்து
சிந்தையினெண்ணியபோகந்தீங்கறத்துய்த்தகமகிழ்ந்தான்
முந்தைவினைவலியின்முயன்றீன்றாளுமுடன்பட்டா
ணிந்தையுமோராண்மறைத்தானெறியின்மகனொழுக்கத்தை. (௨௯)

கொடும்பாவிதாய்போகங்கொளுந்தோறுறுகாமைக்
கடும்பாருமழுதிரங்கக்கடிந்தொழித்தான்றந்தையையுங்
கெடும்பாணுமிங்கிருப்பிற்கேடுவருமென்றவ்வூர்
விடும்பாலனுயன்னையொடும்வேற்றூர்செலவெழுந்தான். (௩௦)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

காதாரணியங்கதமாக்குங்காமர்நமதூதல்மாகி
மாதாரணியந்தாஞ்சுவர்க்கம்வாழ்த்தவேண்டும்வரமளித்துப்
போதாரணியந்தளிர்ச்சோலைபுடைசூழ்ந்தோங்கப்பொலிகின்ற
வேதாரணியந்தனையடைந்தான்விளைமுற்பவத்துநல்வினையால். (௩௧)

(கொச்சகக்கலிப்பா.)

அன்னையொடுமத்தலத்திலமர்ந்துசிலநாட்கழிந்த
பின்னையிறந்தனன்வதிவுற்றிறந்தபெரும்பேற்றாலே
முன்னைவினையொடுபாவமுற்றொழியக்கதியுலகந்
தன்னையடைந்தனனமதுதண்ணளியாணெடுமாலே. (௧௨)

ஆதலினாற்பெருமுத்தியடையவிரும்பினர்யாரு
மேதகுநங்கலத்துறையவிரும்புவதுத்தமமாகு
மாதயையிறுனினக்குவகுத்தனமற்றுணர்ந்திடுதி
சீதரனேயென்றுதிருவாய்மலர்ந்தான்சிவபெருமான். (௧௩)

கேட்டதிருமறுமார்பன்கிளரன்புமீக்கூரத்
தாட்டுணைகள்பணிந்தெழுந்துதகச்சூழ்ந்துமுன்னின்று
பாட்டளிகளுழுமதலைப்படலைமார்பனையடைந்தா
ரேட்டைகண்முற்றொழித்தளிக்குமிறையவனைத்துதிக்கின்றான். ()

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வேதமுடியினடிப்பவனீவேதமளந்தற்கரியவனீ
போதமளிக்கும்புண்ணியனீபோதங்கடந்தபொருளுநீ
யேதமகலவெவ்வுயிர்க்குமின்பமளிக்குமிறையவனீ
நாதமுடியின்வீற்றிருக்குநம்பாவுன்னையறிபவரார். (௧௫)

எல்லாவுலகும்படைப்போனீயெல்லாவுலகுமளிப்போனீ
யெல்லாவுலகுந்துடைப்போனீயெல்லாவுயிர்க்குமருள்வோனீ
யெல்லாவுயிருக்குயிருநீயெல்லாவுயிர்க்குமின்பநீ
யெல்லாம்வல்லகடவுணீயிறைவாவுன்னையறிபவரார். (௧௬)

விரவியெங்குநிறைந்துறைவாய்விகாரஞ்சிறிதுமிலையாவாய்
கரவிறொழிலைந்தியற்றிடுவாய்காணிற்றொழிலொன்றேனுமிலாய்
பரவுமுமையோர்கூறுடையாய்பந்தமெவர்க்கும்பாற்றிடுவா
யரவுமதியும்விரவுசடையமலாநின்னையறிபவரார். (௧௭)

முத்தேவருக்குமருள்புரியுமுதல்வனீயேமற்றுமுள
வெத்தேவருக்கும்வரங்கொடுக்குமிறைவனீயேயுனையன்றிப்
பித்தேகொண்டுதிரிவோரும்பேசார்வேறுண்டொருவனென
வித்தேவித்தொன்றில்லாதவிளைவேநின்னையறிபவரார். (௧௮)

மின்னைப்பொருவுசெஞ்சடிலவிமலாநின்றாட்கன்புடைய
வென்னைப்பரமென்றுழல்வாருமெழிற்செங்கமலத்திருக்குமயன்
றன்னைப்பரமென்றுழல்வாருந்தாமேபரமென்றுழல்வாரும்
பொன்னைப்பொருவுநின்னுண்மைபோற்றிச்சிறிதுமுணராரே. (௧௯)

என்றுதுதித்துள்ளுருகவிழிபிறைப்பனீர்செங்கரங்குவித்துக்
கன்றுகுணிலாக்கொண்டுவிளங்கனியையெறிந்தகார்வண்ண
னன்றுமறைக்காட்டின்பெருமைகவிலவேண்டுமென்றிரப்பக்
குன்றுசிலையாக்குழைத்தகரக்குழகன்றிருவாய்மலர்கின்றான். (சo)

## (மேற்படிவேறு.)

கிளரொளிமிகுவன்மீகக்ஷேத்திரந்தனக்குத்தென்பால்
வளர்திரைக்கடற்றீரத்துவானவர்முதல்யாவர்க்கும்
பளகறுவரங்கணால்கும்பண்பொடுமருவிலைகுந்
தளர்வறுதிருமறைக்காடெனுந்திருத்தலமாயோனே. (சக)

விரும்பியம்பரமுநாளும்விரிதருதிரைக்கரங்கொண்
டிரும்புறக்கவைத்தாலன்னவிருங்கருங்கோட்டுப்புன்னை
யரும்பவிழ்மலர்வெண்முத்தமம்பவளங்கடுவி
வரும்பலோர்களும்வியப்பவழிபடுமத்தலத்தை. (சஉ)

நிகரறுமத்தலத்தைநெடும்பிரளயமாநீத்த
முகனுறவகவிடம்புக்கொருசிதைவேனுஞ்செய்யா
திகலுறச்சூழ்ந்துநிற்குமிவ்வாறென்றியாருங்காணப்
புகரறத்தெரித்தல்போலப்புன்னையங்கானல்சூழும். (சங)

கருநிறப்புன்னைதோறுங்காமர்வெள்ளன்னந்துஞ்ச
விருணிறமுகிலிற்றுஞ்சுமெழில்வளர்மதியமேய்க்கு
மருகுறுகடலினின்றுமணைந்தசெம்பவளவல்லி
பெருகுறத்தோன்றுமின்னும்பிழம்பினைநிகர்க்குமாதோ. (சச)

முனிவரர்வேள்விச்சாலைமுனிவறுமன்னசாலை
புனிதவந்தணச்சிறுர்கள்புகழ்மறையோதுசாலை
கனிவுறுநடனசாலைகரைபிறகல்விச்சாலை
யினிதுறவெங்குமல்குமிணர்த்துழாய்ப்படலைமாலே. (சரு)

பரிவாரமனைத்துஞ்சூழப்பகர்ந்தவத்தலத்தில்யாமிப்
புரிவார்மென்குழலாளோடும்பொலிந்திருக்கின்றேமுன்னோர்
விரிவாயபிரளயத்தில்விண்ணுலகாதியாவுஞ்
சரிவாகியிலயமாகச்சந்தமார்மறைகள்யாவும். (சசு)

அத்தலத்திருக்குநம்மெய்யடைந்திருந்தனவான்மீட்டு
மொத்தகற்பாதியிற்சீருற்றநம்மெய்யினின்றும்
வித்தகவுருவங்கொண்டுவெளிக்கொடுபத்தியோடு
சுத்தநீர்த்தீர்த்தமொன்றுதொட்டனகடற்றீரத்தில். (சஎ)

அதன்பெயர்வேததீர்த்தமகலம்யோசனையோர்காலாம்
விதந்தவற்றிரட்டிநீளமேவுமத்தீர்த்தந்தன்னிற்

சதங்கடியாதிவாரஞ்சுடர்பருவத்தின்மூழ்கி
யிதம்பெறவெம்மைப்பூசித்தினிதருள்பெற்றமாதோ. (சஅ)

தீப்பொறிதும்மும்வெள்வேற்சேவலங்கொடிக்கைச்செவ்வே
டேப்பொலியனையதீர்த்தந்துளைந்தாங்குறியும்பூசித்
தேப்பொலிசிலைக்கைத்தாரகாசுரனென்பாற்செற்று
மாப்பொழிலுயிர்களெல்லாமகிழ்வுறவருளினானே. (சகூ)

இன்னுமத்தலத்தினம்மையின்புறப்பூசையாற்றி
மன்னுநாரதன்சனற்குமாரன்பான்ஞானம்பெற்றா
னன்னுழையாதவுள்ளத்தாக்கியவர்க்கியன்றான்
பன்னுபருவம்பூசித்துப்பரவுறும்யோகிபானான். (ருO)

கார்க்கியன்மயித்திரேயன்கனிவொடுபூசையாற்றி
யாக்கியவர்க்கியன்பாலடைந்துநல்யோகமுற்றார்
மாக்கிளர்சுவேதகேதுவழுத்தித்தன்றந்தையின்ப
நோக்குமுத்தாலகன்கணுவலருஞானமுற்றான். (ருக)

வருணன்மெய்யன்பிற்பூசைவயங்குநம்மடிக்கியற்றி
யருணனிசுரந்தியாநல்கவடைந்தனனுண்மைஞானம்
பொருணலத்தவன்றன்மைந்தன்புகழ்மிருபிருகுபோற்றி
மருணவையறுத்தோனுயவ்வருணனாற்பெற்றான்ஞானம். (ருஉ)

திரிசங்குபூசையாற்றித்திருவருண்ஞானம்பெற்றா
னரியவத்தலத்தினின்னுமனேகம்பேர்பூசையாற்றி
யுரியமெய்ஞ்ஞானம்போகமுற்றனரிவரெல்லோரும்
விரிமலர்வேததீர்த்தமெய்யன்பின்மூழ்கினோரே. (ருங)

பருவமாதிரைநாள்பானுவாரநல்விதிபாதஞ்சேர்
மருவுமுத்தராயணந்தக்கணாயனமதியைச்செங்கே
ழுருவுடைக்கதிரைப்பாந்தளுறத்தீண்டுநாளிந்நாள்கள்
பொருவிலத்தீர்த்தநண்ணிப்புகராறுவிதியின்மூழ்கி. (ருச)

நம்மையும்பூசையாற்றிநம்மடிகலந்தவன்பர்
தம்மையுந்தொழுதன்னார்க்குத்தக்கதானமுநன்கீந்து
செம்மையினுபவாசஞ்சேர்திருந்துறச்செய்தபேர்கள்
வெம்மைகொள்பிரமகத்திவினைமுதல்யாவுந்தீர்வார். (ருரு)

உற்றபூதானஞ்செய்தோருருத்திரலோகஞ்சேர்வர்
மற்றனதானியத்தைவழங்கினோர்தனதனேர்வர்
பொற்றநலன்னதானம்புரிந்தவர்நோயில்லாதார்
பற்றிடுதிலங்கொடுத்தோர்பாதகமனைத்துந்தீர்வர். (ருசு)

கன்னிகாதானஞ்செய்தோர்கயல்பிறழ்கருங்கட்செவ்வாய்
மின்னிடையுமைசாமீபம்விளங்குறப்பெற்றுவாழ்வர்
நன்னிறக்கலைகளாதிநல்குவோர்பன்னாள்விண்ணின்
மன்னியின்போகம்பெற்றுவானவர்கோனில்வாழ்வார். (௫௭)

தேவர்கள்பரவுந்தெய்வத்திருமறைக்காட்டில்வாச
மேவரச்செய்துதேகம்விட்டவராறத்தாரேனும்
பாவர்களேனுமுத்திபடர்வதற்கையமின்றாற்
றூவருமன்புபூண்டதாமரைச்செங்கண்மாலே. (௫௮)

நிலவுவண்புகழாயென்றுநெரிசுரிநறும்பூங்கூந்தற்
கலவமாமயிலோர்பாகன்கருணையாலருளிச்செய்த
பலவுமாங்கினிதுகேட்டுப்பற்றினனுளத்தென்றொன்று
மூலவுறுமகிழ்ச்சிபூத்தானுலகெலாமுண்டமாயன். (௫௯)

நற்றவத்தூக்கம்வாய்ந்துநானெனதென்பதற்றுச்
செற்றவைம்பொறியுஞ்சாந்தச்சிந்தையும்பெற்றுநின்ற
பொற்றவந்தணிர்காண்முத்திபுகுவதற்குபாயந்தன்னை
யற்றமோர்சிறிதுமின்றியகத்துறவுணர்ந்துகொண்மின். (௬0)

மூன்றாவது

முத்தியுறுமுபாய முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௩-க்குத் திருவிருத்தம் ௱௨௩.

உ

நான்காவது

# மோசகனை யுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

முன்னவன்கொன்றைசூடுமுதலவன்மொழிச்செய்யாண்
மன்னவன்றனக்குமுத்திமருவுறத்தகுமுபாயம்
பன்னியவகைசொற்றாமப்பரனம்மாறனக்கூமுத்தி
மன்னியவளிப்போனின்னனெனத்தெரித்ததும்வகுப்பாம். (௧)

தடவரைகுடையாக்கொண்டதாமரைத்தடங்கண்மாயன்
வடவரைவில்லிபாதம்வணங்கிமோசகனைப்புற்றோற்
படவரையரவசைத்தபரம்பரதெரித்தியென்ன
மடவரையணுகாத்தூயவானவன்வகுக்குமாலோ. (௨)

அகரமுன்றனைம்பத்தோரக்கரசொரூபமாகிப்
புகரறுபதுமஞானபுத்தகமணிவடந்தன்
னிகரில்குண்டிகைகைத்தாங்கிநிலாக்கதிர்மேனிவீசத்
தகர்தலில்சிதாம்புயத்துத்தனித்துறைபனுவலாட்டி. (௩)

மிகுதவமாற்றியீதுவினவினன்முன்னரெம்பாற்
றகுமனக்கருத்துநோக்கிச்சாற்றினம்யாமுமன்பு
புகுமனமுடையையாகிப்புகரறவினாவுமாற்று
னகுமலர்த்துளவத்தாரோய்நவிலுதுநயந்துகேட்டி. (௪)

(மேற்படிவேறு.)

பிரமன்முதற்றுபரமளவும்பேசுமறைகள்பசுக்களெனப்
பரவலுறுமப்பசுக்களுக்குப்பதியாய்விளங்குந்தன்மையினு
லுரவுமிகுயாம்பசுபதியென்றொருபேர்பூண்டேமோடரிக்க
ணரவுகடுக்கும்பேரல்குலரிவையமருமணிமார்பா. (௫)

அனாதியுள்ளகருமத்துக்கமையப்பசுக்களைவைக்குமுடன்
மனாதிபுவனம்போகமிருமாயைகளையுங்கொண்டளித்துப்
பினாதியந்தமில்லாயாம்பேறும்பரிபாகத்துயிர்க்குப்
பனாதியனாதிபந்தமெலாம்பாற்றிமுத்தியளித்திடுவோம். (௬)

பந்தமளிக்குங்கடவுளுநான்பந்தமனைத்தும்பாறிடச்செய்
தந்தமில்லாவின்பமுத்தியடையவளிக்குமுதலும்யான்
சந்தமறையின்பெருமுடிவுஞ்சகலவுயிர்க்குமுத்தியருண்
முந்துமருளான்சிவனென்றேமொழியுமதனாலுந்தெளிதி. (௭)

எல்லாப்பிரமாணங்களுக்குமியைமுக்கியமாய்ப்பிரமாணம்
வல்லாருரைக்கும்வேதமேமற்றையதற்குத்தன்னாலும்
புல்லாநிற்கும்பிறவாலும்பொருந்துவாதைசற்றுமிலை
யல்லாப்பிரத்தியக்கமுதலானபிரமாணங்களுக்கு. (௮)

ஒழியாமாயையால்வாதையுண்டுமறைக்குவிரோதமுறு
மொழியார்தருநற்புராணங்கண்முற்றும்பிரமாணங்களே
கழியாமறைமூலகமாகாக்கசட்டுநூல்கள்யாவுமிகு
பழியார்நூல்கள்பிரமாணப்படாதுபடிமுற்றளந்தோயே. (௯)

மறைமூலகமாகாதலகின்மருவுபாஞ்சராத்திரநூற்
றுறைபோமவர்கள்யாரேனுந்தொலையாப்பாவத்துறைசென்றோர்
கறையார்மலினசித்தரேகைக்கொள்வார்களந்நூலை
யறைகோடிகற்பமாயிடினுமன்னோர்முத்தியடைவரிதே. (௧௦)

மயலார்தருகற்பனையாகிவந்தவதினெவ்விடத்தேனு
மியலார்மறைக்குவிரோதமுறுதிருக்குமாகிலதனையுணர்ந்

துயலார்தருமாதமுவினூழிபல்சென்றதன்பின்னர்
புயலார்மேனிக்காகுத்தாபொலிநம்பாதம்பொருந்துவரோ. (கக)

நெடியவரையிட்டார்கலியைநீந்திக்கரையேறுதல்போலாங்
கொடியபாஞ்சராத்திரநூல்கொண்டுபாசக்கடனீந்திப்
படியின்முத்தியடைவஃதிப்படியேயுள்ளநூலனைத்துங்
கடியப்படுவபிரமாணமாகாகமலக்கண்ணனே. (கஉ)

(மேற்படிவேறு.)

வைதிககருமத்தார்க்குமருவுவன்விரைவின்ஞான
மெய்தியமுயலுவோருக்கெய்துவன்மிகவிரைந்து
மெய்திகழ்ஞானிகட்குள்விளங்கொளியாயேநிற்பன்
மொய்திகழ்திகிரியேந்துமுளரியந்தடக்கைமாலே. (கங)

பொருவறுவிமலமாகிப்பூரணானந்தமாகி
மருவுநிட்களமேயாகிவரவுபோக்கிறந்ததாகிச்
சுருதியந்தமுமெட்டாதசுடரொளியாகிநிற்கு
மொருமுழுமுதல்யாமேயெவ்வுயிருக்குமுத்தியீவோம். (கச)

மேயவெம்மடிக்கெஞ்ஞான்றும்வில்குருவன்பூண்ட
தூயரிற்சிறந்தநீர்மைத்தொண்டனுநினக்கியாமன்பா
ஞயவிவ்வுண்மைசொற்றுமறிதியென்றறைந்தானம்மான்
மாயவன்மகிழ்ச்சிபூப்பவணங்கினன்றுதிக்கலுற்றான். (கரு)

(மேற்படிவேறு.)

நிருமலமாய்நிட்களமாய்நிரஞ்சனமாய்நிராமயமாய் நிருவிகார, மருவியதாய்நித்தியமாயொளிக்கொளியா யளிக்களியாய்மனவாக்கெட்டா, வருவமுமாயுருவமுமாயருவுருவுமாயெங்குமமராநிற்கும், பெருகுபரமானந்தப்பரஞ்சுடர்நின்பெரும்புகழேபேசலுற்றேன். (கசு)

சத்தாகிச்சித்தாகிச்சதசத்தின்றுயரனைத்துந்தவிர்ப்பதாகி
வித்தாகிவித்தின்றிவிளைபொருளுமாகியொளிமேயஞானக்
கொத்தாகிக்குறிகுணமில்லதுவாகியன்பருளங்கொள்ளுந்தூய
முத்தாகிமணியாகிவிளங்குபரசிவநினையேமுன்னுநின்றேன். (கஎ)

சத்தியமாய்த்தண்ணளியாய்த்தற்பரமாயேகமாய்ச்சாந்தமாகி
நித்தியமாயாணவமிலறிவுருவாயறிவருநிட்களமாயுண்மைப்
பத்தியினூர்தருசுடராய்ப்பலவுயிர்க்கும்புத்தியொடுபேளகிலாத
முத்தியுதவ்கிடுமுதலாய்நின்றசதாசிவநினையேமுன்னுநின்றேன். ()

சகலகேவலமிலதாய்த்தத்துவாதீதமாய்த்தானேதானாய்ப்
புகலவடங்காததாயுணர்வரிதாயதிரிசியப்பொருளாய்ஞானப்

பகலவனாய்ப்பகலவனிற்படரொளியாய்ப் பல்லுயிர்க்கும்பரமானந்த
விகலறுமுத்தியுமாய்நின்றிடுமிறைவனதாள்களைத்தாநின்றேன்.()

ஆதியாயனாதியாயாதியந்தமில்லாதாயளவைக்கெட்டா
நீதியாய்ப்பரப்பிரமமாய்த்துரியாதீதத்துநிலையாநிற்குஞ்
சோதியாயையைந்தாக்கப்பாலாயுத்தமமாய்ச்சுரும்பார்கூந்தற்
பாதியாய்முற்றுமாய்நின்றபரசிவனடிபணியாநின்றேன். (௨0)

(மேற்படிவேறு.)

என்றுதுதித்துமணிமார்பனைதிரின்மகிழ்ச்சிக்கடல்படிந்தா
னன்றுமுத்திபல்லுயிர்க்குநல்குங்கடவுளின்னனென
வொன்றுதவத்துமாமுனிவீருணர்ந்துகொண்மினின்னுமரு
டுன்றுமொருகாதையினனுந்துணியுமாசொல்லுதுங்கேண்மின்.(௨௧)

முன்னைநாளிலொருமறையோன்முனிவிலொழுக்கநனிபூண்டோன்
றன்னைநிகரவரியகுணசாந்தன்றவமேதகுவுளத்த
னென்னையிந்தச்சகத்தியல்பென்றிகழ்ந்துபிறப்போடிறப்பொழிக்கு
மன்னையடைந்துமுத்தியிடைவதிவாமென்னுங்கருத்தினனாய்.(௨௨)

திருகுபுரிகோட்டயமுகைக்குந்தேவேதென்கீழ்த்திசையிறையே
பெருகுவிருப்பின்யாவர்களும்பேணுஞ்சுடரோநினையடைந்தேன்
கருகுபாசப்பிணிப்பொழித்துக்காசிலின்பமருளென்று
னருகுதழல்வந்ததுநல்கவல்லேலன்யாமென்றுரைத்தொழிந்தான்.()

ஒற்றையாழித்தேரருமொளியேயுயிர்கள்விழியேயற்
பற்றையறுக்கும்பெருஞ்சுடரேபத்திமையினினடிதொழுதேன்
பொற்றையனையவினைமுழுதும்போக்கிமுத்தியருளென்றான்
கற்றைக்கதிரும்வந்தழலோனகரைந்தாங்குரைத்துக்கழிந்தனனால்.

மலரினுறையுஞ்செழுந்தேனேமாறாவின்பப்பெருவாழ்வே
பலர்சொலொருநான்முகத்தேவேபண்பினினைச்சரணடைந்தேன்
கலர்கொள்பிறப்போடிறப்பொழியக்காமர்முத்தியருளென்று
னலர்சிரவனுந்தோன்றியினனறைந்தாங்கறைந்துமறைந்தனனால்.

இனியென்செய்வதெனவருந்தியேங்காநின்றவுளத்தினனாய்த்
தனிதமழைநேர்திருமேனிச்சார்ங்கபாணிசரணடையிற்
புனிதமுறுநற்பேரின்பம்பொருந்துமென்றுதுணிந்தானைக்
கனியுமன்பினவன்மலர்த்தாள்கருத்தினிருத்தித்துதிக்கின்றான் (௨௬)

கொந்தாரளகத்திருமங்கைகுடிகொண்டுறையுமணிமார்பா
நந்தாதுலகமுழுதளிக்குநாயகாநான்மறைப்பொருளே
சந்தார்புயத்துப்பொன்னாடைதயங்கப்புனையும்பேரழகா
செந்தாமரைக்கட்டிருமாலேதேவாநினைச்சரணடைந்தேன்.(௨௭)

காமம்புனையுங்கலருணராய்காயாம்பூவைநிகர்நிறத்தாய்
தாமம்புனையுங்குழற்றிருமான்றுணைக்கைத்துணைத்தாண்மலர்வருட
நீமம்புனையும்பணிப்பாயணிலவத்துயில்வோய்நறுந்துளவத்
தாமம்புனையும்புயப்புருடோத்தமனேநின்னைச்சரணடைந்தேன். ()

அவனிமுழுதுமோரடிக்குளடங்கவளர்ந்துகொண்டவனே
யவனிமுழுதும்விரும்புமுன்னகட்டினுறவுண்டுமிழ்ந்தவனே
யவனிமுழுதும்வராகவுருவாகிக்கோட்டுநுதியமைத்தா
யவனிமகடன்மணவாளாவடியேனின்னைத்தொழுகின்றேன். (உகூ)

பேராயிரமதுடையானேபீதாம்பரனேபெருமானே
யாராய்வாருள்ளகத்தமுதேயலர்செம்பவளத்திருவாயா
கூரார்திகிரிப்படையாளிகொண்டல்வண்ணாகோபாலா
நாராயணனேயுனைத்தொழுதேனலமார்முத்தியருள்வாயே. (௩0)

என்றுதுதிப்பத்திருநெடுமாலெதிரேதோன்றியென்செய்தாய்
சொன்றியளிக்குந்தகுதியர்பாற்சுரருண்விரும்புவாருளரோ
நன்றுமுத்திவிரும்பினையேனம்மால்வணங்கப்படுங்கடவுள்
குன்றுகுழைத்துப்புரம்பொடித்தகுழகன்சரணமடையென்றான். ()

கேட்டமறையோனென்செய்வான்கிளரவிசாரித்தறியாத
வோட்டைமனத்தெங்குற்றமலாலொருவர்மேற்குற்றமுமுண்டோ
வேட்டையொழிப்பாரல்லரிவரெம்போற்பசுக்களேயாவர்
வாட்டமகற்றியருள்பரமன்மலர்த்தாளடைவேமெனத்துணிந்து. ()

மதியுநதியுமொளிர்சடையுமந்தகாசமணிவாயும்
பொதியுநீற்றுப்பேரழகும்புலித்தோலுடுத்ததிருவரையுங்
கதிர்செயோகபட்டமுங்கார்க்களமுமுபவீதமுமதியி
னதிகவிம்பவதனமும்பாலனையமேனித்திருநிறமும். (௩௩)

திடமார்ஞானமுத்திரையுஞ்செய்யஞானபுத்தகமு
மிடமார்தருவீராசனமுமிருள்போல்பவன்வெங்கிடத்தாளுந்
தடமார்முனிவர்சேவிப்புந்தயங்கவுலகங்களிதூங்க
வடமார்முதலில்வீற்றிருக்குமறைமாமுதலைச்சரணடைந்தான். (௩௪)

கண்டுவணங்கிமலர்சாந்தங்கமழ்நீராதிகொடுபூசித்
தெண்டங்கியபேரொளிப்பிழம்பேயினையினின்றாளடையாமன்
மண்டுமிரதக்கனியிருக்கவன்காய்கவருமடரேபோற்
பண்டைவினையாற்பிறப்பிறப்பிற்பட்டேயுழலுஞ்சீவர்களை. (௩௫)

பரமென்றெண்ணிவழிபட்டுப்பன்னாள்கழித்தேன்பயனின்றி
விரவவொருமுத்துலையிட்டுவிழலுக்கருநீர்மிகவிறைத்தேன்
பரவுசெம்பொற்கொழுக்கொண்டுபாழ்த்தவரகுக்குழலாமே
யரவுமதியுஞ்சடைக்கணிந்தவடிகேளருளவேண்டுமே. (௩௬)

புதியசெந்தேனவாவுமளிபுண்ணீர் நுகரவவாவுமோ
மதியமணிசெஞ்சடாமோலிவள்ளானினதுபேரின்பக்
கதியையுறுநானவரளிக்குங்கழியும்பதமோவுறக்கடவேன்
முதியமறையின்முடிவதியுமுக்கட்பரனேயெனக்கிரங்காய். (௩௭)

பந்தமெவர்க்குமளிப்போனீபருவநோக்கியஃதொழித்துச்
சந்தமுத்தியளிப்போனீதத்துவாதீதனுநீயே
யெந்தவுயிருநின்னடிமையெந்தப்பொருளுநின்னுடைமை
யந்தமில்லாயடியேனையாராதரிப்பர்நினையன்றி. (௩௮)

என்றுபழிச்சுமறையவனுக்கெம்மான்றிருக்கணோக்கருளித்
தொன்றுமலமுமுயிர்த்திறனுந்தூயதனதுண்மையுமின்ப
மொன்றுகதியுமினிதுணர்த்தவுணர்ந்துஞானமயனேயாய்
நன்றுமுனிவர்துதித்திடவந்நலமாரொளியிற்கலந்தனனால். (௩௯)

ஒளிக்குங்குமமென்கனதனமுமொசியுமிடையுமனநடையுங்
களிக்குங்கயனேர்கண்ணுமுடைக்காமர்மடந்தைபாகன்மதுத்
துளிக்குங்கொன்றைமாலையனேதொகுபலுயிர்க்குமின்பமுத்தி
யளிக்குங்கடவுளென்பதிதனுனுமுணர்மினருந்தவத்தீர். (௪0)

நான்காவது

மோசகனை யுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௪-க்குத் திருவிருத்தம் ௱௬௩.

உ

ஐந்தாவது

## மோசகப்பிரதனதியல்புரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வாசநன்கடுக்கைசூடிமணந்துழாய்மாலையார்க்கு
மோசகற்றெரித்தவாறுமொழிந்தாமோசகனைநல்கும்
பாசமில்குரவன்றன்மைபரனம்மாற்குரைத்தவாறு
நேசமார்தரவுரைப்பாநெடுந்தவமுனிவிர்கேண்மின். (க

சீதரன்சங்கநேமிச்செங்கையன்றிருவைகுந்த
நாதரவுடையனுகியம்புயமலர்த்தாள்போற்றி
மூதறிவாண்மைவல்லமோசகப்பிரதன்றன்மை
நாதனேதெரித்தியென்னநம்பிரான்றிருவாய்விள்ளும். (உ

மின்னுமாமணிப்பூண்மார்பவேதாந்தவிசாரத்தாலே
மன்னுமாஞானசித்திவாய்ந்தவனுகியெங்குந்
தன்னிகரிலானுயெம்மைத்தன்னுளேகண்டுநிற்கு
முன்னுதேசிகனேசெய்யமோசகப்பிரதனென்பான். (௩)

மன்னவர்குலத்துவந்தோன்மொழியுமுத்தமகல்லாசான்
மன்னவர்குலத்துவந்தோன்மத்திமவாசான்மற்றைக்
கொன்னகுமணிப்பூணுய்கர்குலத்துளானதமவாசா
னென்னமுப்பேதமாமுன்னியம்பியகுரவன்பேதம். (௪)

ஒழுக்கமில்பின்னேர்மாதரோருவர்க்குங்குரவுபூணுர்
வழுக்களையதமவாசான்வசியர்க்குமொழுக்கம்பூண்ட
விழுக்குடிச்சூத்திரர்க்குமேதகுகுரவனுவான்
செழுக்குலமன்னருக்குஞ்சீர்புனைநாய்கருக்கும். (௫)

வகுத்திடுசூத்திரர்க்குமத்திமன்குரவனுவான்
மிகுத்தவுத்தமனுல்வர்க்குமேன்மைசால்குரவனுவான்
றொகுத்தகத்திரியர்நாய்கர்சுடர்ஞானதிக்கராகி
விருத்தநீவினைமுன்னேர்க்குமியைகுருவாவர்மன்னே. (௬)

புரையறுமறையோர்தம்முட்பொருந்தியபிரமசாரி
தரைபுகழ்கிரகிவானப்பிரத்தனேசந்நியாசி
வரைவில்சிரதிவன்னுச்சிரமிமனிவ்வைவர்கீழ்நின்
றுரைபெறுகுரவுத்தன்மையொருவருக்கொருவர்பூண்பர். (எ)

அறைதருபிரமசாரியவிர்ஞானதிக்கனுகின்
முறைபெறுகிரகிமுன்னுமூவர்க்குங்குரவனுவா
னிறைபுகழ்க்கிரகிதானுநிரம்புஞானதிக்கத்தான்
மறைபுகல்குரவுபூண்பன்வனத்தன்முன்னிருவோருக்கும். (அ)

நவிறருவனத்துளானுஞானியேற்சந்நியாசிக்
கவிர்தருகுரவனுவானதிவன்னுச்சிரமியென்பான்
குவிகைமானுக்கனுகாவொருவர்க்குங்குணத்தான்மிக்க
சவியுடைக்குரவர்க்கெல்லாங்குரவனந்தமைப்போன்மாலே. (கூ)

(மேற்படிவேறு.)

பொன்னிற்கடகமுதலாயபொலிபூண்பலவுமானுற்போ
லுன்னற்கரியமாயையிலிவ்வுலகம்பற்பலவிதமாய
தென்னத்தெரிவானெவன்றேகமியலிந்திரியாதிகளுக்குப்
பின்னப்பெருளைச்சருவசாட்சியெனத்தெரியும்பெரியனெவன். (க௦)

சுடருஞானவானந்தசொரூபன்சுயம்பிரகாசன்வினை
யிடரில்பரதத்துவனிமலனின்பமாரும்பரமார்த்தன்

படர்கேவலனித்தியன்சத்திபதிந்தார்க்கருளும்பரனவத்தை
தொடராதவனாகியவெம்மைத்துவிதமறச்சார்ந்தவனேவன். (கக)

தெளிவேதாந்தநல்மாவாக்கியதாற்பரியசிரவணத்தா
லொளியார்ஞானமடைந்தெம்மையுணராதுணருந்தூயனெவன்
களியார்மாயையாலுடல்விற்கற்பித்திடுவன்னூச்சிரம
மளியாரெனக்கின்றெனத்தன்மெய்யறிந்துநிற்குமறிஞனெவன் (கஉ)

கதிரோன்றிருமுனெலாம்விளங்குங்காட்சிபோலென்றிருமுன்னர்
மதியாலியாவும்விளங்குகின்றதெனத்தெரிமாண்பினனேவன்
வதிவார்மாயைமயமானமகதத்துவமுனுலகமெலாம்
பதியாரருளின்மூழ்கிடுமென்பாற்கற்பிதமேயுண்மையிலை. (கந)

சுத்தியின்பாலிரசிதம்போற்றோன்றலெனவுட்டெளிஞான
சித்தியுடையானெவனளவிறேகந்தோறுமுயிர்க்குயிரா
யொத்தவெளிபோல்வியாபகமுற்றோங்குங்கடவுளேயின்ப
முத்திமுதல்வனெனவெம்மையுணர்ந்தவறிவார்முதியனெவன். (கச)

தெரியுங்கிரகாதிகளாலேதிக்குப்பிரமைதீர்ந்தாலும்
விரியவொவ்வோர்காலத்துமீட்டுந்தோன்றுமதுபோல
வரியஞானத்தானிவிர்த்தியானசெகத்துமீட்டொருகா
லுரியதெனத்தோன்றிடுந்தோன்றவுளத்துமயக்கமுறானேவன். (கரு)

உலகமுழுதுஞ்சொப்பனம்போலுறக்கண்டிடுவானெவனாரு
மிலகுநம்பேரொளிப்பிழம்பினிலீனமாவானெவனிதனுன்
மலரும்வருணாச்சிரமதன்மம்வழுவவறிதாரானெவனவ்
வலகில்சீர்த்தியுடையானேயதிவன்னூச்சிரமியாவன். (கசு)

(கலிவிருத்தம்.)

அனையஞானிக்கிணையகிலத்துண்டெனா
நினையவுமரிதுகாணீர்ச்சலிப்பினாற்
றனைநிகர்கதிருக்குஞ்சலிப்புத்தேற்றம்போற்
புனையவோர்தோற்றமுண்டாதல்போலவே. (கஎ)

மன்னியமாயைசம்பந்தத்தால்வளா
மின்னியஞானிக்குமேவுவாதனை
துன்னுதல்போலவோர்தோற்றமுண்டுமெ
யந்நிலைநோக்குறினவனுக்கில்லையே. (கஅ)

விரும்பியஞானிதன்மெய்மைநிட்டையை
யரும்பியபந்தர்களறியவல்லரோ
கரும்பைநேரன்னவன்சரியைகாணுதல்
பெரும்பெயரற்றவூன்பெற்றகண்களோ. (ககூ)

படர்கேவலனித்தியன்சத்திபதிந்தார்க்கருளும்பரனவத்தை
தொடராதவனாகியவெம்மைத்துவிதமறச்சார்ந்தவனேனவன். (கக)

தெளிவேதாந்தநல்மாவாக்கியதாற்பரியசிரவணத்தா
லொளியார்ஞானமடைந்தெம்மையுணராதுணருந்தூயனெனவன்
களியார்மாயையாலுடலிற்கற்பித்திடுவன்னாச்சிரம
மளியாரெனக்கின்றெனத்தன்மெய்யறிந்துநிற்குமறிஞனெனவன் (கஉ)

கதிரோன்றிருமுனெலாம்விளங்குங்காட்சிபோலென்றிருமுன்னர்
மதியாலியாவும்விளங்குகின்றதென்னத்தெரிமாண்பினனேவன்
வதிவார்மாயைமயமானமகதத்துவமுனுலகமெலாம்
பதியாரருளின்மூழ்கிடுமென்பாற்கற்பிதமேயுண்மையிலை. (கங)

சுத்தியின்பாலிரசிதம்போற்றோன்றலெனவுட்டெளிஞான
சித்தியுடையானெனவனளவிறேகந்தோறுமுயிர்க்குயிரா
யொத்தவெளிபோல்வியாபகமுற்றோங்குங்கடவுளேயின்ப
முத்திமுதல்வனெனவெம்மையுணர்ந்தவறிவார்முதியனெனவன். (கச)

தெரியுங்கிரகாதிகளாலேதிக்குப்பிரமைதீர்ந்தாலும்
விரியவொவ்வோர்காலத்துமீட்டுந்தோன்றுமதுபோல
வரியஞானத்தானிவிர்த்தியானசெகத்துமீட்டொருகா
லுரியதெனத்தோன்றிடுந்தோன்றவுளத்துமயக்கமுறுனேவன். (கரு)

உலகமுழுதுஞ்சொப்பனம்போலுறக்கண்டிடுவானெனவனாரு
மிலகும்பேரொளிப்பிழம்பினிலீனமாவானெனவனிதனான்
மலரும்வருணாச்சிரமதன்மம்வழுவவறிதரானெனவனவ்
வல்கில்சீர்த்தியுடையானேயதிவன்னாச்சிரமியாவன். (கசு)

## (கலிவிருத்தம்.)

அனையஞானிக்கிணையகிலத்துண்டென்ன
நினையவுமரிதுகாணீர்ச்சலிப்பினாற்
றனைநிகர்கதிருக்குஞ்சலிப்புத்தேற்றம்போற்
புனையவோர்தோற்றமுண்டாதல்போலவே. (கஎ)

மன்னியமாயைசம்பந்தத்தால்வள
மின்னியஞானிக்குமேவுவாதனை
துன்னுதல்போலவோர்தோற்றமுண்டுமெ
யந்நிலைநோக்குறினவனுக்கில்லையே. (கஅ)

விரும்பியஞானிதன்மெய்ம்மைநிட்டையை
யரும்பியபந்தர்களறியவல்லரோ
கரும்பைநேரன்னவன்சரியைகாணுதல்
பெரும்பெயராற்றலூன்பெற்றகண்களோ. (க௯)

உலகர்தம்விழிப்பிடையுறக்கங்கொள்ளுவ
னுலகர்தமுறக்கத்திலுறவிழித்துளா
னுலகர்வேண்டாமைவேண்டுதலொழித்தவ
னுலகரேத்தெடுக்குநம்மொளிக்கலப்பினோன். (உ0)

அனையநன்ஞானியேயரியதேசிக
னனையவனுறையிடமவிர்நம்மாலய
மனையவன்பெரும்புகழலகினம்புக
ழனையனையடுத்தவர்நமையடுத்தவர். (உக)

மருளறுமனத்தினையாகிமாண்புறப்
பொருண்மிகுபத்திமைபூண்டநின்றனக்
கருளினாலறைந்தனமமையவோருதி
கருள்வெளிறெனவொளிகாட்டுமேனியோய். (உஉ)

எனத்திருவாய்மலர்ந்தினிதியம்பினான்
கனத்தினுங்கருநிறக்கண்டத்தெம்பிரான்
வனத்துழாய்மாலையான்மகிழ்விற்கேட்டனன்
மனத்தினுமுந்துறவணங்கிப்போற்றினான். (உங)

ஆடினன்சூழ்ந்தனனளவிலாத்துதி
பாடினன்களித்தனன்பரமநின்னடி
கூடினனென்றனன்குறைவிலானந்த
நீடினன்முத்தனாய்நிலவினனரோ. (உச)

இருமையுந்துறந்தரனருளையெய்துவான்
கருமையிலுள்ளகங்கருதுமந்தணீர்
பெருமைசான்மோசகப்பிரதனாகிய
வருமைசால்குரவனையறிந்துகொண்மினோ. (உரு)

ஐந்தாவது
மோசகப்பிரதனதியல்புரைத்த வத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம் ரு-க்குத் திருவிருத்தம் கஅஅ.

உ

ஆறவது

## ஞானோற்பத்தியில்லாமைக்கேதுநவின்ற வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

வரதன்மாயவனுளமகிழமோசகப்
பிரதனதியலுரைத்தமைபிறக்கினோ
பிரதஞானம்பிறவாமைக்கேதுவைக்
கரதலாமலகம்போற்கரைந்ததோதுவாம். (க)

வண்டுபோண்மூரன்றிடமதுப்பிலிற்றிடுந்
தண்டுழாயணிபுனைசைவமாயவன்
பண்டுகூற்றுயிரயில்பாததாமரை
மண்டுபேரன்பினுன்வணங்கிநிற்றலும். (உ)

ஆரணந்தொடர்வருமமலநாயக
னாரணன்றிருமுகநோக்கிஞானத்தி
னேரணவுற்பத்தியில்லாமைக்கேதுவைத்
தேரணவுறச்சொல்வாமென்றுசெப்புவான். (ங)

காலமாமுகினிகர்கரியமேனியோ
யேலஞானோற்பத்தியிலாமைக்கேதுவைச்
சீலமார்தரச்சொலிற்சிவத்துரோகமே
மூலகாரணமெனமொழியுமாமறை. (ச)

தக்கநம்மடியவர்தமைப்பிழைத்தலு
மிக்கநன்ஞானநூல்வெறுப்புவைத்தலும்
பொக்கமில்விபூதிபொற்புறக்கொளாமையு
மக்கமாமணிபுனையாததீழ்மையும். (ரு)

நெடியநம்மடிக்கன்புநிரப்புநின்னைநம்
மடியரின்வேறுசெய்தடாமைகூறலும்
படியிடைப்பிறர்பொருள்கவரும்பான்மையு
மொடிவின்மாமறைநிந்தையுள்ளும்புன்மையும். (சா)

வேதவத்தியயனம்விடுத்துநிற்றலும்
வேதபாராயணர்விருப்புறாமையும்
வேதநிந்தனைகொளச்செவிவிடுத்தலும்
வேதமோதுநர்க்கருள்வினைத்துநிற்றலும். (எ)

ஆகமநூலிடத்தவாவில்லாமையுந்
தோகமின்மிருதிகள்சுடர்புராணங்கண்
மோகமிலாமையுமுதிருமன்பர்சொல்
பாகமார்தோத்திரப்பற்றிலாமையும். (அ)

பாமரரேகொளும்பாஞ்சராத்திரம்
வாமநூலனுட்டித்துவரலும்பத்திமை
யேமமார்பெரியவரிடத்திலாமையு
மாமவர்சேர்க்கையையகன்றுநிற்றலும். (கூ)

நினைமுதனம்முடைநேயவன்பரை
யினைதலில்பெரியவரென்றெணுமையும்
புனைதருமொழுக்கிலாப்புன்மையாளரை
வனைதலும்போற்றலுமருவிநிற்றலும். (க0)

காமமேகுரோதமேகரையுலோபமே
தோமரு மோகமேதொகுமிடம்பமே
தீமன் மாற்சரியமாலசியஞ்சேரிவை
நாமறத்தழுவிடுநலமிலாமையும். (கக)

புண்ணியம்பாதகம்புகரிறெய்வத
மெண்ணியவிவையுளவிலவென்னையமுங்
கண்ணிடினிலையெனக்கரைந்துநிற்றலு
மண்ணியதந்தைதாய்க்கடாதசெய்தலும். (கஉ)

மழைவெயில்காற்றினால்வருந்திவந்தவர்
தழைதரவுபசரியாததன்மையும்
பிழைபடுசோரராற்பெருவன்மாக்களாற்
குழைபவர்தமைப்புரவாதகொள்கையும். (கங)

நல்சாதுக்களைநடுக்கங்காணலு
மல்லவர்தமக்கருளன்பு பூணலு
மல்லலாக்களைப்புரவாதவன்மையும்
புல்லமற்றவைக்கிடர்பொருத்திக்காணலும். (கச)

அவைதிரிதருமறமமைந்தபூமியி
னவைபடுவாதைதகணண்ணச்செய்தலுஞ்
செவையுறுநடவைகள்சேரக்கண்டகக்
குவையுறவிடுதென்முற்கொடுமைசெய்தலும். (கரு)

மானவாகருடணம்வசியந்தம்பன
மானவுச்சாடணமாவிசாரமுன்
னீனமாங்கருமங்களியற்றலுங்கவ
றானமென்றுணர்தராதுவப்பினாடலும். (கசு)

பூட்டியபொற்கலப்பூவைமார்பயி
னாட்டியம்விரும்பலுநயந்தன்றாரிசை
பாட்டியல்கானமுட்பரிவிற்கேட்டலும்
வீட்டியநலச்சொலேவிளம்புதன்மையும். (கஎ)

அமையுநல்லொழுக்கரையவமதித்தலுங்
கமையவர்சேவைசெயாவன்கண்மையுஞ்
சமைதருமனைவிசந்ததிகள்பாற்பெருஞ்
சுமையெனவன்பினைச்சுமந்துநிற்றலும். (கஅ)

ஆரியன்றன்னிடத்தஃதிலாமையு
மாரியன்றனைத்தொழவகத்துநாணலு
மாரியற்கனிட்டமேயாக்கிநிற்றலு
மாரியற்கிட்டமாமனைத்துநீக்கலும். (கக)

ஆரியனிளையனென்றகநினைத்தலு
மாரியனொழுக்கமிலானென்றுள்ளலு
மாரியனிந்தனையறையக்கேட்டலு (உ0)
மாரியனிடரினுக்கச்சுறாமையும்.

ஆரியன்முன்னடங்காதிருத்தலு
மாரியனிடநகையாடிப்பேசலு
மாரியனோடுவீணைபேசலு (உக)
மாரியன்மொழிமறந்தஞ்ஞையாதலும்.

விலக்கியபொருள்புசித்திடவிரும்பலுங்
கலக்கிநன்மனைவியைக்கடிந்துநீத்தலு
மலக்கணூர்நோயரையளித்திடாமையு (உஉ)
மலக்குறமிடியரைவருத்தஞ்செய்தலும்.

ஏதிலர்மாதரையின்பினோக்கலு
மாதரத்தவர்நலமகத்துட்கோடலுங்
காதரமிலாதவர்க்கலக்கவெண்ணலு (உங)
மாதர்மற்றவரெழின்மாண்பிற்கேட்டலும்.

பிறரடைகல்வியைப்பெருகுஞ்செல்வத்தை
யுறவுநோக்கண்டுவவாதபுன்மையு
மறமுறத்தன்னையேமதித்துப்பேசலு (உச)
மறமலிவிரதங்கொண்டிடையகற்றலும்.

ஒருவரோர்குறைவுறினுவப்புக்கொள்ளலு
மொருவருக்குரைத்தஃதுதவிடாமையு
மொருவர்முனொன்றுபினொன்றுபேசலு (உரு)
மொருவுறாக்கலாம்விளைத்துழலுந்தீமையும்.

தீர்த்தநல்யாத்திரைசெய்திடாமையுந்
தீர்த்தமென்றுணர்ந்தும்புன்செய்கைசெய்தலுந்
தீர்த்தநல்கிடுபலன்சிறிதென்றெண்ணலுந் (உசு)
தீர்த்தவாசிகடமைச்சிறப்பியாமையும்.

சிவாலயப்பணிவிடைசெய்திடாமையுஞ்
சிவாலயதரிசனஞ்சிந்தியாமையுஞ்
சிவால்யத்தடைந்துபுன்செய்கையாற்றலுஞ் (உஎ)
சிவாலயப்பொருள்கவர்சிந்தைகொள்ளலும்.

துலங்குநந்திருவுருத்தொட்டுப்பூசிக்கும்
வலங்கிளராதிசைவரையெண்ணாமையு
நலங்கிளரவரைநன்கேத்திடாமையும் (உஅ)
பலங்கிளர்வில்வத்துப்பற்றிலாமையும்.

புனிதனன்மனையுளபொருள்கள்யாவையுந்
துனியுறுதந்தைதாய்துயருறக்கவர்ந்
தினியசொற்பரத்தையர்க்கீத்தம்மாதரார்
நணியகலல்குலினுளுழல்குவான். (கஉ)

இற்பொருண்மாய்தலுமென்செய்வாமென
வற்பொருளுள்ளத்தினாய்ந்துநான்மறைச்
சொற்பொருளுணர்ந்தவர்தூயமாமனை
நற்பொருள்காவினனடுங்கவெளவினான். (கங)

ஆயகாலையினெதிர்த்தடர்த்தபேருயிர்
மாயவாள்வீசுவான்மதித்திடாதவர்
மேயவில்லகத்தழல்விரவச்சேர்த்துவான்
றீயமாபாதகதிலகமாயினான். (கச)

புறப்பதியேழையர்பொருளும்பற்பல
வறப்புறத்தூதியமனைத்துங்கைக்கொள்வான்
மறப்பறமொழிவிலைமாதராகிய
நறப்பயில்குழலியர்கையினல்குவான். (கரு)

சிலர்தமையுறவுறச்செய்துபோனக
நலமுறவமைத்தினடுங்கும்வல்விட
மலகறக்கலந்தையருத்திமாய்த்தவர்
பலபொருளையுங்கொடுபரத்தையிற்புகும். (கசு)

பழிவழக்குரைத்துளம்பதைப்புற்றேதில
ரழிதரவவர்க்குரித்தாயபூமியை
வழிபெறக்கொண்டுதன்மார்புதோய்ந்திடு
மிழிகுலமாதருக்கியையநல்கிடும். (கஎ)

தனக்கினிதாகியதடங்கண்மாதரார்
மனக்கினிதாம்படிவண்பயங்கொடார்
மனைக்குறுபசுக்களைவதைத்துமாய்க்குந்தீ
வினைக்கொருகுழிசியாய்மேயபாவியே. (கஅ)

அழகுறுதன்மனையசனீத்தனன்
பழகுமூன்பரத்தையர்பவனத்தார்ந்தனன்
பழையர்தஞ்சேரியிற்படர்ந்தன்னார்பெரு
மழையெனவாக்குகண்மாந்தினனரோ. (க௯)

புழுகணிகுழலியர்பொற்பகத்திடை
முழுகுறநாடியூன்முன்னிநாடிடு
கழுகெனவுழிதருகயவன்முன்புகள்
ளொழுகுவாய்ப்புலைச்சிமற்றொருத்திதோன்றினாள். (உ௦)

கண்டனனுவந்தனன்காதல்வாரிபோற்
கொண்டானடுத்தனன்குளிரநோக்கினுன்
மண்டனிவிரதியோவயங்குநீயென
விண்டனன்புணர்ச்சியைவிரும்பினனரோ. (உக)

அழுக்குடைகாவதமகன்றுநாறவும்
வழுக்குமெய்முழுவதுமயங்கிநாறவு
மிழுக்கிறையளவுமில்லாதவிவ்வுரு
முழுக்கவின்னமிர்தெனமுன்னித்துய்த்தனன். (உஉ)

எண்ணறுபாதகமிவைமுதற்பல
கண்ணறச்செய்துழல்கயமைத்தன்மையாற்
றண்ணறுபிணிகளுந்தவாதபித்தமு
மொண்ணுபைசாசமுமொருங்குசேர்ந்தவே. (உங)

சென்மநோய்மிகமறஞ்செய்ததீயவன்
குன்மநோயொருபுறங்குமைக்கச்சூலையாம்
வன்மநோயொருபுறம்வதைக்கமற்றுள
கன்மநோய்வருத்திடக்கலங்கினனரோ. (உச)

மண்ணிடைப்புரளுவன்மயங்கிச்சோருவன்
புண்ணிடையரக்குநீர்பொழியச்சாம்புவ
னுண்ணிடைமாதரார்நோக்குநோக்கய
கண்ணிடைநீருகக்கலங்கிவீழுவான். (உரு)

ஈர்த்திடுமலைத்திடுமெருக்குந்தியுகப்
பார்த்திடுங்கொதித்திடும்பற்கறித்திடுஞ்
சூர்த்திடும்போர்செவத்தொடங்குவாவென
வார்த்திடுங்கொலைப்பழியனைத்துமம்மவோ. (உசு)

இன்னணங்கொடுந்துயரெய்தினுன்மற
மன்னியதொழிற்சிவன்னன்மற்றவன்
றுன்னியபிதிரர்கள்சுவர்க்கமுற்றவ
ரன்னிகர்கொடுநிரையத்தழுந்தினுர். (உஎ)

பிரமலோகத்துறைபிதிரர்யாவரு
முரமில்ராயளறுற்றழுந்தினுர்
பரவுபாதகமகன்பண்புநோக்கிய
கரவிலாத்தந்தையுள்கரைந்துசோருவான் (உஅ)

மகனெனப்பிறந்தவன்வயங்குதன்குலத்
தகனமர்சுற்றங்களனைத்தும்வான்கதி
முகமலர்ச்சியிற்புகமுயலுவானிவ
னிகவருநரகங்களனேகமெண்ணினுன். (உகூ)

தள்ளரிதாயுறத்தக்கசெய்தனன்
கொள்ளரும்பாதகக்குழிசியாயினான்
விள்ளருந்துயரினான்மெலிந்துசாம்புவா
னுள்ளருமிவன்வினையொழிவதெங்ஙனம். (௩0)

இமையவர்பணிதருமேகநாயக
னுமையவணாயகனுவப்பத்தோத்திர
மமைதரச்செய்வனேலருளுமென்றெமைக்
கமையொடுதுதிசெய்வான்கரியமேனியோய். (௩௧)

(கலிநிலைத்துறை.)

மின்னேர்சடையாய்விடையாயடையார்வெண்செங்கார்ப்
பொன்னேர்மதிலோர்மூன்றுங்கருகப்பொடிசெய்தாய்
தன்னேரில்லாவிறையோய்மறையோர்தனிவாழ்வே
யென்னேயடியேன்படுதுன்பகலவிரங்காயோ. (௩௨)

மூவாமுதலேமுடியாமுடிவேமுக்கண்ணா
தேவாதேவர்க்கிறையேகறையேய்சீகண்டா
கோவாமணியேமுத்தேயமுதகுணக்குன்றே
வாவாவடியேனாற்றேனுடையாயருளாயோ. (௩௩)

வானேவளியேயொளியேயறலேமண்ணேமற்
றானேயுயிரேகதிரேமதியென்றோரெண்மெய்
நானேயுடையேனென்பாய்மறையுநவில்கிற்கு
மானேறுடையாயடியேன்வேறுருவருளாயே. (௩௪)

தொழுவாருள்ளச்சுடரேசுடருட்சுடரேசூர்
மழுவார்படையாய்மானேர்நோக்கிமணவாளா
செழுவானமிர்தேதேனேபாலேசிந்தித்து
நழுவாநிற்பேனல்லேனடியேனல்காயே. (௩௫)

அஃவறுகற்பநரகிலழுந்தியஞர்கொள்வான்
றளர்வறுபாவங்களையொருமகவாத்தான்பெற்றேன்
களவறுமன்பர்க்கெளிதருளுங்கருணைமூர்த்தி
பளகறுமாறுபணித்தருளேனைக்கம்பாராயே. (௩௬)

(கலிவிருத்தம்.)

என்றிரங்குமிருபிறப்பாளன்முன்
மன்றவெம்மருளாலோர்மறைமுனி
யொன்றுதேவபத்தப்பெயருள்ளவ
னன்றடித்தனன்மற்றவனன்மைபோல். (௩௭)

பாகவெக்கியன்மையுளனைத்தையு
மோகமற்றமுனிவரனோக்கியே
சோகமுற்றனனின்றுயர்சொல்லெனத்
தாகமிக்குவணங்கினன்சாற்றுவான். (ஙஅ)

ஐயனேயெற்கருமகவென்றொரு
வெய்யபாதகமேவிற்றதுபுரி
மையதீமைகளெண்ணிவருந்தினேன்
செய்யநின்வரவாலதுதீர்ந்தனன். (ஙகூ)

மிறைகொள்யானுமென்மைந்தனுமேவிய
நிறைகடும்புநிரையப்பிழைத்திட
வறைதிறல்வழியையவென்றன்பறை
முறையுணர்ந்தமுனிவனுணர்த்துவான். (ச0)

நிகரிலாதநிருமலசங்கர
னகனமர்ந்துறையற்புதத்தானங்க
ளிகவிலாதவெவைக்கும்விசேடமாப்
பகர்தலங்கோபருப்பதமென்பதே. (சக)

ஆரவோர்பதினாறுகுரோசம்வித்
தாரநீளமுளதத்தடவரை
வீரமாதவர்போற்றிடமேவியங்
கீரவான்மதிருடியிருக்கின்றான். (சஉ)

பத்தியோடுமைபோற்றுறுபண்பினாற்
சத்தியீசனெனும்பெயர்தாங்கினான்
புத்திமுத்தியும்போய்த்தொழுவாருக்குச்
சித்திசெய்யத்திருத்தலவீசனே. (சங)

அனையமாதலத்தம்புயமேலவன்
வினையிலாப்பரன்மெய்ம்மலர்ப்பாதங்க
ணினையுமன்பினிரம்பவருச்சித்துப்
புனைசிருட்டிபொலிதரப்பெற்றனன். (சச)

சுரசுவாகதச்சொல்லயிராணிகோன்
விரசுமன்பின்விளங்குறப்பூசித்துப்
பரசுமுப்பத்துமுக்கோடிபண்ணவர்க்
கரசனாயமராவதியாள்கின்றான். (சரு)

போரவாவுபொருப்புறழ்திண்புயத்
தாரகாசுரன்பூசித்துத்தாவுறா
வீரவாழ்க்கையனாகிவிண்மண்ணுல
காரவென்றடிக்கீழ்ப்படுத்தானரோ. (சசா)

ஓங்குமன்பினுருப்பசிபோற்றியே
வீங்குகொங்கைகள்வெய்யவயிரவா
டாங்குதோட்சயிலத்துறத்தாக்கவு
நீங்குறு துநிகழ்த்தவும்பெற்றனள். (சஎ)

பன்னுமாண்டளப்பான்பன்மலர்கொடு
துன்னுமன்பிற்றொழுதருச்சித்தனன்
மின்னுவாள்வயிரப்படைவேந்தன்முன்
னுன்னுதேவர்க்கொருகுருவாயினான். (சஅ)

நெறிகொள்பூநறுநீர்முன்பலகொடு
குறிகொண்மாமழைக்கோனருச்சித்தனன்
மறிவிலாவரம்வாங்கினன்வாள்வலி
செறியுந்தானவர்தேசிகனாயினான். (சகூ)

அன்னமாதலத்தின்னுமளவிலார்
பன்னருந்தவமாற்றிப்பல்போகமு
மன்னவெண்ணியவாறுறப்பெற்றனர்
நன்னர்ஞானமுநண்ணினர்பற்பலர். (ருo)

பத்தியோடுபெருவத்தினத்தலச்
சத்தியீசனைப்பூசித்துத்தண்ணருட்
சித்தியோகைச்சிறுபொனளிப்பினு
முத்தியெய்துவர்முப்புரிநூலினாய். (ருக)

கிட்டியங்குக்கிளர்தண்டுலமொரு
முட்டிநல்குவர்முத்தர்முற்பாவங்கண்
மட்டிலாமலுள்ளோனுமருவுடல்
விட்டிறந்திடின்மேவுவன்முத்தியை. (ருஉ)

(கோச்சகக்கலிப்பா.)

இருநிலஞ்செய்தவந்தெரிப்பானிலகுறுமத்தலத்தினிடைப்
பெருகுகருணையனறமேபிறங்குநயகுணத்தினன்சீர்
மருவுமறைமுடிவுணர்ந்தோன்மகானந்தபராயணனென்
றொருபெயர்கொள்சிவயோகியொப்பிலாதொருவனுளன். (ருங)

அன்னசிவயோகிசரணடைந்துநீமகனோடு
நன்னருறுபணிவிடைசின்னாள்புரிந்தங்குறைதியேற்
பன்னரியநின்மகற்கிப்பவப்பாவமுழுதழியு
முன்னர்வினையுங்கழியுமுத்தியுங்கூடிடுமென்றான். (ருச)

அத்தகுசொலிருசெவியேற்றகத்துவகையெழத்தேவ
பத்தன்மலரடிவணங்கிப்பழிச்சினான்விடைகொண்டான்
பித்தமிருமைந்தனைக்கைப்பிடித்தபிடியொடுகொடுபோ
யுத்தமர்கள்புகழ்சீகோபருப்பதத்தையுற்றனனால். (ருரு)

உற்றமறையவன்மகனேடொளிர்சத்திபீசனென
நற்றவரேத்திடுதிருப்பேர்நமையங்குத்தரிசித்துப்
பொற்றவணக்கம்பிரதக்கணநூற்றெட்டுறப்புரிந்து (௫௬)
குற்றமறத்துதிசெய்துகொண்டாடிப்புறம்போந்தான்.

அதிவன்னாச்சிரமியாயவிர்சிவன்முத்தனைக்
கதிர்புவனசற்குருவாய்க்கருணைக்கோராகரமாய்
வதிதருநற்சிவயோகிமகானந்தபராயணனற
னெதிர்சென்றான்மகனேடுமிணையடியிற்பணிந்தெழுந்தான். (௫௭)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

குறைவறுமன்புபொங்கக்குடந்தழுற்றெதிரேநிற்கு
மறையவன்றன்னைநோக்கிமகானந்தபராயணப்பேர்
நிறைசிவயோகிநீயார்நின்னுடனிற்பான்யாவன் (௫௮)
முறைகருதியதென்கொன்மொழியெனவருளினானே.

அடியனேனுய்ந்தேனென்னுவடியிணைமீட்டுந்தாழ்த்திப்
படியில்யான்மறையோனென்பேர்பாகவெக்கியனிந்நின்ற
கொடியவனெனக்குமைந்தன்சசிவன்னனவன்பேர்கூறின் (௫௯)
முடிவறுபாதகங்கண்முயன்றுபன்னாளுஞ்செய்தான்.

அனையகாரணத்தினாலேயளவிறுன்புறுகின்றானித்
தனையனின்றுய்யுமாறுந்தமியேனுய்யுமாறும்
புனையுமென்சுற்றமுற்றும்புகரறுத்துய்யுமாறு (௬௦)
மினைவறவுணர்ந்துநின்னதிருஞ்சரணடைந்தேனென்றான்.

செழுமறையுணர்ந்தயோகிதிருவுளமிரங்கிப்பாவந்
தழுவியகொடியனானசசிவன்னன்முகத்தைநோக்கப்
பழுதிலப்பார்வையாலப்பாதகற்குறுபைசாச (௬௧)
முழுவலிப்பிணிகள்பித்தமுழுமையுமொழிந்தவம்மா.

தணவறுபிணிமுற்றீர்ந்துசற்றறிவுதித்தலாலே
மணமலியோகிதாள்கள்வணங்கினன்சசிவன்னன்சீ
ரணவுறுமவனுமேயோர்மாணாக்கனேயாகக்கொண்டு (௬௨)
குணமிகுபணிகள்செய்யக்கொழுங்கடைநாட்டஞ்செய்தான்.

(கலிவிருத்தம்.)

போதனாகியபுண்ணியதேசிகன்
பாதபங்கயஞ்சூடிப்பணிவிடை
யேதமின்றியற்றுஞ்சசிவன்னற்குப் (௬௩)
பாதகங்கள்பதறியொழியுமால்.

கந்தமூலபலாதிகள்காமர்தீ
யுந்தவாக்கிடுமோமவிறகுகள்
சந்தமாரக்கொணர்ந்திடுதன்மையிற்
சிந்தியேகியபாவங்கள்சிற்சில. (௬௪)

உத்தமப்புனன்மூழ்கியுவப்பொடு
மொத்தசுத்தியுடையவனாய்நறுஞ்
சுத்தநீர்கொடுவந்துதொகுத்தலிற்
செத்தொழிந்தமாபாதகஞ்சிற்சில. (௬௫)

அறப்பெருந்தவயோகிதனுக்களை
யுறப்பசும்புலொளிர்தரக்கொண்டுவந்
திறப்பவுண்கவெனநன்கருத்திடு
சிறப்பிற்போகியபாவங்கள்சிற்சில. (௬௬)

உடுக்குங்கூறையொலித்தலிற்கோவணங்
கடுக்குஞ்சிந்தையிலாதுகழுவலிற்
படுக்கும்பள்ளிதிருத்தலிற்பாறின
கெடுக்கும்பாதகஞ்சிற்சிலகெட்டரோ. (௬எ)

கால்செய்வட்டமசைத்தலிற்கைகொடு
கோலமாரடிதைவருகொள்கையிற்
சாலவும்பணிந்தேத்துந்தகைமையி
னாலநேர்சிலபாவமழிந்தன. (௬அ)

எதிரிராதிருவென்னவிருத்தலிற்
கதிர்பகற்பினுங்காரிருண்முன்னரு
மூதிருமன்பினடக்குமுறைமையி
னதிரும்பாவமழிந்தனசிற்சில. (௬௯)

தயிலநன்குதடவிடுதன்மையிற்
பயில்வெந்நீர்நன்பதந்தெரிந்தாட்டலி
னியலுமற்றைப்பணிபுரியேற்றத்திற்
செயிர்கொள்பாவஞ்சிதைந்தனசிற்சில. (எ௦)

இன்னவாறுபணிபுரிந்தின்புற
மன்னிடுஞ்சசிவன்னனுக்கோர்தினந்
தன்னைநேர்சிவயோகிதயையினாற்
பன்னுமேன்மைப்பரிகலநல்கினான். (எக)

உண்டசேடமென்னொப்பிலமிர்தத்தைத்
தொண்டன்போற்றித்துதித்துக்கையேற்றனன்
மண்டுமன்பின்மகிழ்ந்துபுசித்தனன்
விண்டுநீங்கினவெவ்வினையாவுமே. (எஉ)

அடர்பவந்தொறுமாக்கியதீங்கெலாஞ்
சுடரழற்படுதுய்யெனப்போயின
படரராப்பகுவாய்நின்றுநீங்கிய
விடரின்மாமதியென்னவிளங்கினன். (எ௩)

தேசிகன்பணிசெய்யும்பல்லோருளும்
பேசிவன்முதலென்னப்பிறங்கினா
னேசின்முன்சென்றநாளுக்கிரங்கினான்
மாசிகந்தமனச்சசிவன்னனே. (எச)

கன்றுமாறுகழித்தவித்தேசிகன்
றான்றுசன்மத்தொடுகடனின்றியா
மொன்றுமுத்தியுறத்தகுஞானமற்
றென்றுநல்குமென்றெண்ணங்கொண்டானரோ. (எரு)

மழையைநோக்கிவருந்தும்பயிரெனப்
பிழையிலாச்சசிவன்னன்பிறப்பறத்
தழையுஞானந்தகப்பெறச்சிந்திக்கும்
விழைவையோர்ந்தனன்மெய்ச்சிவயோகியே. (எசு)

ஆன்றபக்குவனாயினனென்றுளஞ்
சான்றயோகிசசிவன்னனெற்றியிற்
றோன்றவின்பச்சுகந்தருநீற்றினைத்
தான்றன்பொற்கையினாற்றரித்தானரோ. (எஎ)

படியில்யோகிபரிந்தகுறிப்புணர்ந்
தடியனாய்ந்தனனான்பறுதியுளக்
கொடியனாய்ந்தனன்கோலத்திருவருண்
மிடியனாய்ந்தனனென்றடிவீழ்ந்தனன். (எஅ)

அடிபணிந்தவன்றன்னையருகிரீஇப்
படியிறண்ணருட்பார்வைவழங்கிச்செங்
கடியவங்கைசிரங்கவித்தான்மறை
முடிவையோதலுற்றான்குருமூர்த்தியே. (எகூ)

அறுதியாயளவில்லொளியாயொன்றா
யிறுதியின்மலமாயெங்குமாயின்பாய்
மறுதியாலுணர்தற்கரிதாய்வயங்
குறுதியோகியருன்னுநம்முண்மையும். (அ0)

எண்ணிலாதனவாயென்றுமுள்ளவா
யண்ணுமூவகையாய்ச்சதசத்துமாய்க்
கண்ணில்பாசங்கழிந்துநமதரு
ணண்ணின்முத்திநணுகுயிருண்மையும். (அக)

அளவில்சத்தியமைந்ததுவாயன்றே
தளர்விலாதுயிர்ப்பற்றியதன்மைத்தாய்க்
கிளருநம்மருளாலன்றிக்கேடுறு
வளர்கொடுங்கருமாமலவுண்மையும். (அஉ)

ஒன்றிரண்டென்றுரைக்கும்பிணக்கற
வென்றுமாநந்தமாயிணையில்லதாய்
நன்றுபேரொளிநம்மொடபேதமாய்
நின்றமுத்திநிலையினதுண்மையும். (அ௩)

மூன்றவாரியனன்றுபுகறலுந்
தோன்றக்கேட்டுச்சிந்தித்துத்தெளிந்துதா
வான்றவுள்ளத்தனுமெம்மருளினாற்
சான்றமுத்தனானான்சசிவன்னனே. (அ௪)

கொடியபாவக்குழிசியுமெய்தொணு
நெடியமுத்திநிலைத்ததையோர்தரிற்
படியின்ஞானிபணிவிடைபோல்வதோ
ரொடிவின்ஞானமுமுண்டுகொன்மாயனே. (அ௫)

பாகவெக்கியனும்பரயோகிதன்
சோகமற்றபணிதுலங்கச்செய்து
மோகமற்றவுளத்தினனுய்முதிர்ந்
தேகமுத்தியையெய்தினனென்பவே. (அ௬)

பரமஞானிபணிவிடைசெய்துநல்
வரமனுஞ்சசிவன்னனுயர்கதி
விரவலால்வற்பெற்றமெய்யன்னையு
முரவுமுத்தியுலகம்புகுந்தனள். (அஎ)

முன்னர்மாநிரையத்துமுழுகினோர்
மன்னுவான்சுவர்க்கத்துமலர்மக
னன்னர்மேவுபதத்தூஉனுகினார்
துன்னுசுற்றமுமேயினசுத்தமே. (அஅ)

மேவியன்னவன்விட்டமகளிர்கள்
யாவருஞ்சுவர்க்கத்தையடைந்தனர்
தாவிலன்னவன்றங்கியநல்லிடஞ்
சேவையாருஞ்செயச்சிறந்திட்டதே. (அ௯)

மின்னுமாமணிமேவியமார்பனே
பன்னுஞானிபணிவிடைமேன்மையை
யின்னுமோரிதிகாசத்தினுலுமோ
ரென்னவாய்மலர்ந்தானெங்கடம்பிரான். (௯0)

நாமவாள்விழிநாரியர்யாவரு
மேமவாணுருவிச்சிக்கும்பொற்பினு
ஞேமவோதிச்சுபகையெனச்சொலுங்
காமர்நாமக்கணிகையொருத்தியே. (கூக)

எங்குமுள்ளவிரும்பெருஞ்செல்வர்க
டங்களைக்கைவசஞ்செய்துசற்றிலா
தங்கவர்பொருள்யாவுங்கொள்வாமெனும்
பங்கமார்தருப்பாவநினைப்பினாள். (கூஉ)

பொட்டினாற்சிலர்பொன்னிறமெல்கலைக்
கட்டினாற்சிலர்காமருவாள்விழி
வெட்டினாற்சிலர்மேனியெழுவிரை
மட்டினாற்சிலர்மாழ்கவியற்றுவாள். (கூங)

ஆடலாற்சிலரார்நரப்பின்னிசை
பாடலாற்சிலர்பாய்முலைகாட்டுபு
மூடலாற்சிலர்மொய்யொளிப்பல்கலஞ்
சூடலாற்சிலர்சூழப்புரிகுவாள். (கூச)

மோகமாரமுலைப்பவுரைபகர்ந்
தேகதாரவிரதியருமிருந்
தாகசோபந்தலைக்கொண்டணைதரப்
போகம்விற்றுணும்புன்மையினாளரோ. (கூரு)

மருவுமைந்தர்மனைக்குலமாதரை
யொருவுமாறிதழூறலருத்தியும்
பெருவினோதக்கலவிபெருக்கியும்
பொருளெலாங்கொள்ளைகொண்டுறப்பூரிப்பாள். (கூசா)

கொக்குப்போலநரைத்துக்குரங்குபோன்
மிக்ககூனுடைமெய்யினராயினுந்
தக்ககாமந்தலைக்கொளச்செய்துபின்
கைக்கணுள்ளகவர்ந்துவிடுவளால். (கூஎ)

யாண்டொன்றிற்கிவ்வளவுபொன்முன்றரில்
வேண்டலாண்டிற்குமேலெனவாங்குபு
தீண்டுமற்றைத்தினத்துப்பொன்னல்கினேன்
மாண்டுபோகமடித்துக்களிப்பளே. (கூஅ)

மற்றைநாளுமிவ்வாறொருவனிடம்
பற்றிச்செம்பொன்பதைப்புறமாய்ப்பளாற்
கற்றைவார்குழற்காமருவாள்விழிச்
சிற்றிடைச்சுபகைப்பெயர்ச்சேட்டையே. (கூகூ)

இனையவாறுபன்னாளுமியற்றினா
ணினைவருஞ்செழும்பொன்னுநிரப்பினாள்
வினைசெய்வெய்யபிணியும்பைசாசமும்
புனைவில்கோறற்பழியும்பொருந்தின. (௧௦௦)

பொருளுளாரைப்பொருந்துறவற்றன
ளிருளறைக்கிடையெய்துறவுற்றனன்
மருளநாளுமயக்கியதற்றன
டெருளிலாதுமயங்குதல்சேர்ந்தனள். (௧௦௧)

ஆர்ந்தகூறையகற்றலின்மேனியைச்
சார்ந்துநாளும்வருத்தலிற்சார்பற
நேர்ந்துநித்திரைநீக்கலின்முன்னைநாட்
சேர்ந்தகூமந்தரையொத்தனதீப்பிணி. (௧௦௨)

ஓதிசோரவிழ்த்துவரோவிடச்
சோதிப்பொட்டுந்தொலையப்பொன்னோலைகள்
காதினீங்கக்கிடந்தாள்கலவியிப்
போதுமாற்றிக்கிடப்பவள்போன்றனள். (௧௦௩)

தழையக்கைதனமேல்வைத்துச்சாம்புதல்
பழையவாசனையான்மைந்தர்பற்றுபு
குழையக்கிள்ளிற்குலையுமுயிரென
விழையச்செய்தாண்மறைத்தல்விழையுமால். (௧௦௪)

தேருமைந்தர்செவிகள்விடுத்திட
வேர்கொள்கீதமிசைத்திடுமின்குரல்
யாருமஞ்செவிபொத்தவழுகையே
சோர்விலாதுதொடரவிசைக்குமால். (௧௦௫)

மைந்தர்நாசிவிடுத்திடமாமத
கந்தநாறியகாமருமேனிதா
னந்திநாசிகையாற்புதைத்தியாவரும்
புந்திமாழ்கிப்புலந்திடநாறிற்றே. (௧௦௬)

ஆடல்வல்லவண்முன்னரிப்போதுபே
யாடல்வல்லவளாயினளிவ்வகை
வீடனன்றெனமிக்கதுயருற்றாள்
வீடலில்சுற்றமுந்துயர்மேயின. (௧௦௭)

மருந்துமந்திரமாதியினாற்பலர்
திருந்துசாந்திகள்செய்யவுந்தீர்ந்தில
பொருந்தநல்விடமென்றவள்பாற்புகுந்
திருந்துவாட்டும்பிணிமுதல்யாவுமே. (௧௦௮)

என்னசெய்துமினியெனவேங்குறு
மன்னகாலையவள்பல்பவந்தொறு
முன்னராற்றியநன்மைமுளைத்திட
மன்னவெம்மடிவாழுமுளத்தினன். (கoகூ)

சாந்தமேயுருவானவன்றண்ணரு
ளார்ந்தஞானியொருவனவசமாய்
வார்ந்தகாதலுடையாண்மனைபுக்கன
னோர்ந்தன்னனல்வரவையுவனுமே. (கக0)

எழுந்துசுற்றமுஞ்சூழவிறைஞ்சியே
செழுந்தண்மாமலராதிகள்செங்கைகொண்
டழுந்திடாதவன்பாலடிபூசித்தாள்
விழுந்துதீவினைவேரொடுந்தீயவே. (ககக)

அனையஞானியருட்கண்வழங்கினன்
புனைவழிக்கும்பொல்லாப்பெருநோய்களு
மினைதல்செய்யும்பைசாசமுமின்னுந்தீ
வினைசெய்கோறற்பழியும்விலகின. (ககஉ)

துயர்தவிர்ந்தசுபகையென்பாண்மிகு
நயமெய்ஞ்ஞானிநலமலர்த்தாள்பணிந்
துயருநின்வரவாலெற்கொழிந்தன
பெயர்தராதபிணிமுதல்யாவுமே (ககங)

ஆதலாலையனேநினையான்பிரிந்
தேதமூழ்கவிருக்குமனமிலேன்
காதலுற்றென்மனையினெக்காலமு
நீதழைந்துறைகென்றுநிகழ்த்தினள். (ககச)

சொன்னவாறுறையாயெனிற்றூயநின்
பின்னரேகுவன்பேரருஞ்சுற்றத்தோ
டென்னமீட்டும்பணிந்திரந்தாணயக்
தன்னஞானியமையுடனாயினன். (ககரு)

சம்மதித்தனன்றூயனுவகைகொண்
டம்மவோவெனவாடினள்பாடினள்
விம்முகாதலின்மேவுபணிவிடை
செம்மையாரத்தினமும்புரிந்தனள். (ககசா)

மணமிகும்புனலாட்டியும்வாய்க்கியை
யுணவுநல்லனவூட்டியுமோங்குறு
குணமிகுந்தமென்கூறைகணல்கியுந்
தணவுறாதுமென்பாதந்தடவியும். (ககஎ)

பூசையிவ்வகைமூவருடம்புரிந்
தாசைதீர்ந்தகருத்தினளாய்ப்பவ
நாசமாக்குநன்ஞானமுமுற்றன
ணேசமுத்தியடைந்துநிலவினள். (௧௧௮)

அவடன்சுற்றமுமன்னமெய்ஞ்ஞானிதன்
னிவருநல்லருளாலிருவானகத்
துவகையெய்திடவுற்றதுமற்றவன்
புவனியின்கட்புகுந்தனன்வேறிடம். (௧௧௯)

அளவிலார்களிவ்வாறுமெய்ஞ்ஞானியைப்
பளகிலாவழிபாடுசெய்பேற்றினால்
வளநிலாவியமாமுத்தியெய்தினார்
விளவுகன்றுமெறிந்தமெய்யன்பனே. (௧௨௦)

இன்பஞானியிருக்குமிடத்தினி
லன்பினும்பரிபூரணமாயுளோ
மன்பதீர்த்தமுமாங்குவதிதரும்
பொன்பிறங்குநிறப்புருடோத்தமா. (௧௨௧)

திருந்துஞானிசேய்மைக்கணிருப்பினும்
பொருந்தியாயிடைப்போற்றுதலேகட
னருந்தவத்திருஞானியையாமென்றே
யிருந்தவத்தினர்கொள்ளுவரெற்றைக்கும். (௧௨௨)

வேறுபாவனைசெய்பவர்மேவுவா
ரீறிலாதவஞ்ஞானத்தையெற்றைக்கு
மூறுஞானிக்கொருவன்செயினஃ
தேறுயர்த்தவெமக்குறச்செய்ததே. (௧௨௩)

விரியுநூல்குருவால்விளங்கத்தெரிந்
தரியசாரமட்டுங்கொண்டனைத்தையு
மிரியல்விட்டிடல்வேண்டும்பலாலமு
முரியதென்றுநெல்லோடுகொள்வாருண்டோ. (௧௨௪)

நமையுணர்ந்தமெய்ஞ்ஞானிக்குநூல்களா
லமைதரும்பயன்யாதுநன்னீரெங்குஞ்
சமையக்கூவந்தழுவுதலுண்டுகொல்
கமையிற்றங்கியநெஞ்சுடைக்காகுத்தா. (௧௨௫)

நற்குலத்தினுதித்துநலநடை
நிற்கலுற்றுநிறையுமருட்டிரு
வொற்கமின்றிப்பெற்றெம்மையுளந்தெளிந்
தற்கல்செய்கலர்மூத்தரென்றுவரே. (௧௨௬)

மட்டுவார்வனமார்பசருமம்போற்
றெட்டுவானைச்சுருட்டுவருண்டெனிற்
பெட்டுஞானம்பெறுதுபேரின்பமே
யொட்டுமுத்தியுறுநருமுண்டரோ. (௧௨௭)

தன்மைசேருமெய்ஞ்ஞானமுமுன்பல
சன்மந்தோறுஞ்செய்சற்கருமத்தினாற்
புன்மைதீரொருவற்குப்பொருந்திடு
மன்மையார்களத்தெம்மருளாஞமன்னே. (௧௨௮)

பொங்கருட்பெருஞானிபொருந்திய
பங்கமில்லுடலுள்ளளவும்பகர்
சங்கவாதனையுண்டுதெகுமுடி
வங்கணம்மொளியாய்விடலுண்மையே. (௧௨௯)

மருக்கமழ்ந்தவனம்பொலிமாலையாய்
சுருக்கமாகச்சொற்றேமுணரென்றனன்
றிருக்குமூன்றுடைத்தேவர்கடேவனா
விருக்குநாதனிலங்குகருணையால். (௧௩௦)

வணங்கிமாயன்வளங்கொடுதிபுரிக்
தணங்கொர்பாலுடையாயடியேனினை
திணங்குமின்னருளாலுண்மையாவுநன்
குணர்ந்துபாசமொழிந்தனனென்றனன். (௧௩௧)

மாயனார்க்கிவ்வகைநன்கருளிய
தூயதேசிகனாகியதோன்றரு
னேயமாதொடுநீண்மறையின்முடி
யாயதில்லைச்சிற்றம்பலமேயினான். (௧௩௨)

அரவுலாஞ்சடையண்ணலடிமல
ரிரவுநன்பகலுந்தொழுமேற்றத்தீர்
பரவுஞானிபணிவிடைப்பேற்றினை
யுரவுசேருமதுள்ளத்துணர்மினே. (௧௩௩)

ஏழாவது

ஞானிபணிவிடைப்பேறுசொற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் எ-க்குத் திருவிருத்தம் ௧௩௩.

௮

எட்டாவது

# பிரமன் முன்னோர் தில்லையினேற்று ஞானம்பெற்ற வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பரமன்மாம்குரைத்தஞானிபணிவிண்டப்பேறுசொற்றுங்
கரமனஞ்சங்கநேமிக்கரியவனருண்மேற்கொண்டு
வரமனம்பலநற்றில்லைமாநகரடைந்துநோற்றுப்
பிரமன்முற்றேவர்ஞானம்பெற்றதும்விளங்கச்சொல்வாம். (க)

ஈறிலாச்சிவபரன்றனைதிரிருந்தருளப்பெற்றன்
பீறிலாதுறமகிழ்ச்சியெழப்பொலிவுற்றமாய
னீறிலாத்தில்லையூரவ்வினையிலியெய்தக்காணு
னீறிலாதழுங்கியெண்ணியெண்ணியுள்ளிரங்குகின்றான். (உ)

(ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.)

அரியானையாவருக்குமன்பருளமேய
பெரியானைப்பிஞ்ஞகனைப்பேணுநெடுவேதப்
பரியானைப்பண்ணவர்கள்பண்ணவனைக்கண்டங்
கரியானைக்காணுதகண்ணென்னகண்ணே
காலகாலனைக்காணுக்கண்ணென்னகண்ணே. (௩)

பாயகடலெழுந்தவிடம்பருகியுலகளித்த
தூயவனையொருமுக்கட்சுயம்பிரகாசனைநேன்
காயவர்தம்முளத்தமருமண்ணலையங்கயிலை
நாயகனைவழுத்தாதநாவென்னநாவே
நமச்சிவாயாவென்றுநாவென்னநாவே. (௪)

உதியாமையிறவாமையுள்ளவனெவ்வுயிர்க்குங்
கதியார்வமுணர்ந்துபெறக்கடைக்கணிக்கும்வள்ளல்
பொதிவாசநறுங்கடுக்கைப்பூம்பிணையன்மார்பன்
மதிசூடிகழலுன்றுமனமென்னமனமே
மாதேவன்கழலுன்றுமனமென்னமனமே. (௫)

பொங்கார்வமெழத்தினமும்போற்றுவாருளத்தே
மங்காதசுடரொளியாய்மன்னியுறையொருவன்
கொங்காருநறையிதழிக்குருச்சடையெம்பெருமான்
கங்காளனடிதொழாக்கையென்னகையே
கறைக்கண்டனடிதொழாக்கையென்னகையே. (௬)

கொங்கையோர்வண்டினந்தேன்கூட்டுணும்பூங்கூந்தன்
மங்கையோர்பங்குடையோன்மாண்புலித்தோலுடையோன்
கங்கையோடரவணியுங்கவின்சடையோன்கனலார்
செங்கையோன்சீர்கேளாச்செவியென்னசெவியே
சிவபிரான்சீர்கேளாச்செவியென்னசெவியே. (எ)

(கலிநிலைத்துறை.)

என்றிரங்கினானெம்பிரான்றரிசனமின்றி
யொன்றுவைகுந்தமடைந்துயிர்வாழ்கிலேனென்றான்
சென்றநல்லிடமடைந்துபோற்றித்திகழ்விடைபெற்
றின்றுமீள்குவலெனமனவுறுதியோடெழுந்தான். (அ)

சீர்கொளிக்கயிலாயத்தையடைந்திலன்சென்ற
வேர்கொணற்றிசைநோக்குறினிலங்குபொற்றில்லை
யூர்கொளம்பலமேயடைந்தனன்கொலென்றுன்னி
நார்கொள்சிந்தையினாரணன்வழிக்கொடுநடப்பான். (௯)

கனகமாமலர்சிந்துபுகிடப்பனகண்டா
னினமுறம்மலர்தெய்வமாமலரென்பதுணர்ந்தா
னனகவாசிரியன்சென்றவழியிதென்றடைவான்
மனநிரம்புமன்புடையமாலென்னுமாணாக்கன். (௧0)

கொண்டல்செய்யதாமரைபலபூத்தெழில்குலவ
மண்டனிற்படர்ந்தாலெனப்படர்மறுமார்ப
னண்டர்தம்பிரானருணனிசிந்தித்தாங்காங்குக்
கண்டயாவையுங்கனிந்தபேரன்பொடுவினாவும். (௧௧)

(கலிவிருத்தம்.)

பூங்காவனக்குயிலேதழைபொலியத்திரிமயிலே
நீங்காமலெவ்வுயிர்க்குமுயிராய்நின்றருணிமலன்
பாங்காருமையாளோடுபசுங்கொன்றைமணப்ப
வீங்கார்வழிச்சென்றான்கொலிசைப்பீரெமக்குறவே. (௧௨)

தேனேயெனப்பேசித்திரிசெழுஞ்சாரிகைப்புள்ளே
யூனேயுயிரெனப்பேட்டொடுமுறைதூதணம்புறவே
யானேறியகொடியானவிர்மதியேறியமுடியான்
மானேர்விழியுமையாளொடுவரக்கண்டதுமுண்டே. (௧௩)

மாவேநறும்பலவேபுனன்மண்டுந்தடமலர்ந்த
பூவேசெழுங்காவேநலம்புணர்ஞானமுணர்ந்தோர்
நாவேபுகழ்பெரியோனைநன்றாட்கொளவுரியோன்
றேவேசனிவ்வழிமாதொடுசென்றான்கொலுரைப்பீர். (௧௪)

கிளிகாண்மிருகளிகாணுறக்கிளர்மாமலரடையு
மளிகாணுளர்வளிகாணுறவலங்கும்பசுங்கொடிகா
ளிளிகாணெனமொழிமாதொடுமெம்மானிணையில்லா
வொளிகாலவிவ்வழிவந்தஃதுண்டோவுரைத்திடுவீர். (கரு)

குருந்தேகாறுங்கொன்றாய்கொடிமுல்லாய்செழுங்குரவே
திருந்தேனெனநிற்குமொருசிறியேனையும்பொருளா
வருந்தேலெனவாண்டோனுமைமாதோடிவ்வழியே
மருந்தேயெனச்சுரரேத்திடவந்தான்கொலுரைப்பீர். (கசு)

அனமேயன்றிலினமேதுகிரடியொண்மடநாராய்
தனமேருவையனையாளொருதாயோடெதிர்தோன்றி
முனமேயெனையாண்டோன்முழுமுதல்வனிணையில்லான்
கனமேபுரைகண்டன்வரக்கண்டீர்கொலுரைப்பீர். (கஎ)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

மாயனிவ்வாறுவினவிஞெனென்றும்வாய்திறவாமையைக்கண்டு, பாயநான்மறைக்குமெமக்குமற்றுள்ள பண்ணவரறிவிற்குமெட்டாத், தூயவான்சுடரையிவைகளோவறியுந்தொடர்ந்தியாம்வினவியதெவனென், றாயமற்றெவையும்வினவுதறவிர்ந்தானளவறுவிரைவொடுபெயர்ந்தான். (கஅ)

பற்பலவரைகள்பற்பலகான்கள்பற்பலவாகதிரதங்கள், சொற்படுபெற்பனகரங்கள்கடந்தான்றோன்றவாங்காங்குவீற்றிருக்கு, மற்புதம்பயக்குஞ்சிவாலயம்பலவுமன்புறத்தாழ்ந்துதாழ்ந்தகன்றான், பொற்புறுபுகழ்சேர்சென்னிநாடென்னும்பொன்னிநாட்டகமடுத்தனனால். ()

அனையகன்னாட்டினுள்ள மாதலங்களதிரிடைக்கண்டனயாவு, நனைமலர்கொடுதூயன்பினிற்பணிந்துநான்மறைவாழ்த்தொலியமரர், வினையறநாளுமேத்தொலிமுனிவர் விரித்திடுமரவொலிமற்றைப், புனையொலியறாத தில்லையினெல்லைப் புறம்பணைமருதஞ்சென்றடைந்தான். (உ0)

பீலியிற்பிளிறும்பெருமடநாரைபிறங்குவெண்டாமரைமலரை, யாலியவன்பிற்பெடையெனவணைப்பவயற்பெடை கொடியையென்றாடிச், சாலியொண்பயிர்ப்புக்கொளிப்பவச்சேவுறலையினால்வணங்கிநன்கணைத்துக், காவியல்கயல்களெடுத்தெடுத்தருத்திக்கடுந்துனிநீக்கியுள்ளுவக்கும். (உக)

காவிகள்ளொழுக்கும்வாவியிற்கவரிகாலுழக்கிடக்கருவானை
வாவிமேலெழுந்துவானகச்சுரபிமடித்தலமுட்டிடமருண்டக்கோ
வியவிளங்கன்றெனநினைந்தொழுக்குங்கூர்சுவைப்பாணிபெருகி
யாவியாலாழிகால்கள்பாலாறென்றறைதரப்பொலிதருநாளும் (உஉ)

ஓங்குறுபுனல்வாவிக்கயல்வாவியுறுகுலைவளர்நறுமாவிற்
றூங்குறுகனிகளுகுத்திடத்தாங்கிச்சுவைமதுப்பங்கயம்பொலிதல்
வாங்குறுநுசுப்பின்மலைமகண்மணாளன்மாநடம்போற்றவங்கடவைப்
பாங்குறுவோருக்கினிதுறவளிப்பப்பண்பின்வைத்திருப்பனபோலும்

கவையடிக்கயவாய்ப்பிணர்மருப்பெருமைகழனியுட்கமுகெனக்
கதித்த, சுவைபடுகழைக்காடுழக்கிநீரோடைத்தொகுபுழற்காலரக்கா
ம்பற், குவைபடுமலருட்செம்மணித்தருந்திக்கொழுங்கதிர்ச்சாலிவாய்
குதட்டி, நவையறத்தளிர்களரும்பியதேமாநறுநிழற்கண்ணெருமுறங் (௨௪)
கும்.

வெடிபடுவாளைமீமிசைப்பாயவிரிதலைக்கமுகிடைப்பிறங்குங், க
டிபடுமிறால்கீண்டொழுகுசெந்தேன்பல்காலுடைநதியெனப்பெருகி,
முடிபடுகூனற்குலையுடைக்கதலிமுழுவதுமடியறச்சாய்த்துத், தடிபடு
முகில்பாய்பரவையுட்பரவித்தங்கியவுவர்முழுதகற்றும். (௨௫)

குடம்படுசெருத்தற்கருநிறக்கவரிகொழுங்கழைகறித்தனகுதட்
ட,விடம்படுகடைவாய்நின்றொழுகியசாறிடையறாவொழுக்குறவோ
டி, விடம்படுகருங்கணுழத்தியர்பயிலுமென்பணைப்பெருவரம்புடை
க்கத், திடம்படுமுழவர்சாறுகெட்டி செறித்துடைமடையடைத் திடு (௨௬)
வார்.

மழையகடுரிஞ்சும்பசுந்தலைக்கமுகின்வலிகொடுநெடிதுறப்படர்ந்
து, தழைகொடிபற்றியேறியங்குறையுஞ் சங்குகணிவயிறுளைந்து,
விழைதரவீன்றவெண்டரளங்கண்மிளிருடுத்திரளெனவுகுவ, வுழை
திரியுழவருடைந்துவெண்பாளையுகுவனமிகவுமென்றுரைப்பார். ௨௭

குவிமுலைப்பாரம்பொறுக்கமாட்டாதுகூவிளிகொண்டுநாடோறு
மவிதருமகிழ்வினரற்றுநுண்மருங்குலாற்றுக்காலாட்டியர்பின்பு [ன்
கவினடைகற்பான்றொடர்ந்துபன்னுளுங்காமருகுமரிவெள்ளனங்க
புவியுறநடந்துதிரிதலிற்சிவந்தபுகழ்தரத்தோலடியவைக்கே. (௨௮)

தலைவிரித்தெழுந்தகோழரைத்தாரக்குத்தாணிகர்காய்க்குலையரம்
பை, மலைமடற்செங்காய்ப்பசியமென்கமுகுவண்சுவைக்கழைக்கரும்
பிலைகள், சிலையுடைச்சிறகரீர்ந்தவணமருஞ்செம்பொன்மாமண்டப
நாளு, நிலையுடைக்கவினிற்பொலிதரவுயர்ந்துநிலவுபஃறூண்டொறு (௨௯)
நிற்கும்.

கருநெடுந்தடங்கணுழத்தியராய்ந்துகளைகடிந்திட்டநாட்பிழைத்
து, மருவரக்காம்பல்பங்கயந்தழைந்துவளரழல்பொருவவுட்சிவப்ப
த், திருகுவெஞ்சினங்கொண்டனவிவையென்றுதெரிந்துசேணுலகுற
வளர்ந்து, பொருவறமுதிர்ந்துகாய்த்தசெஞ்சாலிபொருக்கெனத்தலை (௩௦)
வணங்கிடுமால்.

இத்தகுமருதப்புறம்பணைவளங்களியாவையுநோக்குபுநடந்து,சித்தமாசகன்ஞேரடைதரவிரும்புந்தெய்வதத்தில்லைமாநகர்சார்ந், துத்தமப்பெருமான் றிருவுலாப்புறம்போதொளிர்மணிவீதியையடைந்தான், குத்தரந்தாங்கிக்குயின்குழாந்தடுத்துக்கோக்களைப்புரந்தபைங்கொண்டல். (கூக)

திருவலகேந்திப்பணிபுரிவாருந்தெளிநறும்புனறெளிப்பாரு
மருவுபேரன்பினடநவில்வாருமாண்புறச்சூழ்ந்திடுவாருங்
கருதிடுவணக்கமியற்றுவார்களுமங்கப்பிரதக்கணங்கசிந்துள்
ளுருகிடவியற்றுவார்களுமாருலப்பிலரத்திருமறுகில். (கூஉ)

பனிநறும்புனலிற்சந்தனங்குழைத்துப்பைம்பொன்வேதிகைத்தலமெழுகிப், புனிதவெண்டரளம்பொடித்தினிதெடுத்தபொடிகொடுகோலமும்புனைந்து, தனியொளிர்தரப்பொற்பாவைகளேந்துதரணிநேர்மணிவிளக்கமைத்துக், கனிவுறநறுநெயுண்டொளிர்தீபக்கணங்களுங்கதுறச்சமைத்து. (கூக)

தண்ணியநறும்பூம்பந்தருமமைத்துத்தாமங்கள்சூழ்வரநாற்றிக்
கண்ணியகதலிகழைகமுகிளநீர்காஞ்சுறுங்கவினுறயாத்துப்
புண்ணியமுளைப்பாலிகைகளுமமைத்துப்பூரணகும்பமுமுறவைத்
தெண்ணியபிறவும்புனைந்திடவிளங்குமியன்மறையவர்மனையாவும். ()

மாமறைமுழக்கமுறுப்பெருஞ்சாலைமன்னியயாகநற்சாலை
நாமருவினிதுணல்கிடுசாலைநறியநீர்வாக்கிடுசாலை
காமருசெம்பொனுடகசாலைகரைபிறவறம்பயில்சாலை
தூமணியொளிரம்மறுகிருபாலுந்துவன்றுவபற்பலமாதோ. (கூரு)

மருவுவிண்ணமரர்மண்ணகம்புரக்குமன்னவர்மிடைதலினுரு
மொருவர்தம்முடியினொருவர்தம்முடிசென்றுரினுறவீழ்பலமணியும்
பொருவறுநறும்பூமாலையுமொளிரும்பொன்னரிமாலையுமற்றைக்
கருகிருள்கடியும்பன்மணிமாலைக்கணங்களுமாவயிற்குப்பை. (கூசா)

மறையொலிமுழக்கும்விழாவொலிமுழக்குமணவொலிமுழக்கமுநால்வாய்க், கறையடிமுழக்கும்வாம்பரிமுழக்குங்கடவுபொற்றேருருண்முழக்கு, நிறையிழைமகளிர் சிலம்பொலிமுழக்கு நீடியவாழ்த்தொலிமுழக்கு, மறைபுகழ்மிகுத்தவரவொலிமுழக்குமண்டமெலாம்பரவிமோல். (கூஎ)

சொல்லரும்பெருமையத்திருமறுகின் ஞெருகுவளநோக்குபுமகிழ்ந்து, செல்லருமன்பிற்பணிந்துபொன்வரைபோற்சென்றுயர்ந்தோங்கியொண்மணியா, லல்லறவிமைக்குங்கோபுரவாயிலடைந்துதாழ்ந்தாலயம்புகுந்தான், மல்லன்மோட்டாமையுருக்கொடுவெரிநின்மந்தரந்தாங்கியமாயன். (கூஅ)

ஆலயமுன்னரன்புறவணங்கியருஞ்சிவகங்கைகநீர்தோய்ந்து
வாலியநீற்றுத்தூளனஞ்செய்துமன்னுமுப்புண்டரந்தரித்துச்
சாலவுமுயர்ந்தகண்மணிபூண்டுதகுமுறைமையைந்தெழுத்தெண்ணி
யேலவார்குழலான்மகிழ்தரநடஞ்செயிறையவன்பேரருளுன்னி. கக

பிறங்குறுதிருப்பேரம்பலம்பணிந்துபேரொளிப்பிழம்புநின்றாடு,மறங்
கிளர்திருச்சிற்றம்பலமுன்னரடைந்தனன்றண்டெனப்பணிந்தா, னி
றங்கிளர்தரக்கணீர்மழைபொழியநெஞ்சகநெக்குநெக்குருக; மறங்கி
ளர்திரிப்படையிறைன்மகிழ்க்துமறுவலுந்தூழ்ந்துதாழ்ந்தெழுந்தான்

கலங்கிளர்ஞானந்தெளிதரவளித்தநாயகன்பேரொளியுருவை
யலங்குசின்மயமாமானந்தக்கூத்தையல்லியங்கமலக்கண்விடுத்து[ண்
வலங்கொளக்கவர்ந்தானஞ்சலிமுகிழ்த்தான்மட்டிலாவன்புருவானு
கலங்கலில்கருணைக்கிலக்கனேயாகிக்கரைந்தனன்பற்பலதுதிகள். ()

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

ஒருமுக்குணங்களறத்து மிக்குமோரெண்குணங்களுடையனெவன்,
கருமத்தொழில்யாவையுங்கழிக்குங்கழலாத் தொழிலைந்துடையனெ
வன், மருவப்படுபல்வடிவனைத்து மாய்க்குமொன்பான்வடிவனெவ,
னருமைப்படுமெச்சிவச்சுடரையானும்போற்றித்துதிக்கின்றேன். (சஉ)

எல்லாவுயிர்க்குமருளிச்சையிரிக்குமிச்சையுடையனெவன்
பொல்லாவறிவுமுழுதொழிக்கும்புகரிலாவொள்ளறிவனெவன்
மல்லார்மனுக்கள்யாவுமாய்வயங்குமனுச்சொரூபனெவ
னல்லார்கண்டத்தவனடிகள்யானும்போற்றித்துதிக்கின்றேன். (சங)

வானுதியவைம்பூதங்கள்வகுத்துக்காத்துமற்றவைகண்
மானுவருளினுயிர்கடொழினமருவப்புணர்த்துமறிவனெவ
னூனார்தருமவ்வுயிர்க்குயிராயுணர்வாய்நிற்குமொருவனெவ
னூனார்கொடியப்பரம்பொருளையானும்போற்றித்துதிக்கின்றேன். ()

முதியவேதாகமஞ்சொல்பொருண்முற்றுமாகுமுதல்வனெவன்
பொதியுமவையாகானுண்மைப்பொருண்மத்தகத்துநிலையனெவன்
விதியும்விலக்கும்வகுத்தெவர்க்கும்விளங்கவுணர்த்தும்விமலனெவ
னதிகனெவனப்பரசிவனையானும்போற்றித்துதிக்கின்றேன். (சரு)

மருள்சேர்மலகேவலத்துயிர்க்கண்மலர்பைந்தருவின்வதிதழலாய்த்
தெருள்சேர்சகலப்படுமுயிர்க்கட்சிலையினழலாயிவைகடந்த
பொருள்சேர்நிலையிலயத்தழலாய்ப்பொருந்தியருளும்புனிதனெவ
னருள்சேரந்தச்சிவக்கொழுந்தையானும்போற்றித்துதிக்கின்றேன்.

பாசவறிவிற்பசுவறிவிற்பற்றொணுதபரமனெவன்
மாசுபடுமவ்விரண்டுமறமாற்றியருளும்வள்ளலெவன்
தேசுதிகழுஞ்சடத்துவாத்திருவவுருவத்தேவனெவ
னூசும்புகரிலவ்விறையையானும்போற்றித்துதிக்கின்றேன். (சஎ)

கலங்குமெனக்குமுன்றோன்றிக்கரிசின்மறையின்முடிவனைத்தும்
விலங்குமலங்கணமறிந்தொழியவிருப்பிற்றெருட்டியருளியான்
மலங்கவெதிர்நின்றெழுந்தருளிவந்துதிருச்சிற்றம்பலத்தி
னலங்குநடனம்புரிபரமாயானுமுன்னைத்தொழுகின்றேன். (சஅ)

என்றுதுதித்தானடலவிலுமெம்மான்கடைக்கணோக்கருளி
மன்றநினதுதுதிக்குமனமகிழ்ந்தேநின்பேருலகமடைந்
தொன்றமுன்புயாமளித்தவுண்மைபோற்றியுலகளித்தி
துன்றுகலப்பும்பின்னுறுவைதுளங்கேலென்றுவிடைகொடுத்தான்.

ஐயனருளைமறுப்பதனுக்கஞ்சிப்பணிந்துபுறவிடைகொண்
டுய்யவிரும்புவாருள்ளத்தொளிராலயத்தின்புறம்போந்தான்
செய்யசிறைப்புள்ளினைநினைந்தான்சிவணிற்றதுமேலினிதிவர்ந்தான்
பொய்யிலவர்களைத்தெடுப்பப்பொலிவைகுந்தநகரடைந்தான். (ரு0)

(கலிநிலைத்துறை.)

குலவுநாவலர்புகழ்ந்திடத்தக்கவைகுந்த
வுலகமாயவன்மேவிவீற்றிருக்குநாளுவந்து
மலரின்மேயநான்முகன்மகபதிமற்றையமரர்
பலருங்கூடியவ்வைகுந்தமாநகர்படர்ந்தார். (ருக)

மடங்கலாதனத்திருந்தபைந்துழாய்முடிமாலைத்
தடங்கொள்கண்களிகூர்தரநோக்கினர்தாழ்ந்தா
ரடங்குமகிழ்வொடுதுதிபலவெடுத்தறைந்தா
ரிடங்குலாவுமாயவனளித்திருக்கெனவிருந்தார். (ருஉ)

வந்தகாரியமென்னெனமாயவன்வினவக்
கந்தமாமலர்க்கிழான்முதல்வானவர்களித்துச்
சந்தமாமறைத்தலைமையோன்கயிலைநீசார்ந்து
பந்தநீங்கிடவருந்தவம்பற்பகலாற்றி. (ருங)

தெய்வநாயகன்றிருவருட்காட்சியும்பெற்றுச்
சைவஞானமும்பெற்றுளாயாதலிற்றடங்க
ணையனேயந்தப்பெறலருஞானத்தையாங்க
ளுய்யநின்னிடைப்பெறுவதுகருதிவந்துற்றேம். (ருச)

என்றுவிண்ணப்பஞ்செய்தனரிகல்வலையாழி
யொன்றுசெங்கையானுவந்தனன்கேட்டிளநகைகொண்
டென்றுமின்பறுதிறைகொளவெண்ணினீர்சால
நன்றுநன்றுநீர்விரும்பியகாரியமமர்காள். (ருரு)

உமைமணாளனன்குணர்த்தியஞானமுற்றுணர்த்த
வமையும்வல்லவனல்லன்யானையுறுதுணர்த்தச்
சமையும்வல்லவன்சங்கரனொருவனேகண்டீ
ரிமையுறுதநீரெல்லிருமொன்றுசெய்திடுமின். (ருசா)

உலகெலாமுருவாகியபுருடனுக்குளமா
யிலகுறுந்தரிசனஞ்செயின்முத்தியீகுவதா
யலகில்பாவமும்போக்கிநல்லருளளிப்பதுவாய்க்
குலவுபோகமும்வேண்டுவார்க்கருள்குணத்ததுவாய். (௫௭)

மனைவியோடொநாங்குடியிருந்துறவழிபாடு
நினைதரச்செயப்பட்டதாய்நினைத்திடுவார்க்கும்
வினைகடிந்தருண்மேன்மையதாய்மெய்ஞ்ஞானியர்தம்
புனையுமுள்ளத்துப்பொலிவதாய்விளங்கிடும்புலியூர். (௫௮)

அனையமாதலந்தனையடைந்தடுத்துமூழ்குறுவார்
வினைகடிந்திடுசிவகங்கைமிளிர்புனன்மூழ்கித்
தனைநிகர்த்தநீறணிந்துகண்மணிதகப்பூண்டு
புனையுமாமனுவெவற்றினும்விசேடப்பூண்டதுவாய். (௫௯)

மருவுநன்சதவுருத்திரநடுவதிவதுவாய்ச்
சருவசித்தியுந்தந்தருள்புரிவதாய்த்தயங்குந்
திருவமாருமைந்தெழுத்தினைப்பிரணவஞ்சேர்த்துப்
பொருவிலாதபத்திமையொடுபொருந்துறவெண்ணி. (௬௦)

அந்தமந்திரங்கொண்டுசிற்றம்பலத்தாடு
மெந்தைதன்றிருவடிகளுக்கருச்சனையியற்றிச்
சந்தமாருமானந்தநன்னடனமுந்தரிசித்
துந்துமன்பொடுசிலபகலத்தலத்துறைமின். (௬௧)

மங்கைபங்குடைச்சிவபிரான்குரவனாய்வந்தே
யங்கைநெல்லியிற்றெளிபமெய்ஞ்ஞானநன்கருளுஞ்
சங்கையின்றியோர்வீர்சென்மினென்றுரைதந்தான்
கொங்கையேந்தியதுழாய்முடிக்குணப்பெருங்குரிசில். (௬௨)

கேட்டவானவரின்பமுமுவகையுங்கிளர
வேட்டதுற்றனமின்றெனவிருப்பொடுமுளரி
நாட்டமாயவனிணையடிபணிந்தனர்நடந்தார்
கூட்டமாதவர்புகழ்குளிர்தில்லையையடைந்தார். (௬௩)

மாசின்மாயவன்சொற்படிவண்புனன்மூழ்கிப்
பூசிப்புண்ணியநீறுகண்மணித்தொடைபூண்டு
தேசின்மிக்கவைந்தெழுத்தினைச்சிந்தையினெண்ணி
யாசிலாதசேவடியருச்சனையுநன்காற்றி. (௬௪)

மருவுமானந்தநடனமும்வளம்பெறப்போற்றி
பொருவிலாதபல்விரதமும்புரையறவாற்றிப்
பெருகுமாமறைமுடித்துதிபற்பலபேசி
யுருகுநெஞ்சராய்த்திருவருளுன்னியங்குறைந்தார். (௬௫)

வேண்வாமுதற்குற்றங்கள்வேரறக்கடிந்து
பூணையாவருக்கும்படாவிரதங்கள்பூண்டே
யாணமோங்கிடவமரர்களாற்றுமாதவத்தை
மாணநோக்கியதம்பிரான்வெளிக்கொடுவந்தான். (சுரு)

கண்டவானவர்பொருக்கெனவெழுந்தனர்களித்துத்
தண்டநேர்தரப்பணிந்துகைதட்டமிட்டாடித்
தொண்டரேம்பிழைத்தேமெனச்சூழ்ந்தெதிர்நின்று
ரண்டநாயகசயசயபோற்றியென்றறைந்தார். (சுஎ)

குன்றவார்சிலைகோலியகுழகனேபோற்றி
வென்றமால்விடைமீதிவர்வேதியபோற்றி
யொன்றவெங்களையாட்கொளுமுத்தமபோற்றி
மன்றமார்தருமாணிக்கக்கூத்தனேபோற்றி. (சுஅ)

விலங்கும்வெவ்வினையாருளமேயவபோற்றி
யிலங்குமாமதியேறியவேணியபோற்றி
மலங்குமெங்களைப்புரந்தருள்வள்ளலேபோற்றி
யலங்குமன்றினிலானந்தக்கூத்தனேபோற்றி. (சுகூ)

கம்பமால்கடக்கரியுரிபோர்த்தவபோற்றி
வம்பறுமலர்வயங்குபொற்கொன்றையாய்போற்றி
நம்பறுதாழ்லெமக்குதல்கிறையவபோற்றி
யம்பசும்பொன்மன்றற்புதக்கூத்தனேபோற்றி. (எ0)

வேதசாரமாய்முத்தியைக்கொடுப்பதாய்விமல
போதமீவதாய்ப்போகங்கள்புணர்ப்பதாய்ப்புவன
வேதநீக்குவதாய்ப்பொலியின்பமாநடன
மாதர்காணுறமன்றிடைநவில்பவபொற்றி. (எக)

வேதனுதியரிவ்வகைதுதித்தலும்விமல
நாதனுமெதிர்நண்ணியகூற்றுயிர்குடித்த
பாதனாருட்பரமனார்திருவுளம்பரிந்தே
யோதனார்முகநோக்கியீதுரைப்பவரானார். (எஉ)

போதுமேவியபிரமன்முன்னாகியபுலவீர்
யாதுவேண்டுவதுரைத்திடுமருளுதுமென்றார்
தீதுதீர்ந்தனமென்றுபொற்சேவடிவணங்கி
யோதுமெய்ச்சிவஞானம்வேண்டுவதெனவுரைத்தார். (எங)

அரவுசேர்சடையந்தணனாகியவடிகள்
பரவுதேவர்தம்பந்தம்யாவும்பறிந்தொழியக்
கரவுசேர்தராக்கருணையினாற்கடைக்கணித்தே
விரவுதன்புடையிருத்தினன்பவளவாய்விள்ளும். (எச)

மருவுமானந்தசொரூபமாய்வாக்கொடுமெனுதி
யொருவிநிற்பதாய்ப்பூரணமாயென்றுமுளதாய்
நிருவிகற்பமாய்நிருமலமாய்நிகரிலதா
யருவமோடுருவிலதுமாயொளிர்பரம்யாமே. (எரு)

சகலமோக்கமாகியமாயைநஞ்சத்தி
சுகசொரூபநம்மாற்றெழிற்படுவதாலென்று
மகநிலாஞ்சுயசொரூபநல்விசாரமிலாரை
யிகவிலாதென்றுமறைக்கும்பேரழினியையேய்ப்ப. (எசு)

அவ்விசாரமுண்மையினுளார்தமைமறையாது
வௌவுநீர்மைகொள்பிரளயகாலத்தம்மாயை
செவ்விதாகியநம்மிடத்தொடுங்கிடுஞ்சென்ம
வெவ்வநீங்கநம்மடித்தொழும்பியற்றிமையீரே. (எஎ)

பொருந்துசீவர்கள்புசித்தமெய்க்கமைத்தவூழ்போக
விருந்தசஞ்சிதமும்முடனூழ்நுகர்ந்திடுங்கால்
வருந்திரேடியகருமமுநம்மிடைவதிந்து
திருந்துமாறுசெய்மறுசிருட்டிக்குவித்தாகும். (எஅ)

பகர்வினைச்சமம்வாய்ந்துமும்மலபரிபாகத்
தகவடைந்தவரெவ்வகைப்பிறவியுஞ்சாரா
ரிகவிலின்பமாயேகமாயிணையிலாததுவா
யுகவிலாததாயோங்குநம்மொளிக்கலப்புறுவார். (எகூ)

ஒருபவத்தினைப்பூமியினுத்தமகுலத்து
மருவிமானதகருமங்கள்புரிந்துசன்மார்க்கத்
திருவமார்நிலைநின்றுதேசாருநம்மருளாற்
பொருவிலாதமுத்தியிற்புகுவாருஞ்சிற்சிலரே. (அ0)

(கலிவிருத்தம்.)

பல்லுயிர்கருமத்தின்பகுதிக்கேற்புறச்
சொல்பலயோனிகடோறுந்தோற்றமுற்
றல்லலுஞ்சுகமுமிக்கடையும்பல்லுயிர்
புல்லுமானிடபவம்பொருந்தவற்றுளும். (அக)

பூருவசன்மபுண்ணியவிசேடத்தாற்
சாருநற்குலசன்மமாப்புவி
யோருநம்மனுக்கிரகத்தினுண்மையி
னேருநற்கருமங்கணிகழ்த்திநாடொறும். (அஉ)

தொடர்தருசித்தநற்சுத்திவாய்ந்துபின்
னடர்சமுசாரமிக்கனுறென்றெண்ணியே
யிடராறுவிரத்திமிக்கிணையிலாக்கதி
படரியவிருப்பமென்மேற்பார்தெழ. (அங)

உறைமறைமுடிக்கதியுபாயமாய்வளர்
நிறைசிவஞானத்தைநிகரிலாதநம்
மறையருளாலடைந்தலங்குமுத்தியி
னிறைபெறுமுயிர்சிலவிலங்குவானுளீர். (௮௪)

சாற்றிடும்யாவருந்தகுநன்ஞானத்தா
லேற்றமார்முத்தியையெய்துவார்நனி
யாற்றிடுகருமங்களனைத்துஞானங்கொள்
போற்றிடுசாதனமாய்ப்பொருந்துமே. (௮௫)

தறைபுகழ்சாந்தியேதாந்தியேமுதற்
கறையறுகுணத்தொடுகருமமாற்றிடற்
றுறைகொளப்பவத்தினேதூயமாமறை
யறைசிவஞானத்தையடைகுவாரரோ. (௮௬)

வாரணவாசிமுன்வகுக்குநந்தலத்
தேரணவுறவதிற்றெவரிறப்பினு
நாரணவுறுமவர்ஞானவாளராய்ப்
பூரணமுத்தியிற்பொலிதலுண்மையே. (௮௭)

வித்தகநூல்களுள்வேதமுத்தம
மொத்தமந்திரத்துளைந்தெழுத்ததுத்தமஞ்
சுத்தநல்வானவர்தொகுதியுள்ளுமிக்
குத்தமமுடையம்யாமொருவமேயரோ. (௮௮)

தலங்கள்பல்லவற்றுளுஞ்சாற்றுமேன்மைநந்
தலங்களேயுத்தமந்தகுமவற்றுளு
மலங்களைவாரணவாசிகாளத்தி
மலங்கலில்லாதசீசயிலமாத்தலம். (௮௯)

திருவிருத்தாசலந்திகழ்சிதம்பரம்
வெருவறவருளும்வன்மீகமாநகர்
கருமலங்களைமறைக்காடுமுற்பல
பொருவறுதலநலம்பொலியுமுத்தமம். (௯௦)

இயம்பியவிவற்றுளுமிலங்குகாசியிவ்
வியங்கலில்சிதம்பரமுத்தமோத்தமம்
பயங்கொளிவ்விரண்டும்பத்திமையினின்றுயர்
வயங்கிளர்தவத்தரேமருவத்தக்கன. (௯௧)

புண்ணியம்வளருமிப்பொற்றலங்களி
னண்ணியன்பொடுமெமைநயந்துபூசிப்பா
ரெண்ணியபோகங்களவையுமெய்துவார்
தண்ணியமுத்தியுஞ்சார்ந்துவாழ்வரால். (௯௨)

தேவர்காணுமக்குபதேசஞ்செய்தவிம்
மூவருமுண்மையைமோக்கவாஞ்சையர்
மேவரவனுட்டிப்பர்வீடுவெஃகிலாப்
பாவகாரியர்செவிப்படவுந்தாங்கலார். (௯௩)

காதலினெம்மடிக்கலந்தபத்தியி
ராதலினுமக்கிஃதருளிச்செய்தனம்
வீதலுற்பத்தியைவிடுத்துவாழ்மினென்
ேறுதல்செய்தெம்பிரானுருமறைந்தனன். (௯௪)

களிமகிழ்வானவர்கருத்துவாய்த்தன
ரளிமலர்கொன்றையானடிபணிந்தனர்
வெளிநடம்போற்றினர்விடையும்பெற்றன
ரொளிமிகுதத்தமதுலகமேயினர். (௯௫)

மாயவனுரைப்படிவானநாட்டவர்
றூயவன்றில்லையைத்தொழுதுசார்ந்துநன்
காயஞானம்பெற்றவடைவுதேருமின்
பாயமாதவமிகுபனவிரென்றனன். (௯௬)

என்றகுதன்பதமிரண்டுமைம்பொறி
வென்றமாதவர்முடிவிரவத்தாழ்ந்தனர்
மன்றமாமறைமுடிவயங்குமுண்மையை
யொன்றயாநினதருளாலுணர்ந்தனம். (௯௭)

விரிகதிர்மன்றிடைவிமலநாயகன்
புரிதிருநடனமும்போற்றவெண்ணினேங்
கரிசறுமந்நடங்காணுபாயமுந்
தெரிதரவருளுதியென்றுசெப்பினார். (௯௮)

எட்டாவது

பிரமன்முன்னோர் தில்லையினேற்றுஞானம்பெற்ற
வத்தியாய முற்றிற்று.

ஆ அத்தியாயம் அ-க்குத் திருவிருத்தம் சருய.

௨

ஒன்பதாவது

## பரசிவனதுதில்லைநடனங்காண்டற்
## குபாயம்வகுத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தேவர்கண்ஞானம்பெற்றசெய்தியையெடுத்துச்சொற்று
மூவர்கள்வழுத்துமூவாமுதலவன்மன்றிலாடு
மோவருநடனங்காண்டற்குபாயமும்வகுத்துச்சொல்வா
மேவருபத்திவாய்ந்தவிரதயாதவத்தீர்கேண்மின். (௧)

குன்றவிற்பெருமானன்பன் குணமெனுங்குன்றிலேறி
நின்றவன்காமமாதிதிகழ்தருகுற்றமூன்றும்
வென்றவன்பொறிகளேவல்விருப்பொடுசெய்யவாண்டோன்
றன்றவக்களவிலாதான்சவுனகமுனிவனென்பான். (உ)

தொல்லைநான்மறைகளேத்தச்சுரர்முதல்யாரும்போற்றத்
தில்லையம்பலத்துளெம்மான்செய்தருளானந்தக்கூத்
தொல்லையான்கண்டுபோற்றற்குபாயமென்னென்றுதேர்ந்தான்
வில்லைமென்மேலும்வீசும்வெள்ளியங்கிரியைச்சார்ந்தான். (ங)

நெற்றியிற்பொலியுங்கண்ணர்நீறணிபவர்நாற்றோள
ரற்றிகழ்மிடற்றுவள்ளலடியவரனேகர்சூழ
வெற்றிவேத்திரங்கைகையேந்திவீற்றிருந்தருளுமன்பு
பற்றியவுளத்துநந்திபாததாமரைபணிந்தான். (ச)

நந்தியங்குரவனேக்கிநகைமுகமலர்ச்சிகாட்டி
யந்திலோரிருக்கைநல்கியைம்பொறியவித்ததூயோய்
தந்தியீருரியாற்கன்பசவுனகமுனிவாவிங்கு
வந்தகாரியமென்னென்றான்மாதவத்தலைவன்சொல்வான். (ரு)

திருவளர்சென்னிநாட்டுத்தில்லைச்சிற்றம்பலத்து
மருவளர்கடுக்கைவேணிவள்ளலாரியற்றுமின்பப்
பெருவளநடனங்காணப்பெட்டனனதற்குபாய
மருவளக்குரவநின்பாலறிதரவடைந்தேனென்றான். (சு)

நன்றுநீசிந்தித்தாயந்நடனங்காண்பதற்குபாய
மொன்றுமாறுரைப்பன்கேட்டியுத்தமமுனிவாவென்று
குன்றவில்வாங்குஞ்செங்கைக்குரவன்பாற்சிவாகமங்கண்
மன்றமுற்றுணர்ந்தநந்திவள்ளல்வாய்விள்ளுமாலோ. (எ)

கொங்கார்ந்தண்மலர்ப்பூங்கூந்தற்கோற்றொடித்திருமின்னார்க
டங்காந்தராயமாயர்தாந்தொழவருதல்காணாஉ
விங்கார்ந்தண்ணிதிற்பெய்மேகமீண்டினபலவென்றெண்ணிச்
செங்காந்தடுப்பீன்காட்சிதிகழுமிக்கயிலாயத்தில். (அ)

காலையுமாலைப்போதுங்கண்ணுதற்பரமயோகி
வேலையுமருட்டுமைக்கண்விமலைவெற்பரசுயிர்த்த
பாலைநேர்மொழியாண்மட்டும்பார்க்கமாநடனஞ்செய்வ
னாலையோர்முனிவாமற்றோர்நோக்குதலருமைத்தாமால். (கூ)

மறையவர்மாடத்தும்பர்வயங்குபொற்றசும்பின்சோதி
நிறைவுறவெழுந்துவிண்போய்நிலவியங்குள்ளார்யாரு
முறைதவிர்ந்திமைக்கச்செய்யுமுழுவளத்தில்லைமூதூ
ரறையுநாதாந்தமேயோத்தலங்குசிற்றம்பலத்து. (க0)

எண்ணில்பல்லண்டமுற்றுமீன்றசிற்றுதரத்தாயும்
புண்ணியவொருகூர்ங்கோட்டுப்புலவனுமுருகவேளுங்
கண்ணியமறைமாஞானிக்காரியும்யானுங்காண
நண்ணியபேரானந்தநடனமெப்போதுஞ்செய்வான். (கக)

விண்ணவர்பிரான்செயந்தவிமலவானந்தக்கூத்தை
யெண்ணவனருள்பெற்றோர்கள்யாவருங்காணலாகுங்
கண்ணருணிரம்பப்பெற்றகாரணமதனுனுஞ
மண்ணவர்முதலோர்போற்றீர்மாதவர்கண்டுவப்பார். (கஉ)

ஆதலின்முனிவாநீயவ்வழகியதில்லைமூதூர்
காதலினடைந்துநாதன்கருணைசித்திக்கவார்வின்
மாதமாதிரைநன்னாளின்மார்த்தாண்டனுதயமுன்ன
ரேதமெண்ணினர்க்கும்போக்குமிருஞ்சிவகங்கைமூழ்கி. (கங)

மன்னியநீறுபூசிவயங்குகண்மணியும்பூண்டு
தன்னிகர்மூலட்டானன்சந்நிதியடைந்துதாழ்ந்து
துன்னியவன்பிறோடுஞ்சூழ்ந்துமுன்னிருந்துகொண்டு
மின்னியவைந்தெழுத்தைவிதியுளியயுதமெண்ணி. (கச)

அன்றுபவாசமேசெய்தடியருச்சனையுஞ்செய்தி
யொன்றுமிவ்வாறேயோராண்டுவப்புறநோற்பையாகின்
மன்றுணின்றாடல்செய்யும்வள்ளலார்கருணைகூர்வ
ரென்றுமாராதவின்பவெழினடங்காணலாகும். (கரு)

இவ்வாறுபல்லோர்முன்னமிமையவருளுமாற்றிச்
செவ்வாய்வெண்ணகையோர்பாகன்றிருவருட்கிலக்காயாவு
மொவ்வாதநடனங்கண்ணுற்றுற்றனரிட்டசித்தி
தெவ்வானபொறிகளைந்துஞ்செற்றமாமுனிவரேறே. (கசு)

சிற்பரவியோமமாகுஞ்சிற்சபைநடனங்காண்டற்
கற்புதவுபாயமீதென்றருளினனகிலகால
கற்பனைகடந்தநாதன்கயிலைவீற்றிருந்துநாயே
னற்படுமுள்ளத்துள்ளுமமர்ந்தருணந்தியண்ணல். (கஎ)

மன்னலம்பெற்றேனென்றுமாமுனிவரனெழுந்து
பன்னலநந்திபாதம்பணிந்தன்னவிடையும்பெற்றான்
கன்னலங்காடுகொண்போர்கமுகங்காடென்னவோங்கு
நன்னலப்பணைசூழ்தில்லைநகரஞ்சென்றடைந்தான்யாதோ. (கஅ)

கலாநிதிதரித்தவேணிக்கண்ணுதல்குடிகொள்சிந்தைச்
சிலாதரமுனிவன்மைந்தன்செப்பியவாறோராண்டு
நிலாவுறமுனிவனேற்றானிறையருட்கிலக்கமாகி
யிலாபமாநடனங்கண்ணுற்றின்பத்துண்மூழ்கினானே. (ககூ)

தழைதரு பொழிற்றாய் சினைக்கரத்தணைத்துத் தயங்கருப்பிள மூலதிறந்து, விழைதருதும்பிமழக்களுக்கினிமைவிரவுதேம்பாலினி லூட்டிப், பிழையறவளர்க்கு மட்டகாசத்துப் பெருந்தகைமகாநந் தேச்சுரனே, கழைவிலுமலர்வாளியுங்கரத்தமைத்தகாரணிமகாநந் தேச்சுரியே. (உ௩)

பேடையஞ்சுரும்பர் கனிந்துதாலாட்டப் பிள்ளையஞ்சுரும்பர் துஞ்சுறும்பூ, வோடையுந்தடமுஞ்சூழ்தரவோங்கியொளிர்திருமகேந் திரத்தலத்தி, லாடையெண்டிசையாக் கொண்டநம்பெருமாற்கமை திருப்பெயர் மகாந்தகேசன், வாடையிஞெசியுங் கொடியனமருங் குன்மாதுமைமகாந்தகேச்சுரியே. (உச)

விரவுமாங்குயிறன் பேட்டினையணைத்துமென்குடம்பையையுற நோக்கிப், புரவுபூண்மைந்தர் மகளிரையணைத்துப் பொற்றமாதவி நறுஞ்சூழ, லூரவுறப்புகுந்தின்பார்தருஞ்சோலையுடுத்தபீமத்துவாரனே ர்கள், பரவுநம்மிறைபீமேச்சுரனுமையாள்பன்னுபீமேச்சுரியென்பார்.

கதிர்குழைகிழித்துக்குமிழ்மிசைமறிந்து கருவரிசெவ்வரியமை ந்து, முதிர்சினங்கொண்டு கூற்றொடும்பொருத முடங்கல்விட்டழை த்திடுங்கண்ணு, ரதிர்சிலம்பொலியுமேகலை யொலியுமருமணைவத்தி ராபதத்துப், பிதிர்தவில்கருணைப் பிரான்பவனண்டம் பெற்றதாய் பவானியென்றுரைப்பர். (உரு)

ஆதுலர்க்கம்பொன் முதலியவளிப்போ ரங்கைநின்றொழுக்கிய புனல்பாய்ந், தோதுசெய்ப்பரப்பிற்கூழெலாம்வளர்க்குமுறுவளவரு ந்தகோடிக்கண், காதுவைச்சூலபாணியன்மாயோகீசன்காமருதுடியி டைப்பூம், போதுமொய்த்தவிர்ந்தகருங்குழற்செவ்வாய்ப்பூரணபரை புருத்திராணி. (உஎ)

பருமணிக்குவையுஞ்சந்தனக்குறடும்பாவடிக்களிற்றுவெண்கோடுங் குருமலர்க்குவையுமுருக்கிற்றுணியுங்குலையுறவெற்றிடுங்கங்கைத் திருநதியுடுத்துமருவவிமுத்தத்திருத்தலத்திறைவன்மாதேவன் மருமலர்க்கூந்தல்வாணுதற்செவ்வாய்மங்கைநல்லாள்விசாலாட்சி. ()

விண்ணகங்கீண்டு திசைமருங்கடைத்து விளங்குபொற்கோபுர நோக்கிக், கண்ணகன்மேரு விதுவெனக்கருதிக் கதிரவன்வலஞ்செ யுங்காட்சி, மண்ணகம்போற்று மகாலயத்தலத்துமதிமுடிப்பாருத் திரனே, பண்ணகங்குழைக்குங்குதலையந்தீஞ்சொற் பயன்மதிநுதன் மகாபாகை. (உகூ)

இழிபவரேனுஞ்சென்றுபோற்றெடுப்பினிந்திரன்மாலயன்முதலோர் வழிபடத்தக்கபுண்ணியமளித்துவயங்குகோகருணநற்றலத்திற் கழிமடமுடையேனுள்ளமுங்குடிகொள்கண்ணுதன்மாபலவீசன் பழிதபுகருணைத்திருவுருப்பிராட்டிபத்திரகரணிகைமாதோ. (௩0)

நீட்டுசெஞ்சடையர்புண்ணியநீறுநிலவியமேனியரின்பங்
கூட்டுநன்மூலவாகமநெறியோர்குழாம்புகழ்ப்பத்திரகரணத் [வன்சீர்
தேட்டுமென்மலரோனிருங்கடற்கிடந்தோனிருவருமறியொணாஞ்சி
பூட்டுமங்கலநாணிலகுகந்தரப்பூரணபரைபத்திரைமாதோ. (௩௧)

கடகரிமுழக்கும்வாம்பரிமுழக்குங்கதிர்மணித்தேருருண்முழக்கும்
படரியமுழக்குமருத்திருவீதிபலமலிதருசுவண்ணாட்சத்
தடர்சினங்கதுவுங்கூற்றுயிர்குடித்தவரன்சகத்திராட்சவீச்சுரனே
மடமறுத்தெனையும்புரந்தருள்பனிமால்வரைமடமயிலுற்பலாட்சி.

இப்பிவாய்முத்தும்வலம்புரிமுத்துமிடம்புரிமுத்தும்வெவ்வேறு
திப்பியம்பயப்பத்திரையெடுத்தெறியுஞ்செழும்புனற்றாணுநற்றலத்தி
லொப்பிலியிளங்கோவினரிருபேருமுணரொணாத்தாணுவீச்சுரனே
கொப்பியல்வள்ளைச்செவிக்கருங்கூந்தற்கோற்றொடிதாணுவீச்சுரியே

தாழைமுப்புடைக்காய்வெடிபடுவாளைதாக்கலிற்பற்பலவீழ்ந்து
வாழையங்கூனற்குலைபலசாய்க்கும்வண்கமலாலயத்தலகீ
ரேழையும்புரக்கக்கருணையினுருக்கொண்டிருந்தருளிறைகமலேசன்
மாழையந்தடங்கட்சிற்றிடைத்திகழ்நின்மலைகமலேச்சுரிமாதோ.

துறைதுறைதோறுமிப்பியுஞ்சங்குஞ்சூன்முதிர்ந்துயிர்த்தவெண்முத்
கறையிரவொழியநிலாக்கதிர்விரிக்குங்காமருதடம்பலவுடுத்த [தங்
நிறைபுகழ்ச்சாகண்டலப்பெருநகரினின்மலப்பிரான்கபர்த்தீசன்
மறைமுடிவுணராப்பேரருட்சொரூபமங்கலைபிரசண்டேச்சுரியே. ()

அச்சணங்குறுத்தியம்பலைத்தயிலுமனுக்கியகண்ணுழத்தியர்க
ணச்சியகழனிக்களைகடுகாலைநகுவரப்பமைமடைக்குழிசி
கச்சபமெடுத்துழுநந்தண்மருதக்காமருகுரண்டத்திலிறையோன்
மெச்சியவூர்த்துவரேதசேசன்மேனிமிளிர்திரிசந்தியைவிமலை. (௩௪)

மாங்குயின்மருட்டிப்பூவையைச்சுவட்டிவன்னியையச்சுறவெருட்டிப்
பூங்கரும்பனுக்கியமுதினிற்கனிந்தபொங்குநீங்குதலையஞ்சொல்லா
ங்குறுதாடுந்தளிரிளஞ்சோலைநிறைந்தமாகோடநற்றலத்தி [ர்
லோங்குசீரிறைவன்மகோற்கடன்விமலவுமைமகுடேச்சுரியம்மா. ()

வார்கிழித்தெழுந்துவிம்மியண்ணாந்துமார்பிடமனைத்தையுங்கவர்ந்து
நேர்நுசுப்பந்தோபொறேனெனவரற்றநெருங்கிளிப்படைதருமுலையா
ரார்தருபாடலாடல்களறாதவரங்கமார்மண்டலேச்சுரத்திற்
சீர்தருகோமான்சிகண்டேசன்மெய்த்திகழ்பரைசாண்டலீச்சுரியே. ()

வலம்புரித்தடத்துமழகதிர்ப்பருதிவானவர்பலருதித்தாங்குப்
பொலம்புரிசெந்தாமரைபலமலரும்பொற்றகாலஞ்சரநகரி
னலம்புரியடியாருள்ளகத்தொளிருநாயகனீலகண்டேசன்
கலம்புரிகொங்கைக்கோற்றொடிச்செங்கைக்கருங்குழனாயகிகாளி. (

சரும்புபாண்பாட்டுறுக்குடைந்தலர்ந்துதூநறுவழிதரப்பொழியு
மரும்பலர்வெண்டாமரைமிசைப்பனுவலாட்டிபோலன்னங்களமரும்
விரும்புபைந்தடஞ்சூழ்சங்குகன்னத்தில்விமலன்மகாதேசசேசன்
கரும்புமந்தேனுமமுதமுங்கைப்பழக்கழறுமின்சொற்பரைதொனியே

சங்கினமுயிர்த்தநித்திலங்குவிந்துதடவரைபோன்றுதோன்றுதலா
லங்கிளர்வானோர்வெள்ளிவெண்கயிலையாமெனவஞ்சலிசெய்யும்
பொங்கியவளத்தூலேச்சுரத்தலத்திற்புராதனப்பரமன்றூலேசன் [ர்.
கொங்கிவர்ந்திருண்டுநெய்த்தெழிலார்ந்தகோதைதூலேச்சுரியென்பா

கறையுடைக்குலிசத்தண்ணலுங்கமலக்கடவுளுமாயனும்மற்ற
விறையுடைத்தேவர்யாவருமென்றுமேத்திடும்வியாக்கிரபுரத்தின்
மறைமுடியிடத்தாயினேனுளத்துமன்னியபிரான்சபாபதியே
பறையருண்மிகுத்தபிராட்டிபத்திரசபாபதியீச்சுரிமாதோ. (௬௨)

இத்தகுமேன்மைத்தலங்களினியைந்தவெத்தலத்தாயினுமடுத்துச்
சித்தமாசொழியவிருமுதுகுரவர்திருப்பெயரால்லருச்சனைசெய்
துத்தமச்சேவைசெய்தவண்வதியினுழிதரும்பாதகமனைத்தும்
வித்தகமுனிவீர்பஃறலத்துள்ளும்வியாக்கிரபுரனிவிசேடம். (௬௩)

(கலிநிலைத்துறை.)

அனையமாதலத்தவிர்சிவகங்கைநீராடிப்
புனையுமம்பலத்தாடிபொற்பாதமும்போற்றி
வினையிலைந்தெழுத்தாயிரத்தெண்டரம்விதியி
னினையநித்தியஞ்செபிக்கினெப்பாவமுநீங்கும். (௬௪)

படருமேடமாமதிநல்லாதிரைபருவத்து
மிடபமாமதிவிசாகத்துமிதுனவேர்மதியிற்
றொடர்பின்பக்கமட்டமியினுஞ்சொற்றபின்பக்கக்
கடகமாமதியுறுசதுர்த்தசியினுங்கலந்தே. (௬௫)

சிங்கமாமதிப்பூரணையினுந்திகழ்கன்னித்
துங்கமாமதிச்சன்மநாள்சுடர்முன்வாரத்துந்
தங்குறுந்துலாமதியிடைத்தயங்குமுத்திரத்தும்
பொங்குகார்த்திகைமதியிற்கார்த்திகையினும்புணர்ந்தே. (௬௬)

நிகரிலாத்தனுமதியிலாதிரையினுநிலவு
மகரமாதம்பூசத்தினுமாசிநன்மகத்தும்
புகரில்பங்குனியுத்திரத்தினும்புகன்றடைந்தே
பகருநூல்விதிப்படிசிவகங்கையிற்படிந்து. (௬௭)

புண்ணியத்திருநீறுடல்பூசியைந்தெழுத்து
மெண்ணியம்பலத்தாடிதன்றிருவடியிறைஞ்சிற்
கண்ணிலாப்பிரசித்தபாதகங்களுங்கழியும்
விண்ணுளார்புகழ்மேதகுமுனிவிர்காளின்னும். (௬௮)

அத்தலத்தின்மாமறையவர்க்கமைந்தஞானியர்க்குச்
சுத்தமாளிகைமடஞ்செய் தருஞழன்பிற்கொடுத்து
வைத்தவன்னபானுதிகள்வழங்கினுமொழியும்
பொத்துபாதகமனைத்துநன்முத்தியும்புணரும். (சுகூ)

மறைசொலத்தலங்கர்தலம்வானத்துமில்லை
நிறையுமத்தலவாசமேயுத்தமநெடிதா
வறையும்புண்ணியமுடையவர்க்கேயதுகிடைக்குங்
கறையிலத்தலமான்மியங்கரையயானவலனே. (ருo)

நாற்பத்துமூன்றாவது
சிவத்தலத்தின்பெயரு மங்கிருக்கும்
பரன்பரைபெயருமுரைத்த வத்தியாய முற்றிற்று.
ஆ௳ அத்தியாயம் சக-க்குத் திருவிருத்தம் அஅரு.

உ

நாற்பத்துநான்காவது

## திரவியசுத்தி யுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வேதமுயராகமநன்மிருதிபுராணங்களெலாம்விளங்கவோர்ந்து
மாதவத்தின்மேம்பட்டுமாதேவனடிக்கன்புவயக்கிநிற்பீர்
பாதகந்தீர்க்குந்தலமவ்வத்தலத்தினமர்பரமன்பரைநாமங்கண்
மேதகச்சொற்றனமினிமேற்றிரவியசுத்தியுமினிதுவிள்ளுவாமால். ()

திரவியந்தானுன்மாவனுன்மாவென்றிருவகையாஞ்செப்புமுன்ன
துரமிகுசச்சிதானந்தவான்மாவென்றியாவர்களுமுரைக்கும்வத்து
பரவுமதுசயஞ்சுத்தஞ்சத்தமுதன்மூன்றனுள்ளும்பகருஞ்சத்து
விரவசுத்தஞ்சத்துடைச்சம்பந்தமாகாமையின்மெய்சுயமேசுத்தம். ()

அறைசடமாகாமையினுற்சம்பந்தமசுத்தமாகாமையாற்சீர்
நிறைசித்துஞ்சுயஞ்சுத்தம்பிரமன்முதலுயிர்வேண்டுநீர்மையான்மன்
முறையுதித்தலொடுக்கமற்றுவிசுவாசபாத்திரமாய்மொழியுமான்மாத்
துறைகொள்சொரூபமதாகியுநலானுனந்தமுமெய்சுயமேசுத்தம். (௩)

ஆதலினுன்மாவுக்கசுத்தமிலையடர்மாயாவுபாதியாலே
யோதசுத்தம்போறலேற்றுமுறுகருமத்தாலான்மாவுறுதசுத்தம்
வேதநவிலக்கருமத்தாற்பவம்போய்மெய்ஞ்ஞானமேவுகாலத்
தேதமுறுமசுத்தமாத்தோன்றுதசுத்தமாவிலகுமன்றே. (சு)

பேதமறுவேதமுணர்பெரியீர்காள்பின்னரறைந்ததுமிரண்டாங்
காதலுறுத்தியான்மீகமாதிபவுதிகமென்னக்கரையிவற்று
ளோதலுறுமுன்னதுடலிந்திரியாதிகள்பின்னதுரைக்குங்காலை
மேதகையீர்பூதபவுதிகமென்றுநூலுணர்ந்தோர்விள்ளுவாரே. (ரு)

ஓதியசற்கருமத்தாற்பரசிவதியானத்தாலுயிர்கொல்லாமை
யாதியநற்றருமத்தாலுடற்குமகிட்டானதெய்வமவிர்முக்கண்ணு
ணீதியதியானத்தாலிந்திரியம்பிராணனுக்குநிடேதசிந்தை
காதியதாற்றியானித்திலயப்படலான்மனுதிகட்குங்காணுஞ்சுத்தி. ()

உடலாதிசுத்திபினல்யான்சுத்தனேனென்றுணர்ந்துகோடல்
விடலாகாவியாவகாரிகசுத்திமெய்ச்சிவபாவனையால்யாவு
மடலாருஞ்சுத்தியாமாதிபவுதிகப்பொருள்கட்கசுத்தமுண்டு
சுடலார்தீக்குறுபுகைபோலதற்குவிதிப்படிசுத்திதொகுக்கவேண்டும்.

சுட்டபுதுமட்கலஞ் சண்டாளராதியர் தொட்டப்பட்டாலப்போதே, விட்டுவிடல்வேண்டு மழவுருப்பசுமட்கலமாகின் மேன்மையாகச், சட்டவறலாற்கழுவித் தருப்பைநீர்ப் புரோக்கணமுந் தழையச்செய்யி, னொட்டவுறுஞ் சுத்தியென வொட்டலர்மும் மதில்பொடித்தானுரையுரைக்கும். (அ)

ஆண்டபின்மட்கலம் பின்னோராதியர் தொட்டாலொழிக்கவாளாமுன்னேன், மாண்டவழற்காட்டுபுகுசோதகத்தாற்சுத்திவயக்குக தீச்சுட்ட, பாண்டமலசம்பந்தப்படினொழிக்க வழன்முழுகாப்பாண்டமாகி, னீண்டகுசோதகமாதி யாற்சுத்திபுரிந்து சுடனீதியாகும். ()

செய்யுமகந்தனக்குரியதாருபாத்திரம்பூத்ததெரிவைமுன்னோர்
கையுறத்தீண்டிடிற்பழையதேலொழிக்கநவமாகிற்கதிர்தருப்பை
பெய்யுமறலாற்சுத்தியமைக்கசுத்திபுரியிடத்துப்பேசுந்தேச
மையகாலந்திரவியப்பயன்றனுபபத்தியறிந்துசெய்க. (௧0)

தண்டுலந்துரோணமேற்படச்சமைத்தவன்னத்தைத்தகுதியில்லார்
கண்டுதொடினக்காலமாபத்துக்காலமெனிற்களங்கநீங்க
மண்டுபுனலான்மண்ணிக்குசோதகத்தாற்சுத்தியினைவயங்கச்செய்க
விண்டுரைத்ததுரோணத்திற்குள்ளாகிற்பேசாமல்விடுதனீதி. (௧௧)

பக்குவதானியங் குடமொன்றற் கதிகமாயிருக்கப் பண்பிலீனர், தொக்குறத்தீண்டிடுவரேற் குசோதகபுரோக்கணத்தாற் சுத்திசெய்க, பக்குவதானியமரிசி பாரமொன்றிற்குறைந் திருக்கப்பண்பிலீனர், தொக்குறத்தீண்டிடி னொழித்துவிடல் வேண்டுமென் றுரைப்பார் தொன்னூலாய்ந்தோர். (௧௨)

ஒருபாரமுதலிரண்டுபாரம்வரையெனிற்கழுவியுறக்கசுத்தி
யிருபாரதண்டுலமேற்படிற்புரோக்கணசுத்தியியைக்கவாறு
தருபாரவரிசியனம்பூத்தமினார்சண்டாளர்தீண்டின்மண்ணல்
குருபாரம்பரியமுளீர்சுத்திமேற்படிற்குசோதகத்தாற்சுத்தி. (௧௩)

உடுத்தகலைசண்டாளர் தீண்டினனைத்தொலித் திடலானுண்டாஞ் சுத்தி, யடுத்தநவகலைதூசுமூடை யவிர்கம்பலங்களாதியாவுங், கடுத்த விழிகுலத்தவர்தீண்டிடிற்குசோதகப்புரோக்கணத்தாற்சுத்தி, விடுத்தவிலாதுண்டாகுமென்றுரைப்பார்முழுதுணர்ந்த மெய்மையோரே.

தண்டுலந்தானியங் குளம்பாறயிரிவைகளிற் காகந்தனைமுன் ஞன், மண்டுகொடும்பறவைகள்வாய்வைத்திடின் வாய்வைத்தவிடம் வாரிப்போக்கிக், கொண்டுதருப் போதகநீற்ருற் சுத்திசெய்யலாங் கொழுநெய்யெண்ணெ, யெண்டுகள்சேர்பாத்திரத்தினிருந்திடிற்புரோ க்கணத்தாலிவையுஞ்சுத்தி. (கடு)

ஊடரியபொருள்கிடைப்பிற் புரோக்கித்துவாங்கன்முறை நகமு ரோமங், கூடமிழிகிருமிபடினகற்றுபுநெய்நீறுகிளர்குசோதகத்தாற், பாடமைசுத்தியைப்புரிக பிண்டியிளுலமைத்த பண்டம்பகர்விலைப் பாற், கோடல்செயிஞ்ச்சியத்தாற் சுத்திசெய்து புசித்தன்முறை கூறுங்காலே. (கசு)

மேவியவுலோகபாத்திரங்கள்சுராபரிசமுறின்மேவுஞ்சுத்தி
பாவியதீயிடைக்காட்டவிழிஞர்தொடின்மண்ணுதலாற்படுமேசுத்தி
மாவியருப்பிரம்புளியாற்சுத்தியாம்விபூதியான்மண்ணினீராற்
பூவியனுலோகபாத்திரமெலாஞ்சுத்தியுறும்புலமைமிக்கீர். (கஎ)

பூத்தமடவார்புசித்தகஞ்சபாத்திரநன்குபொலிமண்ணிட்டுத்
தேய்த்தறலிற்கழுவுதலாற்சுத்தியாந்தீர்த்தயாத்திரைதேயத்து
வாய்த்தவபாயஞ்சிவவுற்சவமிக்காலங்களின்மெய்மயங்குமாறு
நீத்தவிழிஞர்களுறினுந்தோடமிலையென்றுரைப்பார்நீதிவல்லோர். (கஅ)

அறைபிரதிலோமரனுலோமர்தொடுமுலோகபாத்திரங்களம்ம
நிறைபுனலிலோரிருபான்றரநன்குகழுவுதலானிகழுஞ்சுத்தி
யுறைதருகற்பாத்திரநீறிட்டிருபத்தொருதரமண்ணுறவாஞ்சுத்தி
க்றையறுசங்காதிகணீறிட்டறலிற்கழுவுதலாற்கதிக்குஞ்சுத்தி. (ககூ)

பற்பலகூறுவதென்னைதிரவியங்களென்றுரைக்கப்பட்டயாவும்
பொற்புறுகாரணரூபமாகவுமக்காரணந்தான்புகர்தீர்ந்தோங்கு
மற்புதமெய்ச்சிவரூபமாகவுமுட்டெரிந்துகொண்டவதீதவாழ்க்கை
யெற்பெறுநித்தியசுத்தஞானிகளுக்கசுத்தமென்பதில்லைமாதோ. (

நாற்பத்துநான்காவது
திரவியசுத்தியுரைத்த வத்தியாய முற்றிற்று.
ஆ அத்தியாயம் ௪௪-க்குத் திருவிருத்தம் ௯௦௫.

உ

நாற்பத்தைந்தாவது

## உணத்தகாப்பொருளுரைத்தவத்தியாயம்.

(கோச்சகக்கலிப்பா.)

விரைத்தகடுக்கையந்தொடையுமிளிர்நதியுங்குளிர்மதியுந்
திரைத்தடவாரிதித்துகிர்நேர்செஞ்சடையிலணிந்தபிரான்
குரைத்தகழற்பதம்பணிவீர்குலவுதிரவியசுத்தி
யுரைத்தனநான்மறையுரைக்குமுணத்தகாப்பொருளுரைப்பாம்.

ஆகாரசத்தியினலவிர்சித்தசுத்தியுறும்
போகாதசிவஞானம்பொருந்துமதனுடனே
மோகாதிபந்தமறுமொழிதருமச்சுத்தியின்றேல்
வாகாருஞ்சித்தசுத்திமுதலியவைவமருவாவே. (௨)

ஆதலினன்மறைகடிந்தவனைத்துமுணுதொழிந்திடுதன்
மேதகுசுத்தியதாகும்விளம்புமிதுகருமிகட்கே
சாதல்பிறப்பில்லாராய்த்தாமேதாமாய்நிற்கும்
போதமிகுஞானிகட்கபோச்சியமொன்றேனுமிலை. (௩)

சிவஞானிபவஞ்சமெலாஞ்சிவமாகக்காண்பதனு
லவமாகாப்போச்சியமெல்லாமவற்கென்றறையுமறை
பவமாயமுயன்றீர்சொப்பனப்பவஞ்சஞ்சர்க்கிரத்தி
லெவனுமற்றதுபோன்ஞானிக்கிலைசாக்கிரப்பவஞ்சம். (௪)

சாக்கிரப்பவஞ்சமெலாந்தானகியிருத்தலினுற்
போக்கறுபோச்சியமாயெலாம்புசிக்கப்பட்டனவாந்
தாக்கவிருக்கின்றதெனுஞ்சத்தைதானெடுத்துரைக்கிற்
றாக்கவினர்தருசிவசொரூபமாகையினுலும். (௫)

சொற்றசத்தைக்கயல்யாவுஞ்சூனியமாகையினுலும்
பொற்றஞானிக்குவேறுனபோச்சியமுளதென்
றுற்றுரைக்கிற்குற்றம்வருமோங்குமாயையுமவற்குப்
பற்றுசிவசொரூபமேயாத்தோன்றும்பகருங்கால். (௬)

பெருகார்வத்துடன்யாரும்பேணுசிவஞானியர்க்குத்
தருகாதல்விதிவிலக்குச்சற்றேனுஞ்சொற்றிலனென்
மருவான்மஞானமிலாமறையவர்க்குவகுத்துரைத்தான்
றிருகாருமுளத்தனுகரூத்தெய்வசிகாமணிமாதோ. (௭)

கஞ்சமிருவகையுள்ளிகண்டகக்காற்குக்குடமோ
யெஞ்சவிலாக்கருங்கேழலீருள்ளியுருக்கந்த
நெஞ்சமுவவாவிரதகிர்த்தபொருட்டுருப்பாலான்
விஞ்சுபலவினுமிங்குவிட்டபலவகைப்பொருளும். (௮)

சூட்டுவாரணச்சேவற்றுணைப்பேடைச்சினைக்குநிகர்
காட்டுவழுதலங்காயுங்கண்சிவப்பவெதிர்த்தோரை
மாட்டுகழுக்கடைநிகராவயங்குமுருங்கைக்காயுங்
கூட்டுறுமண்ணழுக்குறைநீர்கொண்டாக்குங்கசட்டுப்பும். (௯)

பாடீனமிராசிவம்பகருரோகிதமென்னக்
கூடீரப்புனறிரிமீன்குலங்கொத்தைப்படுகுரண்டங்
கோடீர்பைந்தளிர்மாழைக்கோட்டுறைகோகிலமற்றுந்
தோடீரமலர்ச்சோலைசூழ்நகர்ப்பல்பறவைகளும். (௧௦)

இந்திரியமிரண்டியக்கமிரவணஞ்சூகரங்கோகு
நந்தியகட்சம்பந்தநலமிலாப்பலபொருளுஞ்
சந்தமிலாப்பழஞ்சோறுமுதலியவுந்தணவாமே
கந்தமலர்துவன்றுதருக்கான்வாழ்க்கையுடைச்சசமும். (கக)

கருங்காகங்கொடுஞ்செவிநாய்கடும்பூனைகோகிலந்தி
வருங்காலவிடம்பொழியுமாசுணஞ்செற்றிடுசூலம்
பருங்காதல்கொண்டிவைகள்வாய்வைக்கப்படுபொருளுஞ்
சுருங்காதவேதபாகியன்றொடப்பட்டிடுபொருளும். (கஉ)

சூரப்பிளவில்விருகமுயிர்கொன்றுவிருகத்தசையுண்
டுரப்பியுழல்விருகமுமூர்க்குருவியனநேமிப்புள்
கரப்பில்சாரசங்காகங்கழுகுகிளிபூவைபரி
வரப்பில்வலிக்கரிநுணலைமலமளைந்தபலபொருளும். (கங)

நரர்கயங்கோமேதிபரிநகமைந்துபெறுமிருகம்
விரவுறுசெம்மறியாடுவெள்ளாடுமற்றிவற்றுண்
கரவுறுகட்பரிசமுறுகழியீனுச்சியநறும்பால்
பரவுபனைதெங்குறுகள்பாருறுமழைநீரும். (கச)

சூதகவான்பொழிதருபாறுரகமிரவணங்கரமா
டேதமிகுமிவையின்பாலெருமையலாமிருகப்பால்
கோதனமில்பசுவின்பால்கோவாதிபன்மிருகம்
போதமிதித்திட்டபொருண்மோந்தபொருளிவைபல்வும். (கரு)

பெட்டவிலாவனுலோமர்பிரதிலோமர்கடவுண்டப்
பட்டபொருளிவையனைத்தும்பனவர்களுண்டிடக்கூடா
தொட்டவிவையுண்பாரேலுறுவர்நரகிடையென்று
மூட்டறநான்மறையுணர்ந்துமுதுக்குறைவின்மேம்பட்டீர். (கசு)

மன்னவருமெட்டியருமற்றிவற்றுட்சில
நன்னருறக்கொள்ளலாங்கொள்ளாமைநனிநன்று
பின்னவர்க்கிந்நியமமிலைபிராமணர்க்காமிவ்விதியை
யன்னவருங்கொள்ளுவரேலுத்தமமாமருந்தவத்தீர். (கஎ)

மற்பல்கூறுவதென்னேபாரிடத்தியாரேனு
மற்பவுயிரையுங்கொல்லாதமைதலைபெருந்தவமாஞ்
சொற்படுமேனுதிகடிதூயவுணவான்ஞானம்
பொற்பமுறையுண்டாகுமெனப்புகலுமறைமுடிவும். (கஅ)

முறையினுலகத்தொருவர்க்குதிக்குமுழுச்சிவஞான
மறைமுடிவானுதிப்பதன்றிமற்றொன்றானுதியாது
குறைவறுநற்சதுர்த்தசவித்தைகளுநனிகூறுமறை
னிறைவையனுசரித்தலினனிகரில்பிரமாணமாம். (கக

ஆரணத்திற்கவிரோதவாகமச்சார்பினுஞானஞ்
சீரணவவுதிக்குமெனச்செப்புமானுன்மறையு
நாரணனுமலர்மகனுநாடரியானையசிவ
பூரணனுக்காளாகிப்பொலிவுற்றமாதவத்தீர். (௨௦)

நாற்பத்தைந்தாவது
உணத்தகாப்பொருளுரைத்த வத்தியாய முற்றிற்று.
ஆ. அத்தியாயம் சரு-க்குத் திருவிருத்தம் ௬௨௫.

௨

நாற்பத்தாறவது
# மரணக்குறியுரைத்தவத்தியாயம்.
(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

குணத்தவுயிர்கடமக்கருளுங்கோமான்குறுத்தாட்குறட்பூத
கணத்தனிணத்தூமழுப்படையான்கழற்றாளிண்டைக்காமர்மலர்
மணத்தவுள்ளப்பெருந்தவத்தீர்வயங்குமறைசொல்லியவாறே
யுணத்தகாதபொருள்பலவுமுரைத்தாமரணக்குறியுரைப்பாம். (௧)

துருவன்றெரியாதொழிந்தானுஞ்சோமச்சாயைதோற்றும
லொருவினுமொளிருடுச்செல்வீதித்தோற்றமோவிடினுந்
தருமமனையபெருங்கற்பிற்சாவிகாட்சியறினுமொரு
வருடமதன்மேலிரானென்றுவகுப்பாருணர்ந்தவல்லோரே. (௨)

அந்தாமரைகள்முறுக்கவிழவந்தகாரமழிந்தொழிய
நந்தாதுதிக்குமெழுபரித்தேர்ஞாயிற்றொளிசெய்மண்டலமுஞ்
சிந்தாவழலும்வெப்பமற்றாற்போன்றுதோன்றிற்செய்தவத்தீர்
மூந்தாவியமனுலகடைவான்மொழிபன்னொன்றுந்திங்களின்மேல். ()

வெள்ளிபோலும்பொன்போலும்வெறுக்குமலநீராகவுமெய்
தள்ளிவருத்திமயக்குறுத்துஞ்சத்திசெயினுமிவ்வாறே
பள்ளிமருவுதுயிலகத்துப்பாழ்த்தகனவுகண்டாலுந்
துள்ளியெழுந்தோர்பான்மதிமேற்சுடுதீக்காலன்வரக்காண்பான். (௪)

பூதபிரேதபைசாசம்பொலியுங்கந்தருவர்நகரங்
காதன்மிகுந்தபொன்விருக்கங்கரையுமிவற்றுள்யாதேனு
மேதமுறுக்குங்கனவினிடையெய்தக்காணிலவனென்பான்
மாதங்கழியினிவ்வுலகவாழ்க்கைகழிப்பானெனுமன்றநூல். (௫)

ஒருகாரணமுமில்லாமலுடலந்தூலமானாலு
மருகாவிலேசமானாலுமறவுங்கருமையானாலு
முருகாநின்றுதமரெல்லாமோவிட்டாற்றவெண்மதிமேற்
கருகாலாலங்கர்கொடுமைக்காலனுலகங்கைக்கொள்வான். (௬)

அள்ளற்கருஞ்சேற்றிடையேனுமடர்மட்புழுதியிடத்தேனும்
விள்ளற்கரிதாய்க்காலகப்பட்டொடிந்துவிழுந்தவிதமாக
வெள்ளற்கொடியகனுக்காணிலேழாமதிமேலிவ்வுலகந்
தள்ளற்குரியதென்றெழித்துச்சார்வானியமன்றனுலகம். (எ)

காகமேனுங்கழுகேனுங்கபோதமேனுந்தலைமீது
மோகமுறவந்திருந்தெழுந்தான்மொழியுமாறுமதியின்மேன்
மேகமனையகரும்பகட்டின்வெய்யகழுத்தினியாத்தமணி
மாகமதிரும்படிமுழங்கமறலிகடவிவர்திடுவான். (அ)

விட்டிலாததன்சரீயைவிகாரமாகத்தோன்றிடினும்
பெட்டெங்கேனுஞ்செல்பொழுதுபெருங்காற்றடிப்பவவ்வழியே
மட்டில்காகனிதொடர்ந்துவரினுநான்குமதியலது
சட்டவைந்துமதியிதன்மேலிராவென்றுரைப்பார்தக்கோரே. (கூ)

கனக்குழாஞ்சஞ்சரியாதகாலத்தகலாகாயத்துத்
தனக்குவலமார்பாகத்துத்தடித்துத்தோன்றக்கண்டாலும்
புனற்கண்மகவான்சிலைதோன்றக்கண்ணுற்றாலும்புலமையுளீர்
நினைக்குமொருமாமதியிரண்டுமதியில்வாழ்க்கைநிலையறுவான். (௧0)

தூயவாடியிடத்தேனுந்தலங்குநறுநீரிடத்தேனு
மாயவொருவருடையவிழியகத்தினேனுந்தனையம்மா
மேயசிரநீங்குறக்காணில்விளிவாளொருதிங்களிலென்று
பாயமறைகண்முழுதுணர்ந்தநல்லோரெடுத்துப்பகர்வரால். (௧௧)

நிம்பகந்தஞ்சவகந்தநேயமுறுத்தாக்குட்டகந்தம்
வெம்புமிவற்றுள்யாதேனும்விழைதன்னுடம்புவீசிற்றேற
கம்பமிகுந்துபதினைந்துநாண்மேலியமன்கையுறுவா
ணிம்பருலகம்வெறுத்தென்பாரெல்லாமுணர்ந்தவல்லோரே. (௧௨)

உள்ளம்புலர்ந்துபுகைசென்னியுதித்துவரல்போற்றோன்றிடினும்
விள்ளவிலதாயெப்போதுங்கம்பமுடலின்மேவுகினும்
வள்ளற்பரமனடிதொழுவீர்வகுக்குமொருபானாள்கழியக்
கள்ளவியமன்விடுதூதர்கைப்பாசக்கட்டுறுவனால். (௧௩)

(கோச்சகக்கலிப்பா.)

இரவணம்பல்லூகம்வானரங்கரத்துள்யாதேனும்
விரவநுகம்பூண்டதேர்மிசையேறிக்கொண்டேனும்
பரவுகறுப்பாடைபுனைபைந்தொடியாருடன்கூடிக்
கரவறுநன்மாதவத்தீர்கானடையாநடந்தேனும். (௧௪)

தாவுசிதப்பரியேறிக்கொண்டேனுந்தலைவிரித்துப்
பாவுரைத்தாடுதல்செய்துகொண்டேனும்பகரியமன்
மேவுதிசைகுறித்தேகக்கனுக்காணின்மிகவிரைந்து
சாவுறுவனென்றுரைப்பார்சாத்திரமெலாமுணர்ந்தோர். (௧௫)

தன்னுடையகூறைகிழிதரக்கனவுகண்டாலுந்
தன்னுடையகூறைகருநிறஞ்சாரக்கண்டாலுந்
தன்னுடையவரைகூறைதவிர்ந்திருப்பக்கண்டாலுந்
தன்னுடையமனையகத்துச்சாவுறுவர்யாரேனும். (௧௬)

பகலினுடுவிரவமரர்பதிசிலையொண்மதிகதிரி
னகலருஞ்செந்நிறங்கரியநிறமவர்மண்டலப்புழையே
புகலும்வெளியிடையரத்தமாலையிவைகளிற்பொருந்த
விகல்செயெதுகண்டாலுமிற்றெழுழிவானப்பொழுதே. (௧௭)

சுடுவனத்துக்கழிசாம்பர்துகள்கொண்டமயிர்க்குவியல்
கடுகிவருபுனலின்றிக்காய்ந்தவறுநதியிவற்றுட்
படுகனவில்யாதேனுங்காண்பானேற்பதைபதைத்து
நடுவனகர்விரைந்தடைவானென்றுரைப்பார்நல்லோரே. (௧௮)

முழுநீலநிறத்தராய்முண்டிதராயுள்ளோர்கள்
பழுதாகமிகவருத்திப்பாடாணங்கொண்டெறிய
வழுவாதகனக்காணின்மரணமுறுவான்விரைந்து
தொழுவாருக்கருள்பரமன்றுனைத்தாடங்கியவுளத்தீர். (௧௯)

கதிருள்சீத்துதயமெழுகாலத்திலபிமுகமா
முதிர்நரிகளூளையிடின்முடிகுவன்வாழ்நாள்விரைவி
லதிரவடிக்கடிகம்பமஞ்ஞானம்பயஞ்சோபம்
பிதிர்விலிவற்றேதுறினும்பெருமனையுள்ளார்முடிவர். (௨௦)

செய்யநாவுலர்ந்தாலுந்திகழ்தருபற்கறுத்தாலும்
வெய்யகொதிப்பிருதயத்துமேவுறினுமவன்மனையி
லையவடைந்துள்ளாரில்யாரேனுமப்பொழுதே
வையமருவுதலொழிப்பார்மாதவத்தாலுயர்ந்தீரே. (௨௧)

செவிநயனங்கீழ்மேலாய்த்திறம்பிடினுஞ்செந்நாசி
புவியிகழவக்கிரமாய்ப்போனாலுங்கபோலநாச்
சவியறுநீணிறமாகச்சமைந்தாலுங்கவுள்சேப்பக்
குவிமுகம்விகாரமேகொண்டாலும்விரைந்திறுவான். (௨௨)

குருடுசெவிடுற்றாற்போற்குலைந்தவனுள்வீழ்ந்தாற்போல்
வெருவுகணுக்கண்டிடினுமேற்பார்வையேயுறினு
மருவுமுடல்சீதளமேசுவைகினுமூத்திரந்தழனீர்
பொருவவெளிக்கொண்டிடினும்போயொழிவன்விரைந்துணர்வீர். ()

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

கனவினிடத்துந்திமினேனுங்காமரிதயத்தலத்தேனுந்
துனைவினுள்ளம்பதைபதைப்பத்துவாரம்பொருந்தக்கண்டாலு
நனவிற்கனவிறெருவரெதிர்நண்ணியடிக்கக்கண்டாலு
நினையுமுன்னருடல்கழிப்பானென்மனூர்நன்னெறியுணர்ந்தோர். ()

இரவுகாணுங்கனவிடைத்தானெழுந்துகனவில்வீழ்ந்ததா
விரவுமாறுகாணினுந்தன்வெள்ளைக்கூறையிடைக்கருமை
பரவுமாறுகாணினுமெய்பாற்றிமுடிவனப்பொழுதே
யரவுமாறுமுடிக்கணந்தோனடிக்காளாயபெருந்தவத்தீர். (௨௫)

இவைமுன்னுயவரிட்டங்களெய்துங்காலையச்சமொரீஇ
நவையினழுத்துமோகாதியடங்கத்துறந்துநல்லுணர்வு
கவையின்றுகுநிலைகொண்டுகணப்போதேனுந்தரியாமற்
சிவையொன்றுனதிருமேனித்தெய்வப்பிரானைநினைந்தெழுந்து. ௨௬

வானநாடர்பணிந்தேத்தவயங்குங்காசிநகரடைந்து
கானமலர்கள்பரப்பிவருங்கங்காநதியன்பொடுமூழ்கிக்
கூனன்மதிசெஞ்சடையிலங்கக்கொன்றைமாலைமணங்கமழத்
தூநலடியாருளத்தமர்விச்சுவநாயகனைத்தொழுதேனும். (௨௭)

சோமன்பூசித்தருள்பெற்றசோமநாதத்தலமடைந்து
சோமதீர்த்தத்தினுந்தாளஞ்சொரியும்வீரையினுமூழ்கிச்
சோமன்றவழுந்திருமுடியிற்றும்பைமாலைமிலைந்திருக்குஞ்
சோமநாதமாதேவன்றுணைத்தாண்மலர்கடொழுதேனும். (௨௮)

சயிலமனைத்துந்தொழுதெழுசீசயிலமெனுமாதலத்தடைந்து
சயிலமனையவினையனைத்துந்தகிக்குநீறுதகப்புனைந்து
சயிலமங்கையிடப்பாகத்தம்பிரானைவடகனகச்
சயிலங்குழைத்தமல்லிகார்ச்சுனனைத்தாழ்ந்துதொழுதேனும். (௨௯)

திருக்காளத்திவரையென்னுந்திசைபோஞ்சீர்த்தித்தலமடைந்து
கருக்காளத்தியக்கமறக்கதிர்பொன்முகரியாடிமதப்
பெருக்காளத்தியுரிபோர்த்தபிரானையுமையாள்கலந்ததிரு
வுருக்காளத்தியீச்சுரனையொழியாவன்பிற்றொழுதேனும். (௩௦)

சத்திபூசைபுரிந்தருள்கோசயிலமென்னுந்திருத்தலநே
சத்தினடைந்துபுனன்மூழ்கித்தாவாதன்றேயுற்றபா
சத்தினீங்கவெண்ணீறுதயங்கப்புனைந்துசத்தியிடச்
சத்தியீசன்சிலம்பணிசெந்தாட்டாமரைகடொழுதேனும். (௩௧)

திகழும்விருத்தாசலமென்னுந்தெய்வத்தலஞ்சார்ந்துற்பவவே
ரகழுமணிமுத்தாநதிநீராடியலங்கநீறுபுனைந்
திகழுங்குணங்களிரித்தார்க்கேயின்பமருளுங்கோமானைப்
புகழும்விருத்தாசலப்பரனைப்பொற்றாமரைத்தாடொழுதேனும். ()

இராமன்பணிந்துபூசித்தவிராமேச்சுரத்தையடைந்துவினை
யிராமலறுக்குங்கடற்றீர்த்தமினிதுமூழ்கிநீறுபுனைந்
திராமமடவாள்கூறுடையவிறையைப்பிறைசூடியபரனை
யிராமநாதப்பெயருடையவெம்பிரானைத்தொழுதேனும். (௩௩)

மன்னும்பூவிற்சிவலோகமென்னுமதுரைமாநகர்சார்ந்
துன்னுந்தீர்த்தப்புனலாடிமின்னுமொளிவெண்ணீறணிந்து
பன்னுமறையுநாடரியான்முன்னுமவர்பானின்றகலான்
றுன்னுங்கருணைமதுரேசன்பொன்னுந்தொழுதாடொழுதேனும். ()

வேதம்பணிந்துபூசித்தவேதவனநற்றலஞ்சார்ந்து
வேததீர்த்தங்கடற்படிந்துவேதவிதியினீறணிந்து
வேதந்தருளுமொளிர்முத்தைவேதம்புனைதேர்மாமணியை
வேதவனக்கற்பகத்தைமனவேதம்விலகத்தொழுதேனும். (௩௫)

சொன்மீனயனத்துணைவறுந்தேமின்றிவிளைதண்பணைசூழும்
வன்மீகப்பொற்றலமடைந்துமறிவெண்டிரைநித்திலங்கொழிக்கும்
பன்மீனிலையகிரகுண்டம்படிந்துபதுமாலயமடந்தை
புன்மீன்விழியெற்பாழிபுனைபுராணன்மலர்த்தாடொழுதேனும் (௩௬)

(மேற்படிவேறு.)

கூறுகெசாரணியஞ்செபேச்சுரந்தக்கணுவருத்தங்கும்பகோணம்
வீறுபெறுமத்தியார்ச்சுனமிவற்றுளொதையேனும்விழைந்துசார்ந்து
பேறுநினைத்தார்க்குமருள்காவேரிப்புனல்படிந்துபிரானார்தாண்மே
னுறுமலர்தூவிவலமுறப்பணிந்துகனிந்துதுதிகவிற்றியேனும். (௩௭)

மறைபுகல்கோபடுதீர்த்தமங்களவமிசகம்வளரக்கினீச, நிறைபுகழாம்பிரதீர்த்தங்கோடிகாசியநிலவுதிருநித்தான, மறைபிரமபுரஞ்சுவேதாரணியமிவற்றுளொன்றையன்பிற்சார்ந்து, பொறைமலிகாவேரிகடற்சங்கமந்தோய்ந்திறையவரைப்போற்றியேனும். (௩௮)

தன்னுடையவருவாய்க்குத் தக்கதனதானியதானமுநல்லோர்பா, லென்னுடையவினைதொலைய வேற்பீரென்றினிதுபுகன்றீத்துநாளு, மின்னுடையப்பொலிசடிலவிமலனாருளுன்னிவிதிவழாது, மன்னுடையவைந்தெழுத்துஞ் செபித்திருத்தல்வேண்டுமொல்வகுக்கினின்னும். (௩௯)

மறைமுடிவிற்புகல்வியாக்கிரபுரத்தையடைந்து பலமலர்கள்பூத்து, நிறைதருநற்சிவகங்கை விதிப்படிமூழ்குபுவயங்குநீறுபூசிப், பிறைமுடியம்பலத்தாடும் பெருந்தகைபொற்றாமரைத்தாள் பேணிப்போற்றி, மிறையில்பிரதக்கணஞ்செய்தைந்தெழுத்துங்கணித்திருக்கவேண்டுமாலோ. (௪௦)

முன்னுசிதம்பரவாசஞ்செய்துடனீப்பவரெவர்க்குமுத்தியுண்டு
மன்னுமந்தத்தலமடைந்தமாத்திரத்தேபாவமெலாமாய்ந்துபோகுந்
தன்னிகரிலம்பலத்தானந்தநடம்புரிபரமன்றரிசனத்தான்
மின்னியபேரானந்தப்பெருங்கதியுண்டிஃதுண்மைமேன்மைமிக்கீர்.

அத்தலநற்றரிசனமாத்திரத்தாலேபலர்முத்தியடைந்தாரென்று
உத்தமனானந்தநடந்தரிசித்தோரின்பமுத்தியுறுவாரென்று [லோ
வித்தகமாதவப்பெரியீராளவைகளுங்கொண்டுரைக்கவேண்டுங்கொல்
வித்தலத்துக்கொப்புயர்வாகியதலமற்றெவ்விடத்துமில்லைமாதோ. ()

தேவர்பிரான்றிருநடனம்புரிதலினற்றரிசனமாத்திரத்தினாலே
யாவருமானந்தமுத்தியடைதலினன்ஞானவுருவாயவம்மை
யோவருநற்பிரசன்னமாகியுறைதலினலொண்டில்லைமுத்தி
மேவருதற்சார்ந்துடல்விட்டவர்க்களிக்குங்காசியினுமிக்கதம்மா. ()

பண்ணவர்கள்குடிகொண்டு போற்றிசைக்குஞ் சிதம்பரநற்பதி
யில்வாழ்வோ, ரெண்ணரியதெய்வமான் மியம்படைத்தவத்தலத்தி
னிச்சையின்றித், தண்ணறுமந்தாகினிசூழ்காசியில்வந்திறந்தாலுஞ்
சாரார்முத்தி, நண்ணருமச்சிதம்பரமாத்தலவாசந்தரிசனமெஞ்ஞான்
றுநன்றே. (சச)

நாற்பத்தாறாவது

மரணக்குறியுரைத்த வத்தியாய முற்றிற்று.

ஆக அத்தியாயம் சகூ-க்குத் திருவிருத்தம் கஅசஅ.

உ

## நாற்பத்தேழாவது

## பாவபரிபாகமுரைத்தவத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

ஓவுலருமேத்துபரமுத்தனையெம்முள்ளத்
தோவரியவித்தகனையுள்ளுமறிவுள்ளீர்
மேவுமரணக்குறிவிளங்கவுரைசெய்தாம்
பாவபரிபாகமும்பகர்ந்திடுவமாலோ.

மறையவரைமாட்டியவன்மன்னுகயரோகி
நிறைபடுகள்ளுண்டவனிரம்புநகைகேரியன்
முறையில்பொலங்கள்ளினவன்மொய்த்தவுகிர்நோய
னறைகுருவில்வேட்டவனழிந்தசருமத்தன்.

குரவனையெண்ணாதுகொடுநிந்தைகள்புரிந்தோன்
கரமடிமுடங்குருடுகாதுசெவிடாவன்
பரவொருவர்போற்பகர்புநிந்தைபலசெய்தோன்
விரவுகழுதைக்குரல்விரித்தகுரலுள்ளோன்.

ஆசிரியன்வாடவவமானமதுசெய்தோன்
பேசினிகவாதபெரும்பித்தமுறுமென்று
மாசிரியனுணையையழித்தவறிவில்லான்
காசிரியலாக்கொடும்பகந்தரவெங்நோயன். (௫)

ஆரியனடித்தொழிலையாற்றுதல்செயாதா
னூரிகழமந்தவறிவுற்றுழல்வனம்ம
சீரியனுமாயவனைநிந்தைமுதல்செய்தோன்
பாரியனுமோர்ந்தியுருவாய்ப்பளகின்மூழ்கும். (௬)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வேதம்வேதாந்தம்வேதஞானத்தைநிந்தைசெய்தோன்
போதமில்புலையனுவன்பூப்புடைமடவார்த்தோய்ந்தோன்
பாதகக்கடைஞனில்லிற்படரழல்வைத்தோன்வாளாற்
கோதமைகொலைசெய்தோனஞ்சூட்டினோன்குட்டரின்னோர். (௬)

வெள்ளிகள்ளியவனுளும்விடுபடாக்காசநோய
னெள்ளியகருமஞ்செய்தோனியைந்துபொய்க்கரியுரைத்தோன்
றன்ளியவிவர்க்குபாயஞ்சாற்றினோன்சகாயஞ்செய்தோ
னள்ளியகிருமிகிண்டவழுகல்வாயாவரின்னோர். (௭)

இருமுதுகுரவர்தம்மையியைந்தவில்லவலைப்போற்று
தொருவினோன்விழியிரண்டுமொழிவினேய்கொள்ளச்சாம்பும்
பெருகுறக்கொடுப்பேனென்றுபேசிப்பின்கொடாதுவிட்டோ
னருகியவாயுளுள்ளோனுகுவன்புவியின்மாதோ. (௮)

பொருத்தமார்பன்னிமார்கள்பொற்றபல்லோரிருக்க
வொருத்திமேல்விருப்பம்வைத்தோனுழறருமலியேயாவன்
றிருத்தமாயொருவனுண்ணுஞ்செய்யபோனகங்கவர்ந்தோன்
வருத்தமார்பசியுமின்றிமாறிருனேயுங்கொள்வன். (௯)

விருந்தினர்புறத்துவைகவிரைந்துமோடோம்பினேனும்
பொருந்துபல்லோரோடுண்ணும்போதுநற்பதார்த்தமெல்லா
மருந்திடத்தனக்கேயாக்குமறிவிலாதானுமின்னோர்
வருந்திடுகண்டமாலைமாறாதுபூண்டுகொண்டோர். (௧௦)

பஞ்சயாகஞ்செயானூர்ப்பன்றியாமேகநோய
னஞ்சநேர்விழியார்போகம்பருவத்துமயக்கவுண்டோன்
வஞ்சமிலப்பியாகதரையதிதியரைவாழ்த்தி
யஞ்சலிசெய்துபோற்றுனடர்கவுணேய்க்கோட்பட்டோன். (௧௧)

பரிந்துதற்புகழ்ந்துகொள்ளும்பதடிவாமனன்பங்காவன்
விரிந்தபுண்ணியத்துநல்லான்கொலைசெய்தவீரகிலானும்
புரிந்துபகாரஞ்செய்தோர்க்கபகாரம்பொருத்தினேனுஞ்
சரிந்தற்றிவர்பிறக்கும்போதேகொத்தையராய்த்தாழ்வார். (௧௨)

எந்தச்சத்தியகனுல்கமெல்லாம்வியாபித்திருக்கின்று
னெந்தச்சத்தியோரைம்பதெழுத்தின்சொரூபமாய்நின்று
னெந்தச்சத்தியவ்வெழுத்தினியல்விசேடவுருவுற்று
னெந்தச்சத்தியெவைமயளிப்பாளவனையிறைஞ்சித்துதித்திடுவோம். ௩௦

கந்தக்கமலமாதர்முதற்கரையும்பலசொரூபமுளாள்
சந்தப்பிரமன்முதலுயிர்கள்பலவுமகதத்துவமாதி
பந்தப்பூதங்களுமிலயப்படுமோரிடமாய்நிற்கின்று
ளெந்தப்பரைமற்றப்பரைதானென்றுமிறைஞ்சியேத்தெடுப்பாம். ()

அடியாருள்ளங்குடிகொள்ளும்மையாவன்சிவஞான
முடியாவின்பமினிதளிக்குமுதல்வியாவளவள்பதமே
யொடியாவன்பின்வணங்குவாமுரையித்துதியன்புறப்படிப்போர்
கடியாஞானம்பெற்றுவப்பார்கரைந்திட்டாம்பூருவபாகம். (௩௨)

என்றுநவின்றசூதமுனியெம்மான்மலர்த்தாணினைந்திருந்தா
னன்றுவணங்கிமாதவத்தோர்நவிலுத்தரபாகமுமின்னே
யொன்றுமடியேமுளந்தெளியவுரைக்கவேண்டுமென்றிரப்பக்
குன்றுகுழைத்தானடிவணங்கிக்கோதிலாவம்முனிபகர்வான். (௩௩)

நாற்பத்தேழாவது

பாவபரிபாகமுரைத்த வத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம் ௪௭-க்குத் திருவிருத்தம் ௧௦௦௨.

எக்கியவைபவகாண்டத்திற் பூருவபாக முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௦௦௨.



சிவமயம்.

# எக்கியவைபவகாண்டத்தில்

## உத்தரபாகத்தில்

# பிரமகீதை.

---

முதலாவது

## தேவர்பிரமனையடைந்தகாதையுரைத்த வத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

தடநெடுங்கனகச்சிலைகுழைத்தருளுந்தம்பிரான்மலரடிக்காளாய், மடமகன்றுயர்ந்திருத்தரபாகம்வயங்குறுபிரமநற்கீதை, படர்புகழ்ச்சூதகீதையென்றிரண்டாம் பகர்தருமிவற்றுண்முன்னையதிற், கடவுளர்கமலப்பிரமனையடைந்தகாதையையினிதெடுத்துரைப்பாம்.

முன்னமோர்கற்பாந்தத்தின்வண்டிசைப்ப முழுமணங்கான்று தேனூற்றும், பொன்னவிர்கற்பத்தொடையருழ்புயத்துப் புலவர்களோருழிக்கூடிப், பன்னருமறைத்தாற்பரியவிசாரம்பண்ணினரையமுள்ளாராய்த், தன்னமுஞ்சுருங்கா விராகமேற்கொண்டுதவம்பலநாள்புரிந்தெழுந்தார். (௨)

பன்னுறுமமரர்முனிவரர்வணங்கப்பட்டதாய்முழைகளோர்கோடி
மன்னுறுமேருசிகரந்தினூறுயோசனையகலம்வாய்த்ததுவா
யுன்னுறுநூறுயோசனைநீளமுள்ளதாய்மிகுமனோகரமாய்
மின்னுறுபிரமவனமெனவெவரும்விளம்பிடப்பட்டவோர்வனத்தில்.

ஒன்பதுபிரகாரந்துவாரங்களோரிருநாற்பதுபொருந்த, மின்படுகனகத்தாணியமித்தமேதகுதிப்பியநகரிற், கொன்பயில்காலோராயிரநிலைத்தகுலவணிமிகுமுவளகத்திற், றென்படுமணிமண்டபத்திடையொளிருஞ்செய்யபொற்சிங்கவாதனத்தில். (௩)

காமருபனுவலாட்டியோடிலங்குகதிர்மணிமகுடமுன்னாய,நோ மறுமணிகள்விளங்கவீற்றிருந்த தோன்றனான்முகன்முனமடைந்தா, ரேமமிக்கரும்பத்தண்டெனப்பணிந்தா ரீர்ந்துதிபலவெடுத்திசைத்தா ர், மாமறைப்பொருளைப்பகர்ந்தருளென்றூர் மகிழ்வினப்பிரமன்வாய் மலர்ந்தான். (௫)

முதலாவது

தேவர் பிரமனையடைந்தகாதை யுரைத்தவத்தியாய முற்றியது.

ஆகத்திருவிருத்தம்-௫.

உ

இரண்டாவது

## ஐதரேயகவுபநிடததாற்பரியமுரைத்தவத்தியாயம்.

(கலிநிலைத்துறை.)

பாயசேர்த்திசாலந்தணீர்புல்வர்பங்கயனை
மேயவாறுரைத்தனமவனவர்க்கன்பின்விரித்த
நேயமார்தருமைதரேயகவுபநிடதத்
தாயதாற்பரியத்தினையறைகுதுங்கேண்மின். (௧)

ஆதிகாலத்துப்பரசிவனொருவனேயளவில்
சோதியாயிருந்தான்மெருகுபிரபஞ்சமெல்லா
மேதிலாததன்மாத்திரமாகியேயிருந்த
தீதிலப்பரசிவற்குவேறுயொன்றுமிலையே. (௨)

பையராப்பணியணியுமப்பராபரன்சிருட்டி
செய்யவிச்சைகொண்டோங்குதன்னுடைத்திறன்மாயை
மையமில்வலியாற்பிரபஞ்சங்களனைத்தும்
பொய்யில்பேரருள்பொலிதரச்சிருட்டிசெய்தனனால். (௩)

அனையதம்பிரான்றன்னையேபன்மதத்தவரு
நினையும்பல்பெயரிட்டுறநிகழ்த்திமற்றதற்குப்
புனையுஞ்சாதகமாகியதருக்கங்கள்புகல்வார்
வனையுஞ்சேர்த்திசாறேவர்காளாயினுமாதோ. (௪)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

வித்தகமறையிற்கருமகாண்டத்திற்கற்பிதவியாவகாரிகமாஞ்
சத்தியத்துவமுண்டாயமாபவஞ்சத்தையுமுயர்ஞானகாண்டத்தி
லொத்தியல்பாரமார்த்திகசத்தியத்துவமுள்ளதாயிருக்கும்
பத்தியின்மருவுசிவத்தையும்பிரதிபாதித்துச்சொற்றிடுதிறத்தால். ()

சிதர்தராமறையிற்சொற்றதாற்பரியமேபரமார்த்தமாய்த்திகழு
மிதரமார்க்கங்களுட்சிலபுத்தராதியோர்மதங்களவிடத்துங்
கதமுறுவைசேடிகாதிமார்க்கங்களனவிடத்துங்காணப்பட்ட
பதமுறுமுண்மைப்பொருளைநேர்பொருளைப்பிரதிபாதிப்பதினாலும்.

பெரும்பரமார்த்தசத்தியப்பொருளைப்பிரதிபாதியாமையினாலு
மரும்பியவிதரமார்க்கங்கள்பிராந்திமூலகமானவாயிடினும்
விரும்புசத்திபசைதனனியத்தாற்கற்பித்தசைத்தியமுமேவதனிற்
பருங்கடாதிகளுமதிற்சுத்தியிரசிதாதியுமசத்தியப்படினும். (எ)

சுத்தியிரசிதாதிகளினுங்கடாதிசொற்றிடுசத்தியமாயு
மொத்திடுகடாதிகளினுஞ்சைத்தியங்களுயர்வுறுசத்தியமாயும்
வித்தகமருவவெப்படிமேவுமப்படிநனவவத்தையினும்
பித்துறுகனவமசத்தியமிதனிற்சத்தியநனவுபெற்றிருக்கும். (அ)

இப்படியேயச்சொப்பனவவத்தையசத்தியமாயிருந்தாலுஞ்
சொப்பனமதனிற்காணுறப்பட்டுச்சொற்றிடப்படுமொருவத்து
செப்புசாக்கிரத்தின்மருவுசத்தியார்த்தசித்தியையெப்படிச்செய்யு
மப்படியேநன்முத்தியைமருவவறநெறியொழுகுறுகுணத்தீர் (௯)

பெருமறைக்கிதரமானமார்க்கங்கள்பிராந்திமூலகமாகின்றமையாற்
பொருவறுமுத்திசெவ்விதிற்பொருந்தச்சாதகமானதன்றுகு
மருமைசால்குணத்தின்மேன்மைபூண்டுயர்ந்தீரப்படியாயினுமம்ம
மருவுறுமவ்வத்தெய்வங்கள்செய்யவாய்த்திடுமனுக்கிரகத்தால். (௧0)

தெளிமறைமார்க்கம்பிரபலமென்னுஞ்செய்யநன்ஞானமுண்டாகி
யொளிர்குபிரவர்த்தியுமதினுண்டாய்க்கிரமமாயுறபறுளொழிய
வெளிவருமுத்தியாதலினம்மார்க்கங்களுமிகுமுண்மைமார்க்கங்
களியுறத்தோன்றுமவைவுங்கைவிடாதுகாத்தனுட்டிக்கவேவேண்டும்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

வேதமார்க்கத்திருக்கின்றோன்விள்ளுமிதரமார்க்கத்தி
லேதமருவப்பிரவேசித்தாலுமிதரமார்க்கரொடு
காதன்மருவச்சிறுபோழ்துகலப்புற்றுணவுகொண்டாலும்
போதமருவும்யாகங்கள்யொருந்தியவரோடியற்றுகினும். (௧௨)

தக்கதானம்விவாகமேதயங்குமத்தியயனமே
மிக்கவின்பமுண்டாக்கிமிளிர்ஞானோபதேசமே
தொக்கவிவைமுற்காரியங்கள்சூழ்வுற்றவரோடியற்றுகினு
நக்கசாந்திராயணமூன்றியற்றவேண்டுநன்மதியீர். (௧௩)

சிறப்பில்வேதபாகியமார்க்கத்திற்றீக்கைபெற்றொருரும்
விறப்புநீங்கப்பரசிவனைவிதியிற்பூசைசெய்யாரு
முறப்புண்ணியநீறக்கமணியுறுபேரன்பிற்றரியாரு
நிறக்குந்தெய்வம்பிதிரழற்காரியங்கண்முறையினிகழ்த்தாரும். (௧௪)

பஞ்சயாகம்புரியாரும்பகராரணபாகியமார்க்க
நெஞ்சம்விரும்பியுலகளந்தநெடுமால்பூசைபுரிவாரு
மஞ்சன்கரியோனுருத்திரன்மற்றொருவர்க்கொருவரதிகரென
விஞ்சநினையாரபேதமெனநினைத்துப்பேசும்வீணர்களும். (கரு)

மறைகள்புகலும்விதிப்படியேமன்னுசிரார்த்தஞ்செய்யாருங்
குறைவிலுபவாசஞ்செய்தினமதுசெய்யாதகொடியோரு
நிறையுஞ்சதருத்திரியமுதனிகழ்சருக்தம்பலவானு
மறையுங்கழற்காற்பரமன்முடிக்கபிடேகஞ்செய்யாதவரும். (கசு)

செம்பொன்மதில்சூழ்திருத்தில்லைசீகாளத்திமுதலான
வம்பொற்சைவப்பலதலத்துள்பாதாயினுமோர்தலமடைந்து
நம்பியோராண்டுறவாசஞ்செய்யாதாருநல்லுணர்வு
பம்பாசிரியன்பான்மாவாக்கியதாற்பரியங்கேளாரும். (கஎ)

பரமவஞ்சவாச்சிரமப்பற்றிலாதுவெறுப்பாரும்
விரவநுதலினீறொழித்துமேனோக்கியபுண்டரமேனு
மருவுமருத்தமதிவடிவமாகவேனுமதியாம
லொருவுவட்டவடிவாகவேனுமுறக்கொண்டுழல்வோரும். (கஅ)

சங்கநேமிமுதலாக்சாற்றுநிற்குமங்கிதங்க
ளங்கம்புனைந்துதிரிவாருமறையுஞ்சுருதிமிருதிசொலுந்
துங்கவாசாரத்தையனுட்டியாததோடமுடையாரும்
பங்கமாருமிவரெல்லாம்பாடண்டிகளாகுவர்மன்னோ. (ககூ)

தீரமிகவுமுடையராய்த்தேவதேவன்பிரசாத
மாரவடைந்ததன்மையராயறிவாலுயர்ந்துவிளங்குவோர்
பாரமாகவேதவிதிப்படியேநடந்துபளகில்லா
வாரமுடையராய்முத்திமருவாநிற்பரெஞ்ஞான்றும். (உ0)

என்றுதவளாம்புயபீடத்திலங்கும்பனுவலாட்டிமுலைக்
குன்றுதிளைக்குந்தடநெடுந்தோட்குன்றமிருநான்குடையபிரா
னன்றுநவிலக்கேட்டுவப்புற்றமரர்யாருமுகமலர்ந்தார்
கன்றுபொறியைந்தையுமடக்கிக்காமர்தவத்துமேம்பட்டீர். (உக)

இரண்டாவது

ஐதரேயகவுபநிடததாற்பரியமுரைத்த வத்தியாய முற்றிற்று.

ஆ அத்தியாயம் உ-க்குத் திருவிருத்தம் உசு.

௨

மூன்றாவது

# தைத்திரீயகவுபநிடததாற்பரியமுரைத்த வத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

அருமறைக்கிழவன்கடவுளர்தெளியவைதரேயகவுபநிடதப்
பொருளினையுரைத்தபடி நுமக்குரைத்தாம்புகாறுமறைபுகல்சைவ
தருமநன்காற்றியுயர்ந்தவந்தணிர்காள்தைத்திரீயகவுபநிடதத்
திருகறுதாற்பரியமுமப்பிரமன்செப்பியபடியுரைத்திடுவாம். (௧)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

சாற்றுசருவான்மனாகியசிவனேயுலகெவைக்குஞ்சாட்சியாவன்
ரூற்றுசகந்தான்சடமாகின்றமையினூற்பானஞ்சுயமேயில்லை
யாற்றலுறுபானந்தான்விஞ்ஞானத்தாலேயுண்டாகுமென்று [மின்.
போற்றியுரைத்திமெதங்கூடாதென்னையெனினஃதுபுகலக்கேண்

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

விஞ்ஞானமவிகாரியாதலாலே மிகுபரிணாமஞ்சொலக் கூடாமை
யானும், விஞ்ஞானந்திரவியமல்லாமையானு மேவுமந்தமதத்திலெடு
த்துரைக்கும்பானம், விஞ்ஞானமுளீரசத்தாம் விதத்தினானுமினிரா
ரம்பகத்துவஞ்சாராமையானும், விஞ்ஞானவுற்பன்னம் பானமன்று
விளங்குறுநற்குணத்தீர் நித்தியமேயோர்வீர். (௨)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பானவிஞ்ஞானங்கடமக்குற்பத்திப்பிரதீதிபகர்பிராந்தி
யானதனாற்பானசொரூபமதாயுஞ்சருவான்மாவாயுநிற்கு
மீனமறுபரசிவனேசாட்சியவனொளியாற்கற்பிதமதாமஞ்
ஞானசம்பந்தத்தாலேகரணமிராகாதிகட்குாண்ணும்பானம். (௩)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

மருவுபிராணாதிகள் பாகியவிடயஞ் சிற்சில்வத்துகண் மற்றிவை
க்குமுறையே சித்தவிருத்தி, யொருவறுமூலகமாயு மிந்தியசம்பந்த
முற்றமூலகமாயு மோங்கனுமானாதிப், பொருவின்மூலகமாயுஞ் சிற்
பிரகாசத்தாற்புகல் பானம்வருமனதிச்சுயமேயின்றாகும், பெருகுறு
கற்பிதபேதந் தன்னையனுசரித்தல் பெற்றிருக்குஞ்சீவனுமச் சிற்பிர
காசத்தால். (௫)

பரவுதசேந்திரியவியாபாரங்களனைத்தும் பண்ணுகின்றானத்தகு
சித் சொரூபஞானத்தை யிருதயமென்பார்சிலர் நன்மனமென்பார்
சில்லோரேற்றிடு சஞ்ஞானமே யென்றுரைப்பார் சில்லோர், புரவு
மிகுமாஞானமென் றுரைப்பார்சில்லோர் பொலிதருவிஞ்ஞானமே
யென்றுரைப்பார் சில்லோர், விரவுபிரஞ்ஞானமேயென்றுரைப்பார்
சில்லோர் மேதையென்பர்சிலர் திருட்டியென்றுரைப்பர்சிலரே.

திருதியெனநவில்வர்சிலர்மதியென்பர்சில்லோர் சிலர்வசமென்
றுரைப்பர் சிலர்மனீஷையெனநவில்வ, ரிருதியென்பர்சிலர்கிரது
வெனமொழிவர்சில்லோ ரியைதருசங்கற்பமே யென்றுரைப்பர்சில்
லோர், மிருதியென்பர்சிலர்காமமென்றுரைப்பர்சில்லோர் விளம்பு
மிவைபிரஞ்ஞானசொரூபசிவனுடைய, பொருவினாமங்களேயாகு
மெனத்தேர்வீர் புண்ணியத்தான்மேம்பட்டுப்பொலிகின்றவுணர்வீர்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பிரமன்முதற்றாபரமீறாப்பேசாநின்றவுலகமெலாம்
பாவுமந்தப்பரசிவனேபண்பாரந்தப்பரசிவன்றன்
சொரூபஞானமுள்ளோனே துலங்குசீவன்முத்தனாங்
கருமமாதிகளாற்சீவன்முத்தனாகான்கடைப்பிடிமின். (௮)

(மேற்படிவேறு.)

மாயையொடுவிரவுமந்தச்சிவத்தினின்றும்பழுதைமாசுணமேபோல
வாயவபஞ்சீகிருதசூக்குமவாகாயமுமற்றதினிருந்து
வாயுவுமற்றதினழலுமதிற்சலமுமதினிருந்துவயங்குமண்ணும்
பாயவபஞ்சீகிருதமாகவேயம்மாவுற்பத்தியான. (௯)

கரவில்சிவாக்கினையினச்சூக்குமபூதங்களைப்பஞ்சீகரணஞ்செய்து
பரவுபலபுவனவுருவாயவண்டங்கற்பிக்கப்பட்டதென்று
லுரவுறுமப்பிரமாண்டவுதரத்திற்கருமத்துக்கொப்பத்தேவர்
நரர்பசுவாதிகள்யாவுஞ்சிருட்டிசெயப்பட்டனவானன்மைமிக்கீர். ()

அதனிடைக்கோசங்களைந்துமொன்றற்கொன்றுறுபேதமாயிருக்கு
மதமுறுநலன்னமயம்பிராணமயத்தாலஃதுமனோமயத்தா
லிதமுறதுஞானமயத்தாலஃதானந்தமயத்தாலேயென்றும்
பதமுறுபூரணமாமவ்வானந்தமயநிறைவுபடுஞ்சிவத்தால். (௧௧)

உன்னுசருவாந்தரபூரணமானபரசிவமற்றொன்றனாலே
துன்னுபூரணமன்றுதிகழ்தருசத்தியாதிபலசொரூபமாகி
மின்னுமந்தப்பரசிவமேயிரதமாமவ்விரதமிகவடைந்து
பன்னுபரமானந்தமயமாகியேயிருப்பான்பண்பார்தேசி. (௧௨)

அனையபரசிவத்தாலேதேகிக்குச்சேட்டையாதிகளுண்டாகுந்
தனைநிகரபேதசிவஞானமுளோனபயமேசாராநிற்பன்
புனைவறுபேதப்படுஞானத்தினென்றும்பந்தபயம்பொருந்திநிற்கும்
வினையில்வளிமுதற்சுரருக்கப்பயமேவுறிற்பிறர்க்குமேவுறாதோ. ()

எச்சிவத்தினுடையபேரானந்தவிலேசத்தாலின்றேனூற்றும்
பச்சிணர்ப்பூந்துளவன்முதலோரதிகநானமாப்பகரானந்த [கிற்கு
மெச்சிடவுற்றிருக்கின்றூர்சுரோத்திரியனென் றுரைப்போன்மேவா
நச்சியவானந்தமுமெச்சிவசொருபமாயிருக்குநாளுநாளும். (கச)

உருத்திரனூரணன்முதலோ ரிருதயத்திற் சாட்சியாயுறுவான்
யாவன், விருத்திகொளிந்திரியங்கண்மனவாக்குக்ககோசரமாய்மிளிர்
வான்யாவன், திருத்திகழுநிற்குணவப் பரசிவன்றன் ஞானத்தைத்
தெளிந்தவாசா, னருத்தியொடு முபதேசஞ்செயப்பெற்றேூன் கரும
பந்தமகன்றமுத்தன். (கரு)

உமைபாகன்பிரசாதத்தாலத்திநாத்தியெனுமுலகம்யாவு
மமைவாருநிற்குணவானந்தசொருபமேயாகித்தோன்று
மிமையீரிஞ்ஞானமுள்ளோனிவ்வருத்தந்தனையேபிரதிபாதிக்குஞ்
சமைவாருநெடுஞ்சாமவேதகானஞ்செய்வான்றவிர்தலின்றி. (கசு)

இலவுகிககானத்தாற்சிவப்பிரசாதந்தவிராதெய்துமாகில்
விலகலில்வைதிககானத்தாலாதலெடுத்துரைக்கவேண்டுங்கொல்லோ
பலர்புகழ்வைதிககானஞ்செய்வதனுக்கசத்தியுற்றபண்பினூனேற்
குலவிலவுகிககானநாடோறுஞ்செயல்வேண்டுங்குறிதப்பாதே. (கஎ)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

உரைக்குமிச்சிவகீர்த்தனத்தாலேயோகஞானநன்மூலகமாக,வி
ரைக்குமுத்திசித்திக்குமாவிந்தவேததாற்பரியத்தினைப்பத்தி, யரைக்
குமீனர்க்குச்சொற்றிடல்கூடாதறிமினேவெனவறைந்தனன்செந்தா,
மரைக்குநாயகன்கடவுளர்கேட்டுமகிழ்ச்சிபூத்தனர்மாதவப்பெரியீர்.

மூன்றுவது

தைத்திரீயகவுபநிடததாற்பரியமுரைத்த வத்தியாய முற்றிற்று.

ஆ. அத்தியாயம் கூ-க்குத் திருவிருத்தம் சஅ.

உ

நான்காவது

## சாமசாகோபநிடததாற்பரியமுரைத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

தாமநாண்முளரிதுயறடங்தோளன்சொற்படிமாதவத்தின்மிக்கி
ரேமமார்தருதைத்திரீயகால்லுபநிடதமிசையாநிற்குங்
காமர்தாற்பரியமுரைத்தனமங்நாண்முகனமரர்களிப்பச்சொற்ற
சாமசாகப்பெயர்கொளுபநிடததாற்பரியஞ்சாற்றுவாமே. (க)

(கோச்சகக்கலிப்பா.)

தாவில்சுயம்பிரகாசனாய்ச்சருவசாட்சியா
யோவில்பெருஞ்சமுசாரமோசகனாயுத்தமனாய்
மேவியநற்கருணையனாய்விளங்காநின்றிடுகடவுள்
காவிமலர்க்கண்டநுதற்கண்ணுடையானொருவனே. (௨)

பிராணன்மனந்தசேந்திரியமுதலாகப்பேசெவையும்
பராபரன்மற்றவனுடையபகர்மாயாவசமாக
விராவவனாற்பிரேரிதமாயவ்வவிடயங்களிலே
யொராதுபிரவர்த்தித்துக்கொண்டிருக்குமும்பர்காள். (௩)

இனியபுகழ்மயேச்சுரன்றனிடத்தாரோபிதமான
மனமுதலாயினவற்றைத்தானடைந்துமற்றவைக்குக்
கனிவுமிகூஉப்பல்பொருளுங்கவர்வலியுஞ்சலியாமே
தினமுமவ்வவியாபாரஞ்செய்வலியுங்கொடுத்தருள்வான். (௪)

இந்தமனமுதலானவெல்லாமப்பரசிவனைச்
சந்தமுறப்பரிசிக்கமாட்டாதச்சங்கரனும்
பந்தமுறுமிவைகளுக்குக்கோசரமாகான்பன்மறை
யந்தநவிலப்பொருளுக்கன்புசாலமரீரே. (௫)

எப்பிரகாசத்தாலெல்லாம்பிரகாசப்படுமச்
செப்பரியபரசிவத்தைத்திகழ்பிரமாணத்தாலுந்
தப்பில்குருமொழியாலுஞ்சுவானுபவந்தன்னாலுந்
திப்பியமாத்தெரிந்துகொள்வோன்சீவன்முத்தனெனவுணர்மின். (௬)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

பிரமஞானம்பயில்கடாதிஞானம்புகல்பிராந்திஞானம்
பரவிவற்றுளான்மாசெய்வானுஞ்செய்பொருளுமலன்பகருங்காலை
விரவுறுவியாவகாரிகதிருட்டியால்வித்தையோடவித்தை
பிரமத்தினுதிக்குமலாற்பரமார்த்தமாய்த்தோன்றப்பெறுதுமாதோ.

கேவலதத்துவமேதோன்றிடுமிந்தத்தாற்பரியங்கிளருணர்ச்சி
மேவுகுருவுபதேசத்தாலும்பூசாதிகளால்விரவாநிற்குந்
தாவில்சிவப்பிரசாதத்தாலுமுறுமிஞ்ஞானஞ்சார்ந்துளோர்க்குப்
பாவுகிரியாவாச்சிரமதருமாதிகடோன்றாபரனேயன்றோன். (௮)

அவனுடையவைபவமான்முதலோராலுங்கரையவாகமாட்டா
துவமையிலாவிஞ்ஞானமதிகாரமுண்டாயவுடம்பின்கண்ணே
நவமுறச்சம்பவிக்குமன்றிமற்றொருதேகத்தின்கணண்ணமாட்டா
திவர்புகழான்மாவொருவனேபலுடல்களினுமொளிர்ந்திருத்தலாலே,

முத்தனுனவன்மற்றோர்தமையெலாமுத்தரென்றேமுன்னுநிற்ப
னுத்தமமெய்ஞ்ஞானசாதனமுளோன்பிராரத்தமுளவுடரக்கு
மெத்துபரமார்த்தஞானம்பேதருமைனமிவையேமேவாநிற்பன் [ம்.
பத்தமுறப்பிராரத்தஙசித்தபினமுன்றுவயாவும்பரமாய்த்தோன்று

உத்தமவத்தகையோர்க்குத்தள்ளறமுவப்படுதலொன்றுமில்லை,
யொத்தபரசிவற்கயலா மாயையினெச்சகமுமுண்டென்றுரைப்பர்சி
ல்லோர், பெத்தமின்மாதேவனுடை மகத்துவத்திற்கனுபபத்திப்பிர
சங்கந்தான், சித்தமருவுறவருமாதலி னவ்வாறென்ஞான்றுஞ்செப்
பொணுதே. (௧௧)

ஆதலினுன்மாதேவனொருவனேபூரணமாயவிர்வானெங்கு
மேதகுமற்றவனுக்குவேருயொனறேனுமிலைமிளிர்தருக்க
மூதறிவிஞேர்புகழும்பிரமாணமுதலாகமொழியும்யாவு
மோதல்செயித்தாற்பரியத்தேமுடிவாயிருக்குமாலும்பரோர்மின். ()

இத்தகையபரமவத்துவிதஞானமதிருடிமிறையவற்கு
முத்தமியாகியவுமைக்குஞ்சுபாவமாயுளதுமலருறுமெனக்கும்
வித்தகமாயவனமுதலோர்தமக்குமவனனுக்கிரகத்தாலேமேவு
மொத்தசுபாவத்தினிலைமணமலர்க்கற்பகமாலையுறுபுயத்தீர். (௧௩)

வயங்குசிவப்பிரசாதமுண்டாகிலெவ்வுயிருமருவுஞானம்
பயங்குலவுமுகின்மேனிகாரணனும்யானுமற்றைப்பண்புளோருந்
தயங்குசிவஞானமோருயிர்க்களிக்கத்தக்கசுதந்தரரேயல்லர்
நயங்குலவுகிரமசாதகர்களாயேயிருப்போநன்மைமிக்கீர். (௧௪)

அம்மகாதேவனைமற்றவனருளாற்றெரியினன்றியாரேவல்லார்
செம்மைசேர்மற்றொன்றாற்றெரிவதற்குமற்றவன்றன்றிகழ்சொரூப
நன்மைதிகழ்வைபவாதிகள்சிறிதேனுந்தெரிந்துநவிலும்வல்லர்
மும்மையுலகத்துமிலர்முறிசெறிபைங்கற்பகப்பூமுடிவாறேரே. ()

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

முன்னரோர்காலத்தரம்பையர்களபமுலைமருப்புழுமகன்மார்பப்
பன்னருஞ்சுரரும்வாள்வலிபடைத்தபற்பலவசுரருங்கூடிக்
கன்னகுதிணிதோண்மரீஇயகண்டேதிகதித்தெழுப்பொருதழியசுரர் [ர்
கொன்னகுவாளாற்ருக்கிடப்பட்டுக்குலைந்துடைந்தோடினர்வானோ

வானவர்வருத்தநோக்குபுகருணைமருவுருக்கொண்டவெம்பெருமா
னீனமில்வலிமிக்களித்திடவமரரேட்டைதீர்ந்தசுரரைத்துரந்து
மானமிக்கரும்பநெடுஞ்சமராற்றிவாகையேபுனைந்தனர்தருவ
ரூனமிக்கடைந்துமுகனுளஞ்சாம்பியோட்டெடுத்துய்ந்தனர்மாதோ

குருமதியிலேந்தானருளினால்வெற்றிகொண்டனமென்றுணராமன், மருவலர்தமையாமேபுறங்கண்டு வாகைவேய்ந்தனமெனத்தருக்கித், திருகுறுமுளத்துத்தேவர்களிருப்பத் தீமையேமுளத்தினும்புகுந்து, பொருவருகருணையமிழ்தமுஞ்சமழ்ப்பப்பொழிசிவபிரானஃதுணர்ந்து. (௧௯)

தெரிவதற்கரியானெனத்தனைமறைகள்செப்புறுமொழிவிளக்கிடவும்
விரிவுறக்கிடந்தசுரர்மனத்தருக்கைவீட்டவுந்தனதுபேரருளா
லரியதற்புதமென்றியாவரும்வியப்பவமைந்தவோரியக்கருபத்தைப்
பிரியமோடடைந்துதருக்ககலாவப்பெருவலித்தேவர்முனின்றான். ()

பண்ணவரிறும்பூதெழநனிநோக்கிப் படரழற் பிரான்முகம்பாராக், கண்ணகலாவிவ் வனப்பொடுநின்ற காளையையாரெனத்தெரிந்து, திண்ணநீவருதிவிரைவினென்றேவச் செஞ்சிகைப்பலகொழுந்துலகந், துண்ணெனப்பரப்பும்வன்னியுமன்னோர்சொற்கொடுபிரான்மருங்கணைந்தான். (௨௦)

அருகணைதழலை நோக்கியெம்பெருமான் யாரைநீயெத்தொழில்வல்லை, திருகறவிரைவி னுரைத்தியென்றிடலுஞ் செந்தழற்கடவுளென்னுமம், பெருகுமெண்கோடி கூற்றிலோர்கூற்றுற் பேருலகனைத்துநீறுக, வொருநொடிப்பொழுதிற் றகித்திடவல்லேனென்றனனுண்மைசற்றறியான். (௨௧)

கேட்டமாதேவன் குறுநகைமுகிழ்த்துக் கிளர்துரும்பொன்றெதிர்நாட்டி, வாட்டமினினதுவலியெலாங்கொண்டு மற்றிதைத்தகித்தியென்றுரைப்ப, நீட்டமுற்றெழுந்துமானம்வாதிப்பஞரேலெனச்செந்தழறனது, நீட்டரும்வலியாவையுமுறத்தெரித்துந் திரணமவ்வாறிருந்ததுவே. (௨௨)

கண்டனன்வன்னிப் பண்ணவனேயேகரைந்தநம்வலியென்றிருந்த, தண்டர்கள்காணி னகைப்பரேயென்று வடங்கருநாணமும்பயமுங், கொண்டனன்றலையுஞ் சாய்த்தனனடந்து குறுகினனமரர்தங்குழாத்தை, விண்டனனவனை யறிகிலனீவிர் விழைந்துசென்றறிமின்களென்றே. (௨௩)

வாயுவைவானோரனுப்பினர்மீட்டுமற்றவன்றானும்வந்தழல்போ
லாயினனமரரனைவருமிவ்வாறடுத்தடுத்துறுமவமானமே
மேயினர்பின்னர்விம்மிதமடைந்துமேகவாகனனடைகாலை
மாயிரும்புவனத்துயிர்க்குயிராயவள்ளலார்மறைந்தனர்மாதோ (௨௪)

கடலெலாங்குடித்த முனிவரையுதித்த காலையூருருவிலா னளிப்ப, வுடலெலாங்கண்க ணிரப்பியவேந்த னொன்றலாத்துயர மிக்குற்றே, யடலெலாங்குறைந்தான் போன்றுளத்தச்சமடுப்பவோர்விதந்துணிந்தவிர்பூ, மடலெலாங்குடிகொள் கருங்குழற்செவ்வாய் வாணுதற்பிராட்டியைத்துதித்தான். (௨௫)

துதித்தனுமெல்லா வுலகமுமீன்ற துடியிடைப்பொற்றொடி யுமையாள், கதித்தபேரருளிற்றோன்றினளாகக்கண்டவானவர்பிரான் மகிழ்ந்து, மதித்தபேரன்பிற்பூசனைபுரிந்து வணக்கமும்பஃறாஞ்செய்தே, யுதித்தபெற்கொழிப்பா யியக்கனுய்த்தோன்றி யொளித்தவற்றெரித்தியென்றிரந்தான். (உ௬)

நாரணன்முதலோர்நேடியுங்காணுநாயகன்யாவனெவ்விடத்தும்
பூரணப்பொருளாய்நிற்பவன்யாவன்புரமெரியூட்டினேன்யாவன்
காரணக்கடவுள்யாவன்மற்றெனக்குக்கணவனுகியபிரான்யாவ
னாரணமுணரான்யாவன்மற்றவனேயழகியவியக்கனுய்வந்தான். (உ௭)

நினைமுதல்வானோர்க்குறுசயமளித்துநிரப்பினேனவனவன்பாத
மினைவறவெண்ணீர்தருக்குமேற்கொண்டெரெய்தியவத்தருக்கவிப்பா
புனைதருமியக்கவடிவனுயீங்குப்போந்தனனவன்சரணடைமின் [ன்
வினைதபவென்றுகருணையினுரைத்துவிமலநாயகியுருமறைந்தாள்.

வேந்தனைமுதலோரச்சமுமகிழ்வுமேவினர்தருக்கெலாமிரித்தார்
சாந்தநீறுக்குஞ்சங்கரப்பிரானைசருவகாரணனெனத்தேர்ந்தா
ராய்ந்தமற்றவன்றுளடைந்தனரமரீராதலாலவன்பிரசாதம்
வாய்ந்தவைபவமாலாதியராலும்வகுப்பரிதெற்றைக்குமுணர்வீர். ()

அப்பிரசாதசின்னமாணந்தமவிர்சுரகேத்திரவங்கப்
பப்பியல்விகாரமந்தரத்தெழுதல்பரகாயப்பிரவேசஞ்செய்த [சல்
றப்பின்மெய்காட்டன்மறைத்தல்கல்லாநூறன்னையுந்தடையறப்பே
செப்புறுநிக்கிரகமனுக்கிரகஞ்சிலையாதிபேதமுற்பலவே. (௩0)

இத்தகுதெய்வச்சிவப்பிரசாதமிளமதிசூடியபெருமா
னுத்தமவுமையாளிவரனுக்கிரகமுற்றிடிற்கிடைப்பதாலமரீர்
மைத்தகார்மேனிமாயுவன்றன்னைமலருறைபென்னைநாடோறு
மொத்தபேரன்பிற்றியானஞ்செய்தாலுமுத்தமக்கதிமருவாதே. (௩௧)

ஆதலின்முத்திவிரும்பினேனையுமாழியங்காதலத்தனையுங்
காதலியாமற்பரசிவனடியேகருத்துறத்தியானிக்கவேண்டுஞ்
சாதலையடையாத்தன்பிரசாதஞ்சார்ந்தவன்பாலென்றும்பரமன்
மேதகுமூர்த்திசொரூபமாயான்மசொரூபமாய்விளங்கிவைகுவனுல்.

பரமவத்துவிதவிந்தஞானத்தாற்பகருமுத்தியுண்டாதல்
சரதமேதவஞ்சால்கௌதமன்றதிசிசாபத்தான்முன்செய்பாவத்தால்
வரமுறிவ்வருத்தந்தோன்றமாட்டாதுவளர்சிவசம்பந்தமான
புரவுசேர்விபூதிமுதலெவற்றினும்வந்தொன்றுறும்புகர்புரிவெறுப்பே.

பரமவத்துவிதசைவமெய்ஞ்ஞானிபாரளந்தவன்முதலோரால், வரமுறப்பூசைபுரிந்திடத்தக்கோன்மற்றவனுறைதருமிடத்தே, பாவுறுமுத்திகாத்துக்கொண்டிருக்கும்பரிந்தவன்பணிவிடைபுரிவோன், சரணமெப்போதுந்தலைமிசைத்தரிப்பேன்சமானமற்றவற்கெவருலகில்

இந்தவத்துவிதஞானத்திற்குலகத்தியைதருவாசனைபிரதி
பந்தகமாகுமஃதறத்தொலைத்துப்பார்புகழ்ந்தேத்துமத்துவித
சந்தமெய்ஞ்ஞானியாகுதல்வேண்டுந்தவத்தநேரெகொளத்தக்கவிது[ர்
மந்தணமுரைத்தேனென்றனன்பிரமன்மகிழ்ந்தனர்வானவர்முனிவ

நான்காவது

சாமசாகோபநிடததாற்பரியமுரைத்த வத்தியாய முற்றிற்று.

அத்தியாயம் ௪-க்குத் திருவிருத்தம் எக.

ஐந்தாவது

# சாந்தோக்கியவுபநிடததாற்பரியமுரைத்த வத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

ஆடியகூத்தனவிர்சிறுமலர்த்தாளகத்திடைப்பதித்தமாதவத்தீர்
பாடியசீர்த்திப்பங்கயக்கடவுள்பண்ணவர்தெளிதரவுரைத்த
நீடியபெருமைச்சாமசாகோபநிடததாற்பரியஞ்சொற்றனம்பொய்
சாடியசாந்தோக்கியவுபநிடததாற்பரியமுமெடுத்துரைப்பாம். (க)

கற்பகமாலைதுயறடம்புயத்துக்கடவுளீர்மந்தணமான
பொற்புறுமாதேசத்தையானுமக்குப்புகலுவல்கேண்மினென்றுன
வற்புறுமண்ணாதிகளினுலாக்கப்பட்டமண்பாண்டமுன்யாவு
மெற்பெறமண்ணாதிகளின்வேறன்றியெப்படியிருக்குமப்படியே. ()

காரியமெல்லாங்காரணத்தோடுகரைதருமபேதமாயிருக்கும்
காரியசத்தைகாரணசத்தைதனக்குவேருகாமையாலே
காரியஞ்சத்தாய்ப்பேதமுற்றிடுவதில்லையாற்கருத்துறவுணர்மின்
காரியல்கண்டன்றிருவடித்துணையேகண்ணியபுண்ணியவமரீர். (௩)

நரசிருங்காதிபோலச்சூனியமல்லாமையானவிலசத்துவத்திற்
பரவுறுவிசேடமிலாமையாலெடுத்துப்பகரக்காரியமசத்தாயும்
விரவுறுபேதப்படுவதின்றமரீர்விரித்தவித்தோடங்களிரண்டு
முராவினுண்டாமாதலிற்சதசத்தாயும்பேதப்படுதலின்றுணர்வீர். (௪)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

செப்புபேதாபேதமெம்மாத்திரமும்வரமாட்டாதுணர்வீர்
தப்பிலாதவிப்படியேசாற்றுமெல்லாக்காரியமு
மொப்பிலாதகாரணத்தோடபேதமாயுற்றிருந்தாலு
மெய்ப்பின்மர்யையாற்பேதமாகித்தோன்றுமிமையீரே. (டு

பேசுவிகாரமெல்லாம்பெயராற்பின்னமாகியிருந்தாலு
மாசிலாதபரமார்த்தமாகவவிரும்பிரமத்தோ
டேசிலம்பதமாகியேயிருக்கின்றனவண்டுழுதுழக்கி
வாசநறுந்தேனுண்டுவக்குமாலைத்தடந்தோளமரீரே. (சு)

சகத்துக்கொருகாரணமாகித்தயங்குமந்தப்பிரமங்கற்
பகத்தண்டொடையன்முடிவேய்ந்துபாரோர்புகழப்படும்போகஞ்
சுகத்தின்மருவும்விண்ணவர்காள்சொல்லாநிற்கும்பின்னமுமன்
றுகத்தல்செய்யும்பின்றுபின்னமுமன்றென்றேயிருக்கும். (எ)

(மேற்படிவேறு.)

மருவுமசேதனமாயமண்ணாதிகட்குக்குலால
னொருவிலபேட்சையெவ்வாறுவேண்டியிருக்குமுரைத்த
திருகில்குலாலற்கசித்தூருபமட்சேருமபேட்சை
யிருநிலத்தெவ்வாறுவேண்டியிருக்குமவ்வாறேயிமையீர். (அ)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

நிகரில்லாவேகமாய்ச்சுத்தசைதன்னியமாய்நெடுநாளுநிலவியிருக்கின்றபடியாலும், பகர்நிமித்தவுபாதானகாரணத்துவங்கள் பயில்வேதப்பிரசித்தமாயிருத்தலாலு, மிகுபிரமத்திற்குவேறொருவத்துவபேட்சைவேண்டியதின்றப்பிரமம்பிரதிநிசித்தத், தருகுணத்திரையமுளதன்மாயையொடொன்றாயேசார்ந்துசிருட்டித்தொழிலாதிகள்பலவுஞ்செய்யும். (கூ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அறைதருசத்தாணவித்தாதிகளாலங்குரோற்பத்தியாதலாலே
யிறையுறுபல்லுலகுங்காரணரூபமாச்சத்தாயேயிருந்து
நிறைதரவுற்பத்தியாமாதலினாற்கதிர்சமழ்ப்பநிலவும்வானீர்
குறைவுறுகுணியவாதியுரைக்குமதநியாயமன்றுகுறிக்கொள்வீரே. ()

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

ஆதியந்தமில்லாமற்சத்தாகியிருக்குமப்பரம்பூருவகற்பப்பவஞ்சவாசனையா, லேதமில்சத்துவவிருத்தியோடுநணிகூடியிருக்கின்றதாகியேயனேகவிதசகத்து, நீதிகொள்சொரூபமாய்நானாகின்றேனெனிரம்பவெனுமிச்சையானெடுவெளிமுன்னாக, வோதவுறுபஞ்சபூதங்களையுஞ்சிருட்டிசெய்யுமாலுய்த்துணர்வீருத்தமவானோரே. (கக)

மருவுமப்பூதங்களிலொவ்வொன்றையிருகூறாவகுத்தவற்றிலேம்பாகங்களையெடுத்துக்கொண்டு, பெருகுறுமொவ்வொன்றினைநான்குகூறாக்கிப்பேணவற்றுண்மண்ணாற்பாகங்களைமுன்னெடுத்தே,யொருவின்முறைபூதங்களுற் பாகங்களினுமொவ்வொரைப்பாகத்தோடொவ்வொருபாகத்தைத், திருகறச்சேர்க்குந்தெரிவீர்சுரும்பருழுதுழக்கித்தேனருந்தியிசைபாடுஞ்செந்தொடையற்புயத்தீர். (கஉ)

